# வேதாந்த அகராதி

## A Dictionary of Vedantha in Tamil





சுவாமி ஆத்மானந்தா
நாராயணசாமி வேதாந்தமடம்
மானாமதுரை.

உ

# வேதாந்த அகராதி

## A Dictionary of Vedantha in Tamil




சுவாமி ஆத்மானந்தா
நாராயணசாமி வேதாந்த மடம்
மானாமதுரை.

முதற்பதிப்பு : 28-12-2003

பிரதிகள் : 1000

ஆசிரியர் : ஆத்மானந்தா.

வெளியீடு : 'குருவருள்' இல்லம்,
88, வெங்கடேஸ்வரா நகர்,
பிருந்தாவனம்,
மானாமதுரை - 630 606.
சிவகங்கை மாவட்டம்.



விலை : ரூ. 60/-

அச்சகம் : சத்தியஜோதி கம்ப்யூட்டர்
ஆப்செட் பிரிண்டர்,
37, எல்.ஐ.ஜி, காலனி,
கோல்ச்சா காம்ப்ளக்ஸ் எதிரில்,
அண்ணாநகர், மதுரை - 20.

உ

சிவமயம்

வானவ ரசமாந் தொடர்பினா லுலகோர்
வழுத்துறும் வன்னியைங் கரனை
வானவ ரதன மணியறு முகனை
மாசறு கொற்றவாளி றையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநற் றிருநெலை மாதை
வானவ ரதனா முத்திரா மேச
வள்ளலை வணங்கிவாழ்த் திடுவாம்.



# காணிக்கை



எனது குருநாதர்

ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக

சுவாமிகள்

நாராயணசாமி வேதாந்தமடம்

மேலரதவீதி, மானாமதுரை - 630 606.

சிவகங்கை மாவட்டம்.



ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப சுவாமிகள்

மடாதிபதி

கோவிலூர் ஆதீனம்

# அணிந்துரை

தமிழில் வேதாந்தம் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் முதன் முதலாக எழுந்தது கோவிலூர் மடாலயம். வேதாந்தம் கற்பிப்பதற்காகப் பதினாறு பாட நூல்களை உருவாக்கி முறையான பாடத்திட்டத்துடன் பல்கலைக் கழகத்திற்கு நிகராகக் கற்பிக்கப்பட்டு வந்துள்ளது. ஏராளமான சாதுக்கள் இந்த மடாலயத்தில் தங்கி வேதாந்த சிரவணம் செய்து கோவிலூர் மரபினைப் பின்பற்றி வேதாந்த மடாலயங்களை உருவாக்கி நடத்தி வந்துள்ளனர்.

வேதாந்தம் தமிழில் செய்தோர் இருமொழிப்புலமையராக இருந்தமையால் மணிப்பிரவாள நடையில் வெளியிட்டனர். பல நூல்கள் கோவிலூர் மடாலய வெளியீடாக வெளிவந்துள்ளன. வடமொழி ஞானம் இன்றி, தமிழ் மட்டுமே உணர்ந்தார்க்கு இவற்றை எளிதில் கற்க இயலாத நிலை இருந்தது.

எனவே இது தொடர்பான பரியாயச் சொற்களுக்குக் கூடிய மட்டிலும் பொருள் உணரும் வகையில் எளிய நடையில் "**வேதாந்த அகராதி**" என்றொரு நூலை. நம் அருளாட்சியின் கீழ் நடந்து வரும் மானாமதுரை நாராயணசாமி மடாலயத்தைச் சார்ந்த சாதுஆத்மானந்தா அவர்கள் மிகச் சிறப்போடு வேதாந்தம் கற்போர்க்குக் கைவிளக்காக ஒரு நூலை ஆக்கி வெளியிட்டுள்ளார். இது ஒரு முதல் முயற்சி. பிற்காலத்தில் மேலும் விளக்கங்களோடு வெளிவர வேண்டும் என்பது எம்முடைய பேரவா. வேதாந்தம் கற்போர்க்குக் கை விளக்காக இந்த நூல் எழுதிய சுவாமி ஆத்மானந்தா அருள்மிகு திருநெல்லை உடனாய கொற்றவாளீசர் அருளாளும். எம் ஆதீனக் குருமுதல்வர் சீர் வளர் சீர் முத்துராமலிங்க ஆண்டவர் அருளாலும் பல்லாண்டு வாழ வாழ்த்தி ஆசீர்வதிக்கின்றோம்.

ஸ்ரீ. சற்குரு நாதர் துணை.

**சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள்**

மடாதிபதி.

கோவிலூர் மடாலயம்.

கோவிலூர். சிவகங்கை மாவட்டம்.



ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக சுவாமிகள்
நாராயணசாமி வேதாந்தமடம்
மானாமதுரை

# வாழ்த்துரை

ஸ்ரீ சுவாமி ஆத்மானந்தா அவர்கள் எங்கள் மடத்தின் இளைய பட்டம் ஆவார். அன்னார் அவர்கள் ஆழ்ந்த கல்விப் புலமையும், ஞானமும் உள்ளவர். பாடம் படிக்கும் பொழுதும், மற்ற சமயங்களிலும் அவரது நுண்ணிய உணர்வு ஞானத்தை நான் அறிந்து வியந்திருக்கின்றேன். அவர்கள் இந்த நூலை எழுதி வெளியிட இசைவு கேட்டார்கள். அடியேனும் ஆசீர்வதித்து ஊக்கம் கொடுத்தோம்.

இந்த நூல் வேதாந்த பாடம் கற்கின்ற, கற்க விழைகின்ற முமூட்சுகளுக்கு, (இறை உணர்வில் திளைத்து, சதா சச்சிதானந்த சொரூபமாய் விளங்க முயன்று கொண்டிருப்பவர்கள்) மிகவும் உதவியானது. இறை ஆர்வம் உள்ளவர்களும் இந்நூலுக்குப் பெரிதும் ஆதரவு தர வேண்டுகின்றேன்.

சோ. பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள்

தலைவர்

ஸ்ரீ நாராயணசாமி வேதாந்த மடம்

மானாமதுரை.

வேதாந்தத்திற்கு 'வீரசைவம்' அருளியுள்ள ஆன்மீகக் கொடை கண்டு நெகிழ்ந்தேன்

தெரியாதனவற்றைத் தெளியவைக்கும் எத்தனையோ அகராதிகள் ஆன்மீக உலகத்திலும். இலக்கிய உலகத்திலும். தமிழ்மொழியில் வெளியிடப்பட்டிருந்தாலும். உங்கள் கையில் தவழும் இந்த அகராதி தனிச்சிறப்புக்குரியது. தவத்திரு சுவாமி ஆத்மானந்தா அவர்களின் ஆழ்ந்த கல்விஞானமும். புலமைப் பொலிவும் மிளிர்கின்ற இவ்வரிய நூல் ஒவ்வொரு ஆன்மீகச் செல்வரின் கையிலும் இருக்க வேண்டிய சிறந்த சொத்து.

வேதாந்த நெறியில் இறைப்பேற்றை அனுபவிக்க விரும்பும் அன்பர்கள் நடந்து செல்லக் கூடிய அற்புதப் ப்பாட்டையை நமக்கு அமைத்துத் தந்திருக்கிறார் சுவாமிகள் அவர்கள். இது போன்ற பல ஞானதானத்தைத் தமிழ் உலகுக்கு வழங்க வேண்டுமென்றும் அவர்களின் ஆன்மீக ஆற்றல் நமக்கெல்லாம் பெரிதும் பயன்பட வேண்டுமென்றும் எல்லாம் வல்ல இட்டலிங்கப்பெருமானை இறைஞ்சுகின்றேன்.

அன்பன்

**ஆ. திருவாசகன்**

ஆசிரியர் வீரசைவ முரசு

7, காடம்பாடி அம்மன் கோயில் தெரு.

வளசரவாக்கம். சென்னை.

# அணிந்துரை

*சுவாமி ஆத்மானந்தா அவர்கள் இயற்றிய "வேதாந்த அகராதி" என்ற நூலைக் காணும் வாய்ப்பு கிட்டியது.*

வேதாந்த கலைச் சொற்கள் பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத மொழியில் உள்ளவை. அவற்றைத் தமிழாக்கம் செய்யும் போது, எளிய முறையில் சாதாரண சாதகர்களுக்கும் புரியும் படியாக அமைவது மிக்க அவசியம். மிகப் பழைய கிரந்தங்களில் தமிழாக்கம் செய்யும்போது சில சமயம் மனக்குழப்பம் ஏற்படுவது உண்டு. உதாரணமாக, 'தத் த்வம் அஸி' என்ற மஹா வாக்கியத்தில் உள்ள 'த்வம்' என்ற சொல் 'தொம் பதார்த்தம்' என்று வர்ணிக்கப்படும் போது, குழப்பம் ஏற்படுவது சகஜமே. ஏஷனை த்ரயம் - ஏடணை எனப்படும். அதற்கு விளக்கம் எளிதில் கிடைப்பதில்லை. எனவே அகர வரிசையில் வேதாந்த கலைச்சொற்களுக்கு விளக்கம் தரும் முறையில் இப்புத்தகம் அமைந்திருப்பது பாராட்டுக்குரியது. ஆன்மீக சாதகர்கள் இதைக் கண்ணுற்று பயன் பெற வாழ்த்துகின்றேன்.

**Dr. V. S. நரசிம்மன் Retd. Professor.**
விவேகானந்தா கல்லூரி.
திருவேடகம் மேற்கு, மதுரை.
இருப்பு சென்னை.

வேதாந்தத்திற்கு 'வீரசைவம்' அருளியுள்ள ஆன்மீகக் கொடை கண்டு நெகிழ்ந்தேன்.

தெரியாதனவற்றைத் தெளியவைக்கும் எத்தனையோ அகராதிகள் ஆன்மீக உலகத்திலும், இலக்கிய உலகத்திலும், தமிழ்மொழியில் வெளியிடப்பட்டிருந்தாலும், உங்கள் கையில் தவழும் இந்த அகராதி தனிச்சிறப்புக்குரியது. தவத்திரு சுவாமி ஆத்மானந்தா அவர்களின் ஆழ்ந்த கல்வி ஞானமும், புலமைப் பொலிவும் மிளிர்கின்ற இவ்வரிய நூல் ஒவ்வொரு ஆன்மீகச் செல்வரின் கையிலும் இருக்க வேண்டிய சிறந்த சொத்து.

வேதாந்த நெறியில் இறைப்பேற்றை அனுபவிக்க விரும்பும் அன்பர்கள் நடந்து செல்லக் கூடிய அற்புதப் பாட்டையை நமக்கு அமைத்துத் தந்திருக்கிறார் சுவாமிகள் அவர்கள். இது போன்ற பல ஞானதானத்தைத் தமிழ் உலகுக்கு வழங்க வேண்டுமென்றும் அவர்களின் ஆன்மீக ஆற்றல் நமக்கெல்லாம் பெரிதும் பயன்பட வேண்டுமென்றும் எல்லாம் வல்ல இட்டலிங்கப்பெருமானை இறைஞ்சுகின்றேன்.

அன்பன்

**ஆ. திருவாசகன்**

ஆசிரியர் வீரசைவ முரசு
7, காடம்பாடி அம்மன் கோயில் தெரு,
வளசரவாக்கம், சென்னை.

# அணிந்துரை

சுவாமி ஆத்மானந்தா அவர்கள் இயற்றிய "வேதாந்த அகராதி" என்ற நூலைக் காணும் வாய்ப்பு கிட்டியது.

வேதாந்த கலைச் சொற்கள் பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத மொழியில் உள்ளவை. அவற்றைத் தமிழாக்கம் செய்யும் போது, எளிய முறையில் சாதாரண சாதகர்களுக்கும் புரியும் படியாக அமைவது மிக்க அவசியம். மிகப் பழைய கிரந்தங்களில் தமிழாக்கம் செய்யும்போது சில சமயம் மனக்குழப்பம் ஏற்படுவது உண்டு. உதாரணமாக, 'தத் த்வம் அஸி' என்ற மஹா வாக்கியத்தில் உள்ள 'த்வம்' என்ற சொல் 'தொம் பதார்த்தம்' என்று வர்ணிக்கப்படும் போது, குழப்பம் ஏற்படுவது சகஜமே. ஏஷனை த்ரயம் - ஏடணை எனப்படும். அதற்கு விளக்கம் எளிதில் கிடைப்பதில்லை. எனவே அகர வரிசையில் வேதாந்த கலைச்சொற்களுக்கு விளக்கம் தரும் முறையில் இப்புத்தகம் அமைந்திருப்பது பாராட்டுக்குரியது. ஆன்மீக சாதகர்கள் இதைக் கண்ணுற்று பயன் பெற வாழ்த்துகின்றேன்.

**Dr. V. S. நரசிம்மன் Retd. Professor.**
விவேகானந்தா கல்லூரி,
திருவேடகம் மேற்கு, மதுரை.
இருப்பு சென்னை.

# அணிந்துரை

கண்ணெதிரே பூட்டி வைக்கப்பட்ட பிரம்மாண்டமான ஒரு மாளிகை. அதற்குண்டான சாவிக்கொத்து நம் கையில். எந்தப் பூட்டுக்கு எந்தச் சாவி என்பது தெரிந்தால் அன்றி மாளிகையைப் பயன்கொள்ள முடியாது!

வேதாந்த மாளிகையின் சாவிக்கொத்து இந்த நூல். இந்த எண்ணுள்ள பூட்டுக்கு இந்த எண்ணுள்ள சாவிதான் என்று அடையாளம் காட்டுவன இதில் உள்ள விளக்கங்கள்.

"ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என்று மணிவாசகர் இறை நிலையை வருணிப்பர்.

ஆழம், அகலம், கூர்மை என்று மூன்று கூறுபாடுகள்.

வேதாந்தத்தின் ஆழம், அகலம், கூர்மை என்ற மூன்றையும் புரிந்து கொண்டவர் சுவாமி ஆத்மானந்தா. இல்லாவிட்டால் இது போன்ற ஓர் அகராதி இயற்ற முடியுமா?

இவ்வகையில் இது போன்ற ஓர் நூல் தமிழில் அதிகம் இல்லை என்றே எண்ணுகிறேன்.

ஆத்மானந்தாவின் முயற்சி உயர்ச்சியானது. உச்சிமேல் கொண்டு மெச்சிப் புகழ்கிறேன்.

வேதாந்த அன்பர்கள் இதனைப் பயன் கொள்ள வேண்டுகிறேன்.

## வாழ்த்துப்பா

### வெண்பா

வசிக்க. நல்ல வழிகாட்ட. அன்போடு
நேசிக்க. ஞான நிலை ஏற்ற. - தேசிகனாம்
ஐயன் அருளாளன் **ஆத்மானந் தாதந்தார்**
தெய்வ விளக்கென்று தேர்.

அன்புடன்,

**கு.செ. இராமசாமி**

# ANANDASHRAM

November 13, 2003

**Lord of the universe papa**
**Beloved Swamiji Maharaj :**

**Om Sri Ram Jai Ram Jai Jai Ram!**
**Om Namo Narayanaya!**

We have seen the book VEDANTA AGARATHI (A Dictionary of Vedanta in Tamil) authored by you. We have just flipped through the pages of the book.

This is a very useful handbook for aspirants to understand the intricate and indepth meaning of the spiritual expressions. May all devotees make best use of this book.

Deepest love and pranams.

*Ever your Self*
***Swami Satchidananda***

**Sri Swami Atmananda**
Manamadurai

# என்னுரை

**பிர்மமே ஸத்யம் - அதுவே நித்யம்**
**அடியேன் ஆத்மானந்தாவின் அன்பான வணக்கங்கள்**

தேவரீர்.

தங்கள் கரங்களில் இருக்கும் இந்த நூல் என்னுடைய ஒரு சிறு முயற்சி. இந்த முயற்சி உண்டானதும், வளர்ந்ததும் நிறைவுற்றதும் குருகிருபை, ஈசுவரகிருபை, வேதகிருபை ஆகியவற்றினாலாம்.

வேதாந்தம், தத்துவம் என்பன ஆழமும், அகலமும் நிறைந்த கடலுக்கு நிகரானதாகும். ஆதியும், அந்தமும் இல்லாத இவைகளின் அடி முடியை அறிய முடியுமா! அல்லது அளவிடத்தான் முடியுமா?

வடமொழியிலும், தென்மொழியிலும் எண்ணற்ற நூல்கள் வழிகாட்டிகளாக உள்ளன. ஞானத்தை அடைய விரும்பும் முமூட்சு குரு கிருபையையும், வேத கிருபையையும் கண்டிப்பாகப் பெற வேண்டும். சிரவணத்திற்கும், மனனத்திற்கும் நூல்களின் துணையும் வேண்டும். அந்த நூல்களைக் கற்கும் பொழுது அதற்கு குருவின் விளக்கங்கள் சிறந்த வழிகாட்டுதலைத்தரும். அப்படிப்பட்ட வழிகாட்டுதலோடு சிறு குறிப்புகளும் உதவியாக இருக்கும்.

ஒரு காலத்தில் மூலமான வேத நூல்கள் பெரும்பாலும் வடமொழியில் இருந்தன. அவைகளுக்கு வடமொழியிலேயே பாஷ்யங்கள் (உரைகள்) எழுதப்பட்டன. பின்னர் தமிழில் மூல நூல்களை அடிப்படையாகக் கொண்டு பல தமிழ்நூல்களும் தோன்றின. அப்படித் தோன்றிய காலத்தில் வடமொழிக்கு இணையான வார்த்தைகள் வடமொழியின் சாயையிலேயே எழுதப்பட்டிருந்ததால் இன்றளவும் கூட பல தமிழ் வடிவிலான நூல்களில் தமிழில் எழுதப்பட்ட பல வார்த்தைகளுக்கு சரியான விளக்கங்கள் கண்டறிவது சற்று சிரமமாகவே உள்ளது. அப்படிக் கண்டறிந்தாலும் அவற்றை நினைவில் வைத்துக் கொள்ளவோ. வேண்டும் பொழுது நினைவு படுத்திப்பார்க்கும் பொழுது நினைவிற்கு வருவதோ. சிரமமாக இருந்து விடுவதும் உண்டு. என்னுடைய அனுபவத்திலும் மற்றும் அன்பர் பலரின் அனுபவத்திலும் இதைக்கண்டதால் இதைச் சற்றேனும் நிவர்த்தி செய்ய நான் முயற்சித்த பொழுது, இறை அருளால் **'வேதாந்த அகராதி'** என்ற இந்தச் சிறிய நூல் உருவாகும் எண்ணம் ஏற்பட்டது.

அடியேன் கோவிலூர் மரபிலான வேதாந்த பாட நுல்கள் பதினாறையும் எனது குருபிரான் ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமிகள்

அவர்களிடமிருந்து பாடம் கேட்கும் பொழுது பல குறிப்புகளை அவ்வப்பொழுது குறித்து வந்தேன். அந்தப் பதினாறு நூல்களின் பட்டியல் இந்நூலின் பிற்பகுதியில் இடம் ·பெற்றுள்ளது. இவைகளை ஆதார நூல்களாகக் கொண்டே அடியேன் இந்த அகராதியை அமைத்துள்ளேன். இதில் வரும் வார்த்தைகளும், அதற்கான விளக்கங்களும் கூட பெரும்பாலும் இந்த நூல்களிலிருந்தே கையாளப்பட்டுள்ளன. நிறைகள் இருப்பின் பாராட்டுங்கள். குறைகள் இருப்பின் சுட்டிக்காட்டுங்கள். சிரம் தாழ்த்தி ஏற்றுக் கொள்கிறேன். வேதாந்தம், தத்துவம், என்பது இந்தப் பதினாறு நூல்களோடு முடிந்து விடுவதில்லை. "கற்றது கைமண்ணளவு" என்பது பழமொழியன்றோ!

இந்த சிறு முயற்சியானது என்னுடைய குருவின் ஆசியாலும், வேதாந்த மடங்களின் மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞான தேசிக ஸ்வாமிகள், ஸ்ரீல்ஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள், மடாதிபதி அப்பர்சுவாமிகள் மடம் உளுந்தூர்பேட்டை அவர்கள், கோவிலூர் வேதாந்த மரபு அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபமாய் விளங்கிக் கொண்டிருக்கும் குரு முதல்வர் கோபால் சுவாமிகள் என்ற சச்சிதானந்த சுவாமிகள் ஆனந்தாஸ்ரமம், குமாரபாளையம் அவர்கள்,

வேதாந்த மடம் ஸ்ரீலஸ்ரீ மகா. கோவிந்தசாமி குமாரபாளையம் அவர்கள். காளையார்கோவில் கா. செ. மடாலயம் மடாதிபதி. ஸ்ரீலஸ்ரீ நாராயண ஞானதேசிக ஸ்வாமிகள், ஸ்ரீலஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள் பனையூர். சிறுமலை ஸ்ரீ ரமணாலயம் ஞான அனுபூதி சாசுவதானந்தா சுவாமிகள். திருப்பரங்குன்றம் ஞான பண்டித மடத்தின் மடாதிபதி திரு. முருகானந்த சுவாமி அவர்கள். அருட்கவி. கு.செ. இராமசாமி ஆகியோர்களின் அருளாசியினாலும், பேருதவியாலும் நிறைவிற்கு வந்துள்ளது.

இந்நூல் வெளிவர பெரிதும் உழைத்த எனது அன்பிற்குரிய அன்பர்கள் திரு. நாகராஜன். திரு. செல்வராஜ், திரு. எழில். தனது சத்தியஜோதி பிரிண்டர்ஸ் அச்சகத்தின் வாயிலாக வெளியீடு செய்த திரு. இரா. பாஸ்கரன் அவரது துணைவியார் திருமதி. பா.ராஜேஸ்வரி மற்றும் அச்சக ஊழியர்கள் ஆகியோர்களை நன்றியுடன் நினைவு கூறுகிறேன்.

முமூட்சுக்களும். மெய்யன்பர்களும் ஆத்மஞானத்தை விரும்பும் அன்பர்களும். தத்துவ வேதாந்த வித்தகர்களும் அடியேனுடைய இந்த நூலுக்கு ஆதரவு அளிக்கும்படி பணிவுடன் வேண்டுகிறேன். - ஓம் தத் ஸத் -

அன்பன்

**சுவாமி ஆத்மானந்தா**

ஸ்ரீலஸ்ரீ நாராயணசுவாமி வேதாந்த மடம்

மானாமதுரை. சிவகங்கை மாவட்டம்.

# அ

**அகண்டம்:** ஜீவேசுவரர் முதலிய பஞ்ச பேதங்கள் அல்லது சஜாதியாதி மூன்று பேதங்கள் இன்றியதனை அகண்டமென்பர். தேசகால வஸ்துக்களால் கண்டமற்றது அகண்டம்.

**அகங்காரக்கிரந்தி:** இது சம்சார பந்தமென்றும் சொல்லப்படும். ஆவரணத்தினால் மறைவுபட்ட ஜீவர்கள் இருபத்தொன்பது தத்துவங்களையும்(சூட்சம சரீரம் 20. தூலசரீரம் 6. பிரமம். அவித்தை. சீவன் 3) ஒருமைப்பாடாக நானென்று அபிமானிப்பர். இந்த அபிமானத்தையே அகங்காரக்கிரந்தியென்று கூறுவர்.

**அகர்ப்பம்:** பிரணவமாகிய ஓம்காரத்தின் உச்சாடணமின்றிய பிராணாயாமம்.

**அகணிதம்:** வினோதமான.

**அகர்த்தா அபோக்தா:** கர்மங்களைச் செய்பவனும் அல்ல. போகங்களைப் புசிப்பவனும் அல்ல.

**அங்கவைகுண்ணியம்:** பிராமண போஜனம், தர்ப்பணாதிகளின் குறைவு.

**அங்கசிரவணம்:** ஆறு லிங்கங்களோடு (உபக்கிரமம், உபசம்மாரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம்) வேதாந்த சிரவணம் செய்தல் அங்க சிரவணமாகும்.

**அங்கிசிரவணம்:** அபரோட்ச ஞானத்தின் உற்பத்தி நிமித்தம் குருமுக வாயிலாகத் தத்துவமசி முதலிய மஹா வாக்கியங்களினது அர்த்தத்தின் உபதேச வடிவ அங்கி
(சாத்திய) சிரவணம் செய்வதாகும்.

**அங்குரம்:** முளைவிட்டிருக்கும் வித்து . சிறு கன்று, மரக்கன்று.

**அஞ்ஞானம்:** அறியாமை என்ற பொருளைச் சாதாரணமாகத் தருவது. இருட்டு, மூடம், என்றும் சொல்லப்படுவது சுழுத்தி நிலையில் மூல அஞ்ஞானமாக இருப்பது. சாதகன் முதலில் களையவேண்டியது அஞ்ஞானம். இது அநீர்வசணியம். மாயை, அவித்தை, பிரகிருதி, பிரதானம் சக்தி,அவ்வியக்தம்,அட்சரம், மித்தை என்றும் வழங்கப்படுகிறது. தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நிவர்த்தியாகிறது. தன்னிடத்தில் கற்பிக்கப்பட்ட சிதாபாசனையும் அவன் விவகாரத்தையும். தன்னுடைய சுபாவமாக என்னுகிற மயக்கமே அஞ்ஞானம். தனக்கு ஒரு காலும் சம்சாரமில்லை. சம்சாரமும் சம்சாரியும் கற்பிதமென்று அறிகிற விவேகமே அஞ்ஞானத்தை

தள்ளுகிற உபாயமாகும்.

**அஞ்சனதிருஷ்டாந்தம்:** 'மை' யின் உவமை.

**அஞ்ஞானகாரியம்:** தேகாதிப் பிரபஞ்சம் அனைத்தும் அஞ்ஞான காரியம்.

**அஞ்ஞான க்ஷயம்:** அஞ்ஞானம் அழிந்து போகுதல்.

**அனுபவப்பிரமாணம்:** ஞானத்தின் பின் பிரபந்தத்தின்முக்காலத்திய இன்மை இல்லாதது. ஞானிகளுக்கு பிரத்தியட்சமாவதால் அது ஜகத்மித்தை என்பதற்கு அனுபவப்பிரமாணமாம்.

**ஐதிகப் பிரமாணம்** : பரம்பரையாக உலகத்தில் ஜகத்து மித்தையென்று சொல்லிக்கொள்ளுதலாகும்.

**அட்டமா சித்திகள்:** அனிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம்,ஈசத்துவம், வசித்துவம்.

**அட்சய** : குறைவில்லாதது, அட்சயபாத்திரம்.

**அட்சரம்** : நாசமில்லாதது.

**அத்வைதம்:** இரண்டற்றது. ஏகம்., ஒன்று, சசாதீய. விசாதீய. சுவகத.பேதமாயிருப்பதுவே அத்வைதம்.

**அத்தியவசாயம்:** நிச்சயம்.

**அத்தியந்தாபாவம்:** முழுதுமின்மை, மூன்று காலத்திலுமில்லாமை.

**அத்தியாத்மம்:** ஞானேந்திரியங்கள் 5. கன்மேந்திரியங்கள் 5, அந்தக்கரணங்கள் 4, (உள்ளம் நீங்கலாக) ஆக இந்தப் பதினான்கும் அத்தியாத்மம்.

**அத்தியாரோபம்:** ஒரு பொருளில் (வஸ்துவில்) பொருளல்லாததை (அவ்வஸ்துவை) கூறுதல் அத்தியாரோபம் எனப்படும்.

**அத்தியாசம்:** பிராந்தி, மயக்கத்திற்கு ஏது.

**அத்தியந்தநிவர்த்தி:** மித்தியாத் தன்மையினையும், மித்தியாத் தன்மை நிச்சயித்தினையும் அல்லது மூன்று காலத்து அபாவத்தினையும், மூன்று காலத்தபாவ நிச்சயித்தினையும் அத்தியந்த நிவர்த்தி என்பர். இதனையே பாதமென்றும் கூறுவர்.

**அத்தியஸ்தம்:** எது அஞ்ஞான காலத்தில் தோற்றுகின்றதோ, ஞானகாலத்தில் தோற்றுகிற தில்லையோ அதனை அத்தியஸ்தம் என்பர்.

இதனையே கற்பித விசேஷ அம்சமென்றும் கூறுவர்.

**அத்தியாசத்தின் அவதி :** புத்திரர் முதலியோரிடத்திலுள்ள ஆத்ம பிராந்தி அத்தியாசத்தின் அவதியாம்.

**அத்தியாசத்தின் உபாதான காரணம் :** அதிஷ்டானத்தின் விசேஷ வடிவ அஞ்ஞானம் அத்தியாசத்திற்கு உபாதான காரணமாம்.

**அத்தியாசத்தின் சொரூபம் :** அஞ்ஞானம். அகங்காரம், அந்தக்கரணம் அதன் தர்மம், இந்திரியம் அதனின் தர்மம், தேகம், அதனின் தர்மம் என்னும் இவை முதலிய அநாத்மாவுக்கும் அவற்றை பிரகாசிக்கும் ஆத்மாவுக்கும் காய்ச்சிய இரும்புத்துண்டில் இரும்பிற்கும் அக்கினிக்கும் உள்ள தாதாத்மியம் போலத் தாதாத்மியமுண்டு. அதுவே அத்தியாசத்தின் சொரூபமாம்.

**அத்தியாசத்தின் நிமித்த காரணம் :** அதிஷ்டானத்தின் இதந்தையும், சத்தா மயமுமான சாமானிய வடிவ ஞானமென்னும் இவ்வைந்தும் அத்தியாசத்தின் நிமித்த காரணங்களாகும்.

**அத்தியாசத்தின் பலம் :** ஜனனம், மரணம் முதலிய சம்சாரம், அத்தியாசத்தின் பலமாம்.

**அத்தியாத்மவித்தை :** சுரோத்திரியரும்.

பிரம்மநிஷ்டருமாகிய குருவின் மூலமாக வேதாந்த சாஸ்திரங்களை விதியோடு கிரகித்தல்.

**அத்தியந்தப்பிரளயம்:** முத்திபெறுவது.

**அந்தரங்கசாதனங்கள்:** எட்டுவிதமானது 1. விவேகம், 2. வைராக்கியம், 3. சமாதிஷட்க சம்பத்தி, 4. முமூட்சுத்துவம், 5. சிரவணம், 6. மனனம், 7. நிதித்தியாசனம், 8. தற்பதார்த்த, துவம்பதார்த்த சோதனை.

**அந்தர்பாவம்:** உள்ளடக்கம்.

**அந்தம்:** விஷயேந்திரியங்களின் வியோகம், முடிவு.

**அந்தர்யாமி:** பரமாத்மா மாயையுடன் கூடுகின்றபொழுது அந்தர்யாமியாம்.

**அந்தக்கரணவிருத்தி:** அந்தக்கரணம் சாந்த விருத்தி என்றும், கோர விருத்தி என்றும், மூட விருத்தி என்றும், மூன்று விதமாய் இருக்கும். வைராக்கியம், பொறுமை, உதார முதலியவை சாந்த விருத்தி, காமக் குரோதலோப முதலானவை கோரவிருத்தி, மயக்கம், பயம், கலக்கம் முதலானவை மூட விருத்தி.

**அந்தர்கதம்:** உள்ளடங்கியிருத்தல்.

**அந்நியோந்நியாபாவம்:** ஒன்றில் ஒன்று இல்லாமையே அந்நியோந்நியாபாவமென்பர். இதைப் பேதமென்றும் கூறுவர். (உ-ம்.) கடத்தில் படத்தின் அபாவமும், படத்தில் கடத்தின் அபாவமும் அவற்றின் அந்நியோந்நியாபாவமாம்.

**அந்தராயம்:** மறைப்பு.

**அந்வயம்:** அது இருந்தால், அது இருத்தல் என்பதாம். மாலையில் நூலினைப் போல அனுகூதத்தன்மையினை அந்வயமென்பர்.

**அந்தக்கரணத்தின் விஷயங்கள்:** சங்கற்ப விகற்பம், நிச்சயம், சிந்தனம், அகம்பாவம் என்னும் நான்கும் அந்தக்கரணத்தின் விஷயங்களாம்.

**அந்தர்யாமியின் லீலாவிக்கிரகம்:** பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பரந்தாமன் ஸ்ரீ நாராயணன் என்னும் பெயர் உள்ள விக்கிரகமாகும்.

**அந்நியோந்நியாத்தியாசம்:** பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் அத்தியாசத்தினை அந்நியோந்நியாத்தியாசம் என்பர்.

**அந்நியதராத்தியாசம்:** சம்பந்தியின் அத்தியாசத்தையே அந்நியதராத்தியாசமென்றும்

சொரூபத்தியாசமென்றும் சொல்லப்படும்.

**அந்நமயகோஷத்திற்கு பக்ஷி உருவகம்:** அன்னமயகோஷமாகிய பக்ஷிக்கு (பிரசித்தமியுள்ளதே) சிரசாம். கிழக்குத் திசைக்கு எதிர்முகமாகிய புருஷனுடையது இது ( வலது புஜம் ) தக்ஷின ( வலது) பக்ஷமாம் (சிறகாம்) இது (இடதுபுஜம்) உத்தர (இடது) பக்ஷமாம். இது (மத்திய தேகத்தின் பாகம்) அங்கங்களின் ஆத்மாவா (சொரூபமாம்). இது (நாபிக்குக் கீழ் அஸ்தம்) புச்ச (வால்) வடிவப் பிரதிஷ்டையாம். (ஆதாரமாம்).

**அந்நமயகோசம்:** ஸ்தூல தேகமே அந்நமயகோசமெனப்படும்.

**அந்தகாரம்:** இருட்டு, இருள், அஞ்ஞானம்.

**அப்பிரதீதி:** தோற்றமின்மை.

**அப்பிரமை:** பிரமையின் வேறான ஞானத்தினை அப்பிரமையென்பர்.

**அப்பிரமேயம்:** பிரமாணத்திற்கு விஷயமாகாததனை அப்பிரமேயமென்பர்.

**அப்பியாசம்:** அடிக்கடி சொல்லுதல்.

**அர்ப்பணம்:** 1. குருவின் ஆணையைப் பரிபாலித்தல் சரீர அர்ப்பணம்.
2. குருவினிடத்து ஈசுவர பாவமும் அவரது வடிவத்தைத் தியானித்தலும் மன அர்ப்பணம்.
3. குருவை நிந்தியாது துதித்தல் வாக்கின் அர்ப்பணம்.
4. சிறந்த குருவை அடையும் பொருட்டு சர்வ தனத்தையும் விடல் தன அர்ப்பணம்.
5. குருவிற்கு தன் உடல். பொருள். ஆவி அனைத்தையும் ஒப்படைத்தல். இவையே ஆத்தம் அங்கம், தானம். தவம். சற்பாவம் எனப்படும்.

**அர்த்தரதன்:** ஒரு வீரனைவிட குறைந்த பலமுடையவன்.

**அர்த்தாபத்திப்பிரமானம்:** போஜனமின்றிப் புஷ்டி சம்பவியாது என்னும் ஞானம் அர்த்தா பத்திப்பிரமானம்.

**அர்த்தாத்தியாசம்:** பிராந்தி ஞானத்தின் விஷயத்தினை அர்த்தாத்தியாசம் என்பர். பழுதையில் பாம்பு தோன்றுதல்.

**அர்த்தவாதம்:** பேத ஞானத்தின் நிந்தையும் அபேத ஞானத்தின் ஸ்துதியும் அர்த்தவாதமாகும்.

**அர்த்தாபத்திப்பிரமை:** போஜனமின்றி புஷ்டி சம்பதியாது என்னும் ஞானத்தாலுண்டாகும் இராத்திரி

போஜனத்தின் கற்பனை எதுவோ அது அர்த்தாபத்திப்பிரமையாகும்.

**அர்த்தார்த்தி:** காமிய லாபங்களுக்காக, இக லோக சுகங்களை விரும்பி யாகம், ஹோமம் முதலியவற்றைச் செய்பவன். பொன், பொருளுக்காக இறைவனை நினைப்பவன்.

**அர்த்தம்:** இந்த உலகத்திலும் பரலோகத்திலும் உள்ள போகத்திற்கு சாதனங்களாகிய திரவியம் முதலியன. தர்மங்களால் உண்டாகின்ற தனாதி பதார்த்தங்களும், சுவர்க்காதி உலகங்களும்.

**அவ்வியாப்தி:** இலட்சியத்தின் ஏகதேசத்தில் இலட்சணமிருத்தல்.

**அன்வயவெதிரேகம்:** கர்மம் உண்டானால் சரீரம் உண்டு என்பது அன்வயம். கர்மம் இல்லாவிட்டால் சரீரம் இல்லை என்பது வெதிரேகம். தானாக வழங்கின ஸ்தூல சரீரம் தோற்றாத சொப்பன அவஸ்தையிலே தான் தோற்றுகிறதே அன்வயம். தான் தோற்றுகினும் ஸ்தூலசரீரம் தோற்றாதது வெதிரேகம். சூட்சுமசரீரம் தோற்றாத சுழுத்தி அவஸ்தையிலே தான் தோற்றுகிறதே அன்வயம். தான் தோற்றுகினும் லிங்க சரீரம் தோற்றாததே வெதிரேகம். சுழுத்தி தோற்றாத சமாதியிலே தான் தோற்றுகிறதே அன்வயம். தான் தோற்றுகினும் சுழுத்தி தோற்றாததே வெதிரேகம். இந்த இரண்டும் சேர்ந்ததே அன்வயவெதிரேகம்.

**அவ்வியத்தம்:** கற்பனைகள். அவ்வியாக்கிருதமென்னும் நாமமுடைய மாயாவிசிட்டப்பிரம்மம். நாம ரூபங்களாக வெளிப்படாமையினால் அவ்வியத்தம்.

**அவ்வியாக்கிருதம்:** மாயை.

**அவ்வியவகிதம்:** அந்தராய (மறைப்பு) மின்றியது.

**அவ்வியயம்:** தேய்தலும் வளர்தலுமின்றியது அவ்வியயமாகும்.

**அவ்வியயன்:** நாசமில்லாதவன்.

**அவ்வியபிசாரி:** மாற்றமில்லாததது. பிறழ்ச்சி இல்லாதது.

**அஷ்கிரியம்:** கிரியையின்றியதனை அஷ்கிரியமென்றும், நிஷ்கிரியமென்றும் கூறுவர்.

**அண்டஜம்:** முட்டையிலிருந்து உற்பத்தியாகின்றவை..

**அம்சம்:** வைராக்கியத்தின் தீவிர தரமானது. அம்சம் எனப்படும். இது தீவிர துறவாகும். இந்தத்துறவு பூண்டவனுக்கு சத்தியலோகத்தில் முக்தி உண்டாகும்.

**அசத்து:** சொரூபமின்றியது, சூனியத்தை அசத்தென்பர்.

**அசம்பாவம்:** இலட்சியத்தை விட்டு அலட்சியத்திலேயே இலட்சணமிருத்தலை அசம்பாவமென்பர். இலக்கியம் முழுதும் இல்லாமை.

**அசாங்கம்:** சம்பந்தமில்லாமை.

**அசத்துவாபாதகம்:** நாஸ்தி(இல்லை) என்னும் விவகாரத்திற்கு ஏதுவான அசங்கத்தன்மையைச் சம்பாதிக்கும் ஆவரணம்.

**அசத்லட்சணம்:** அவ்வியாப்தி, அதிவியாப்தி அசம்பாவம் என்னும் மூன்று தோசங்களுள் ஓர் தோசத்தோடு கூடிய இலட்சணத்தினை அசத்லட்சணம் (தீய இலட்சணம்) என்பர்.

**அசம்பாவனை:** இது பொருந்தாது என்னும் உணர்ச்சி.

**அசரம்:** சலனமின்றி சிரித்தல்.

**அசலம்:** அசையாமல் இருக்கும் மலை அருணாசலம். திருவண்ணாமலை.

**அசத்தியம்:** யாதொரு தர்மமானது உபாதியினால் பண்ணப்படுகிறதோ அது அசத்தியமாம்.

**அசத்தியாதி:** ஆத்மா இல்லையென்று சொல்லுபவன்.

**அசம்சத்தி:** எல்லாம் பொய்யாகத் தோற்றுதல். மித்தை.

**அசாஸ்திரியம்:** சாஸ்திரத்தை கடந்து பிரபஞ்சத்தை பிரமாணமாக எண்ணி அந்தக்கட்டின்படியே நிர்ணயிக்கின்ற அந்தக்கரண பிரபஞ்சம் இதில் காரியபந்தம் நடக்கிற காமக்குரோதாதிப் பிரபஞ்சம் தீவிரம் என்றும் சொல்லப்படும். பிரவிருத்தியற்றுப் பிரபஞ்சத்தைப் பற்றி குறித்துச் சங்கற்பிக்கிற மனோராச்சியப் பிரபஞ்சமெல்லாம் மந்தமென்று சொல்லப்படும்.

**அசாதாரணகாரணம்:** யாதேனும் ஓர் காரியத்தின் காரணத்தினை அசாதாரண காரணமென்பர். இத்தன்மையினை கட முதலியவற்றின் காரணமாகிய கபால முதலியனவாம்.

**அசாதாரணதருமம்:** ஒன்றிற்கே உரித்தானது. (அலை. நாடி. கோடு. கொண்டை உடையது "ஆ").

**அசாரநிவர்த்தி:** சாரமற்ற நீக்கம். நிவர்த்தியினால் பிரயோசனமற்றது.

**அசிரத்தை:** விசுவாசமில்லாமை

**அசித்து :** ஜடம்.

**அசுக்ல கிருஷ்ணகர்மம் :** சகாம புண்ணியம், பாவம் இவ்விரண்டினும் விலட்சணமான நிஷ்காம புண்ணியம். அசுக்ல கிருஷ்ண கர்மம்.

**அடர்:** அடர்த்தி, நெருங்கிய.

**அதம தமப்பிராரத்தம்:** கீழானதிலும் கீழானது. தாழ்ந்ததிலும் தாழ்வானது, குறைந்ததிலும் குறைவானது.

**அதம தரப்பிராரத்தம்:** முதலில் நிவருத்திக்கு ஏதுவாயும் பின் பிரவிருத்திக்கு ஏதவாயும் உள்ள பிராரத்தம் அதம தரமாகும்.

**அதிக்கிரமணம்:** தனக்கும் மீறிச் செயல்படுதல். அதிக செயல்பாடு.

**அதிதெய்வம்:** திசை, வாயு, சூரியன், வர்ணன், அக்கினி குமாரர், ( ஞானேந்திரிய தேவதைகள் ) அக்கினி, இந்திரியன், குபேரன், பிரஜாபதி, மிருத்தியு, (கர்மேந்திரியங்களின் தேவதைகள்) சந்திரன், பிரம்மா, வாசுதேவன், ருத்ரன் (அந்தக்கரணத்தின் தேவதைகள்) இப்பதினான்கு தேவதைகளும் அதிதெய்வம்.

**அதிபூதம்:** வசனம், ஆதனம், கமனம், ரதி, மலநீக்கம் (கர்மேந்திரியங்களின் விஷயம்).

**அதீதம்:** அதிரிசயமாயும், சுயசித்தாயிமிருத்தலால் வாக்கிற்கும் மனதிற்கும் விசயமாகாமை அதீதமாம்.

**அதிரதன்:** தான் ஒருவனாகவே அளவிறந்த சூர-வீரர்களோடு யுத்தம் செய்பவன் சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றவன்.

**அதிவியாப்தி:** இலட்சியத்தில் முழுதும் வியாபித்து இலட்சியமில்லாததின் கண்ணும் இலட்சணமிருத்தலை அதிவியாப்தி என்பர்.

**அதிஷ்டானம்:** விவர்த்த வடிவ காரியத்தின் காரணத்தினை அதிஷ்டானம் என்பர். இதனையே உபாதானமென்பர்.

**அதிஷ்டானத்தின் விசேஷரூபம்**

திருஷ்டாந்தத்தில் இவை சாக்கிர பதார்த்தங்கள். இது ரஜ்ஜு, இது சுத்தி என்பன அதிஷ்டானத்தின் விசேஷ வடிவமாகும். அதிஷ்டானத்தின் சாமானிய வடிவம், எதன் அப்பிரதீதி (தோற்றத்தினால்) யினால் அத்தியாசமுண்டாகாது. நிவர்த்தியாகின்றதோ அது அதிஷ்டானத்தின் விசேஷரூபமெனப்படும். இதனையே அத்தியாசத்தின் அதிஷ்டானமென்றும் கூறுவர்.

**அதிசயம்:** ஒரு காலத்தில் இருந்து ஒரு காலத்தில் இல்லாமல் போவது அதிசயம்.

**அதிஷ்டானத்தின் சாமானிய வடிவம்:** எதன் பிரதீதியினால் அத்தியாசமுண்டாகிறதோ, எதன் அப்பிரதீதியினால் அத்தியாசமுண்டாகிறதில்லையோ பிராந்தி காலத்தில் "இது சர்ப்பம்" என்று ஆரோபிக்கப்பட்ட வஸ்துவுடன் எது தோற்றுகின்றதோ அது அதிஷ்டானத்தின் சாமானிய வடிவமாம். இதனை அத்தியாசத்தின் ஆதாரமென்றும் கூறுவர்.

**அநந்தம்:** தேச காலவஸ்துக்களாகிய அந்தமின்றியதனை பரிச்சேதமின்றியதனை அநந்தமென்பர். இதனையே அபரிச்சின்னம், பூமா, வியாபகம், விபு என்றும் கூறுவர்.

**அநாமயம்:** நோயற்ற தன்மை .

**அநர்த்தம்:** அஞ்ஞானத்தையும் அதன் காரியத்தையும் அநர்த்தமென்பர். இதனையே பந்தமென்றும் துக்கமென்றும் கூறுவர்.

**அநந்நியம்:** பகவான் வாசுதேவனைத் தவிர வேறொரு தெய்வத்திடம் பற்றின்மை.

**அந்நியசமாதி ரூபயோகம் :** சாஸ்திரங்களில் ஏகாக்கிரபக்தி.

**அநாதிசித்த அஞ்ஞானம்:** அக்கினியிற் சூடு போலவும். சலத்திற் சயித்தியம் (குளிர்ச்சி) போலவும், பிரம்மத்தினிடத்திலே சீவன். சகத்து ஈசுவரனை உண்டாக்குகிற மூலப்பிரகிருதியே அநாதிசித்த அஞ்ஞானமாகும்.

**அநாதி:** உற்பத்தியில்லாதது. அஞ்ஞானம் அநாதியாம்.

**அநிர்வசணியக்கியாதி:** அத்தியாசவடிவ சொப்பனப்பிரபஞ்ச முதலியவற்றின் பிரதீதியும் சொல்லுதலுமாகிய வியவகாரம் எதுவோ அது அநிர்வசணியக்கியாதி.

**அநிர்வசணியம்:**

சத்தசத்திற்கு விலட்சணமாயிருத்தலால் (பாதிக்கத்தக்க சொரூபமுடையாதிருத்தலால்) அஞ்ஞானம் அநிர்வசனியமாம். அஞ்ஞானத்திற்கு உற்பத்தியில்லாததால் அது அநாதியாம். மித்தை.

**அநிர்வசனீயை:**

சத்தசத்து விலட்சணமாயிருத்தலால் பாதயோகிய சொரூபமுடையது.

**அநிர்வசனியபாவரூபம்:**

அநிர்வசனியமாயிருந்து எது பாவரூபமாயிருக்கிறதோ அது அநிர்வசனியபாவரூபமாம்.

**அநுபந்தம்:** அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜனம் இவைகளே அநுபந்தமெனப்படும்.

**அநுவதித்தல்:** முன்னர் சொல்லிய பொருளை பின்னும் சொல்லுதல்.

**அநுராகம்:** தொடர்ந்த விருப்பம்.

**அநுமதிப்பிரமை:** லிங்கத்தின் ஞானத்தாலுண்டாகும் ஞானம் அநுமதிப்பிரமையாகும். புகை தெரிகின்ற மலையில் பிரத்தியட்ச ஞானத்தால் இம்மலை அக்கினியுடையது என்னும் நிச்சயமாகிய பரோட்ச ஞானமுண்டாகிறது. புகையின் ஞானம் அநுமானப் பிரமாணம். அதனாலுண்டாகும் அக்கினியின் ஞானம் அநுமதிப்பிரமையாம்.

**அநுபவம்:** ஸ்மிருதியின் வேறான ஞானத்தினை அநுபவமென்பர்.

**அநுபலப்திப்பிரமாணம்:** பிரபஞ்சத்தினது பாரமார்த்திக அபாவத்தை நிச்சயிக்கும் விசாரம் அல்லது ஞான பரமார்த்த சத்தையினால் பிரபஞ்சத்தின் அப்பிரதீதி வடிவம் அநுபலப்திப்பிரமாணமாம்.

**அநுமானப்பிரமாணம்:** பிரபஞ்சம் மித்தையாம். திருசியமாயிருத்தலின் சொப்பன முதலியவற்றிற்போல என்பது அநுமானப்பிரமானமாம்.

**அநுபவப்பிரமாணம்:** ஞானத்தின் பின் பிரபஞ்சத்தின் முக்காலத்தைய இன்மை வித்வான்களது பிரத்தியட்ச அநுபவத்திற்குக் கோசரமாம். இதுவே அநுபவப்பிரமாணம் அல்லது பிரத்தியட்ச பிரமாணமாம்.

**அபரமசுத்தி:** நிஷ்காம கர்ம அநுஷ்டானத்தால் உண்டாக்கப்பட்ட சுத்தியானது அபரம சுத்தியாகும்.

**அபரவித்தை:** நான்கு வேதங்களும், சிஷை, கற்பம், வியாகரணம், நிருக்தம், சந்தசு, ஜோதிடம் (ஆறங்கங்கள்) இதிகாசங்கள் ஆகியன அபரவித்தையாம்.

**அபரோட்ச ஞானம்:** சகல சந்தேகங்களும் நீங்கி அத்துவித பிரம்மம் தானாகுதல். பிரம்மமே நான் என்கின்ற திட ஞானமே அபரோட்ச ஞானமாம்.

**அபக்ஷயம்:** குறைவு, நாசமாகுதல்.

**அபவாதம்:** அதிஷ்டானம் மிஞ்சுதலே அபவாதமாகும்.

**அபரோட்ச ஞானத்தின் இலட்சணம்:** பிரமா'தா சேதனத்திற்கு விசயசேதனத்தோடு விருத்தி வாயிலாகவாவது அல்லது நேராகவாவது உண்டாகும்

அபேதமே அபரோட்ச ஞானத்தின் இலட்சணமாம்.

**அபரோட்ச பாதம்:** நான் பிரம்மமாயிருக்கிறேன் என்னும் திட நிச்சயமாகிய அபரோட்ச ஞானம் உண்டானபின்னர் எந்த அநாத்மாவின் பாதமுண்டாகிறதோ அது அபரோட்ச அனுபவத்தினால் ஆவதால் அபரோட்ச பாதமாம்.

**அபானாபாதகம்:** தோற்றவில்லை (நபாதி) என்னும் வியவகாரத்திற்கு ஏது.

**அபாரம்:** எதனால் பிரமத்தில் ஒரு வஸ்துவினோடும் பேதமில்லையோ, அதனால் பிரமத்திற்கு ஒரு வஸ்துவினாலும் அந்தமில்லை. இவற்றால் பரப்பிரம்மம் தேச கால வஸ்துக்களாலாகிய அந்தமில்லாததாம். ஆதலின் அபாரமாம்.

**அபாவம்:** இல்லையென்னும் தோற்றத்திற்கு விசயம். இது ஐந்து வகையாகும்.
1. பிராகபாவம். 2. பிரத்துவம்சாபாவம், 3. அந்நியோந்நியாபாவம், 4. அந்தியந்தாபாவம், 5. சாமயிகாபாவம்.

**அபின்னமான:** வேறானது, இல்லாததான.

**அபிவியக்தி:** பிரத்தியட்ச யோக்கியதை.

**அபிவியஞ்சகம்:** பிரகாசம்.

**அபிமானம்:** விருப்பம். ஆசை. தேகத்தின் மீதுள்ள பற்று. தேகாதியபிமானம்.

**அபூர்வதை:** சுருதிக்கு வேறாகிய பிரமாணங்களுக்கு விஷயமாகாமையினாலேனும். வியாவிருத்தம். வியாவர்த்தியம். வியாவர்த்தநீயம் என்றும் கூறுவர்.

**அவச்சேதம்:** பிறவற்றினின்றும் வேறுபிரித்து அறிவித்தலை அவச்சேதமென்றும் வியாவிருத்தி என்றும் கூறுவர்.

**அவச்சேத்தியம்:** அவச்சேதமுடையதனை அவச்சேத்தியம் என்பர்.

**அவஸ்தாஞ்ஞானம்:** ரஜ்ஜு முதலிய உபகித சேதனத்தை மறைக்கும் அஞ்ஞானத்தை அவஸ்தா ஞானமென்றும் தூலாஞ்ஞானமென்றும் கூறுவர்.

**அவஸ்து:** அஞ்ஞானத்தையும் அதன் காரியமான ஸ்தூல. சூட்சம முதலிய பிரபஞ்சத்தினையும் அவஸ்து என்பர்.

**அவஸ்தா ஸ்தானம்:**

1. ஜாக்கிர ஸ்தானம் - நேத்திரம்.

2. சொப்பன ஸ்தானம் - கண்டம்
3. சுழுத்தி ஸ்தானம் - இதயம்
4. துரிய ஸ்தானம் - உச்சி

**அவதி:** எல்லை.

**அவாந்தரம்:** மத்தியமானது, நடுத்தரம்.

**அவாந்தரபிரயோஜனம்:** பரமபிரயோஜனத்தின் சாட்சாத் சாதனமாகிய திட ஞானம் எதுவோ அது அவாந்தரபிரயோஜனமாம்.

**அவிகிர்த முக்குணங்கள்:** பரப்பிரமத்துக்குள் இலட்சண சூன்யமாயிருக்கின்ற சத்திக்கு பிரம்மத்தினுடைய சந்நிதானத்தில், புருட சமூகத்திலே ஸ்திரீக்கு இன்பம் சனித்தார் போல அவிகிர்த சத்துவ, ரஜஸ், தமோ குணங்கள் உண்டாயின.

**அவித்தையின் காரண வடிவம்:** காரண தேகம் ஜகத்திற்கு காரணமாகிய மூலப்பிரகிருதியின் அவஸ்தா விசேசமான அவித்தை வடிவமாய் இருத்தலின் அதுவே அவித்தையின் காரண வடிவமாம்.

**அவித்தையின் காரிய வடிவம்:** ஸ்தூல தேகமும், லிங்க தேகமும் ஆகிய இரண்டும் அவித்தையினால் ஆக்கப்பட்டவனாயிருத்தலின் அவத்தையின் காரிய வடிவமாம்.

**அவிசாரம்:** விசாரமற்றது. கவலையற்றது.

**அவிநாசி:** மரணமின்றியதே அவிநாசியாகும். இதனையே அமரமென்றும். அமிர்தமென்றும் கூறுவர்

**அவிகிர்தம்:** மாயை.

**அவித்தை:** மலின சத்துவத்தில் பிறந்தது அவித்தை. ஜீவர்கள் அவித்தையின் வடிவமாகும். அத்தியாசத்தின் அதிஷ்டானத்தின் அப்பிரதீதி வடிவமே அத்தியாசத்திற்கு உபாதான காரணமாகிய அவித்தையாம்.

**அனக:** பாவம்.

**அனந்தன்:** பூரணன்.

**அனாத்துமலோகம்:** இது மனுசிய லோகமென்றும். பிதிர் லோகமென்றும். தேவலோகமென்றும் மூன்று விதம். புத்திரன். தருமம். உபாசனை. இந்த மூன்றும் இவைகளுக்கான சாதனங்களாம்.

**அனுகூதம்:** உள்ளீடு.

**அனுமானப் பிரமாணம்:** அனுமிதிப்பிரமையின்

சாதனமாகிய லிங்கத்தின் ஞானம் எதுவோ அது அனுமானப்பிரமானமாம். (உ-.ம்.) பர்வதத்திலுள்ள புகையாகிய அக்கினியில் லிங்கம் உள்ளது. இங்கே புகையின் ஞானம் அனுமானப்பிரமானமாம்.

**அனுமிதிப்பிரமை:** லிங்கத்தின் ஞானத்தால் உண்டாகும் ஞானம்.

**அஜம்:** உறுதியற்றது. பிறப்பற்றது.

**அஜரம்:** ஜரை (மூப்பு) இன்றியது எதுவோ அது அஜரம்.

**அஜன்மம்:** ஜென்மமின்றியது. இதையே அஜன்மமென்றும் கூறுவர்.

**அஜபா காயத்திரி:** அஜபா மந்திரம் என்றும் சொல்லப்படும். "ஸோகம்" இதுவே அஜபா காயத்திரியாகும். 'ஸோ' வெளிவிடும் சுவாசம் 'ஹம்' உட்சுவாசம்.

**அஜகல் லட்சணை:** எங்கு வாச்சியார்த்தத்தை விடாமல் அதன் சம்பந்தியாகிய அந்நிய (அதிக) அர்த்தம் கொள்ளப்படுகின்றதோ அங்கு அஜகல் லட்சணையுண்டு. (உ.-ம்.) சிவப்பு ஓடுகின்றது.' என்னும் வாக்கியத்தில் 'சிவப்பு' என்னும் பதத்தின் வாச்சியார்த்தமாகிய சிவப்பு நிறத்தில் ஓடுதல்

சம்பந்தியாமையின் அதன் சம்பந்தியாகிய (ஆசிரயமான) குதிரை வடிவ அந்நிய அர்த்தம் கொள்ளப்படுகின்றது. ஆதலால் இது அஜகல் லட்சணையாம்.

**அஹம்பிரமாஸ்மி:** நான் பிர்மமாக இருக்கிறேன். நான்கு வேத மகா வாக்கியங்களில் இது யசூர் வேதவாக்கியமாகும். இது அனுபவ வாக்கியமென்றும் சொல்லப்படும். அகம்+பிரம்மம்+அஸ்மி என்பது இதன் பதமாகும்.

**அரவிந்தம்:** தாமரை மலர்.

**அஸ்தித்துவம்:** முன்னில்லாததாய் பின் இருத்தல்..

**அஸ்திபாதி:** இருக்கிறது. விளங்குகிறது.

**அதுலம்:** உபமானமற்றது.

**அகோசரம்:** விஷயமாகாதது.

**அனுராகா:** கனிவான பக்தி.

**அருக்கன்:** சூரியன்.

**அவதானம்:** ஜீவப்பிரம்மைக்கிய நிச்சயம்.

**அனக:** பாவமற்ற.

**அலக்கண்:** துன்பங்கள்.

**அச்சுவத்தம்:** அரசமரம்.

**அனைய:** அதுபோல.

**அசுசி:** அசுத்தம்.

**அலகை:** பேய்.

**அவாக்கிய:** உரைத்திடப்படாத.

**அபிதானம்:** பெயர்.

**அருகாத:** குறையாத.

**அளி:** அன்புள்ள.

**அஞ்ஞர்:** அஞ்ஞானிகள்.

**அசுசிநரகங்கள்:** மலம், மூத்திரம், சிலேட்டுமம், உதிரம். முதலிய மலினபதார்த்தங்கள்.

**அசுசி விரதம்:** உத்கிருஷ்டத்தன்மை, மயானம் முதலிய தேசம், மது, மாமிசாதிப்பட்சனம் முதலிய அசுத்தங்களைக் கொண்டு நிறைவேற்றும் வாமதந்திரத்தில் சொல்லிய விரதம்.

**அற்பம்:** அத்தியந்தம் துச்சமான மாலை, சந்தனம், வனிதை. முதலிய விசய போகங்கள் மலம், மூத்திரம், முதலிய நிந்திதபதார்த்தங்களின் சமூக ரூபமான இத்தேகம்.

**அற்பபுத்தி:** மாலை, சந்தனம், வனிதை முதலியவற்றின் மீதும், தேகத்தின் மீதும் வைக்கும் பிரியம்.

**அலுலோத்துவம்:** விசயங்கள் சமீபத்தில் அடையப்பட்டிருந்தும் அவற்றைப் புசிக்கும்

சாமர்த்தியமிருந்தும் இந்திரியங்களின் அவிக்கிரிய தன்மையாம்.

**அவிக்கிரியம்:** இந்திரியங்கள் செயல்படாமை.

**அசாபலம்:** வாக்கு. பாதம். பாணிகளால் வியர்த்தமான கிரியைகளைச் செய்யாமை. யாதேனும் ஒரு பிராணியைக் கொல்லக்கருதி ஆயுதம் எடுக்காதிருத்தல்.

**அர்த்தவாதம்:** பேதஞானத்தின் நிந்தையும் அபேத ஞானத்தின் ஸ்துதியும்.

**அப்பிரதீதி:** தோற்றமின்மை.

**அங்குரம்:** முளை.

**அபாவனை:** ஏதுமறியாமை.

**அசம்பாவனை:** சொல்லியும் அறியாதிருத்தல்.

**அத்வைதம்:** தனக்கு அந்நியமாய் வேறில்லாதது..

**அந்தக்கரணம் :** உள்ளம். மனம். புத்தி. சித்தம். அகங்காரம்.

## ஆ

**ஆகர்ஷணம்:** இழுத்தல்.

**ஆகாயத்தின் தத்துவங்கள்:** பயம். மோகம். குரோதம். காமம். சோகம்.

**ஆகாமிய கர்மம்:** நடைமுறையில் செய்கின்ற புண்ணிய பாவ கர்மங்கள். இவைகள் ஆகாமியத்திற்கு ஏதுவாகும்.

**ஆகுந்தகம்:** அந்நிய சுபாவமான தர்மம் தன் சுபாவமாகத் தோற்றுகிறது ஆகுந்தகம் எனப்படும். பூனை புலியைப் போல் தோற்றம் தரும் நிலை.

**ஆசாரணம்:** ஒழுக்கங்கள்.

**ஆசங்கம்:** கிடைத்த வஸ்துவில் பிரீதி.

**ஆசிர்வாத ரூப மங்கலம்:** தன் பொருட்டாவது, தன் சிஷ்யரின் பொருட்டாவது வாஞ்சித வஸ்துவை (இஷ்டதெய்வத்தை) பிரார்த்தித்தல்.

**ஆசுரபாவம்:** அசுரனாகிய விரோசனனது சித்தத்தின் அபிப்பிராயம்.

**ஆஸ்திக்கியம்:** பரலோகம் உண்டு என்ற நிச்சயம்.

**ஆஸ்வாதம்:** அனுபவம்.

**ஆத்மா:** ஆன்மா என்றும் அழைக்கப்படும். ஆத்மா என்பது ஏழு விதம் என கூறப்படுகிறது.

1. தேகம் தான் ஆத்மா. 2. இந்திரியம் தான் ஆத்மா. 3. பிராணன் தான் ஆத்மா 4. மனமே ஆத்மா.

5. புத்தியே ஆத்மா. 6. சூன்யமே ஆத்மா. 7. சத்தே ஆத்மா என்று சொல்லுகின்றனர். உண்மையில் ஆத்மா இவைகள் அல்ல. ஆத்மா சுயபிரகாசமானது. சகல உயிர்களிடத்திலுமிருந்தும் நான். நான் என்று எழுதல் எதுவோ அதுவே ஆத்மா.

**ஆத்மஞானம்:** ஆத்மஞானமானது காரியத்தோடு கூட மூலாவவித்தையை முழுவதும் நாசம் பண்ணுவதாம். சர்வ வித்தைகளிலும் ஆத்மஞானம் அத்தியந்தம் சிரேஷ்டமாம். அனேக ஜனனங்களில் செய்த நிஷ்காம புண்ணிய கர்மங்களாலேயே இந்த ஆத்ம ஞானம் அடையப்படுகிறது. சர்வ பதார்த்தங்களிலும் இந்த ஆத்ம ஞானம் அத்தியந்தம் குய்யமாம். தர்ம சாஸ்திரங்களில் பாவ நிவர்த்தியின் பொருட்டுக் கூறியுள்ள பிராயச்சித்தங்கள் ஏதேனும் ஒரு பாவத்தையே நிவர்த்திக்கின்றன. ஆனால் ஆத்மஞானமோ அனேக மாயிரம் ஜனனங்களில் சம்பாதித்துள்ள சர்வ பாவங்களையும் இவைகளின் காரண ரூபமான அஞ்ஞானத்தையும் உடனே நாசம் செய்கிறது.

**ஆத்துமலோகம்:** வித்துவான்களினாலே அனுபவிக்கப்பட்ட பிரம சொரூபத்தை அப்பிரதிபந்த அபரோட்சமாக அனுபவிக்க வேண்டுமென்கிற இச்சையுள்ளவர்கள் விவிதிஷா சந்நியாசத்தை அடைவார்கள். இதுவே ஆத்மலோகம் எனப்படும்.

**ஆத்மக்கியாதி:** ஆத்மா ஒன்று உண்டு என்று ஒப்புக்கொண்டு பேசுதல் ஆத்மக் கியாதி.

**ஆத்மா சத்து:** ஆத்மாவிற்கு எதனால் ஜன்ம நாசங்களில்லையோ அதனால் மூன்று காலத்திலும் பாதிக்கப்படாததாயிருத்தலின் ஆத்மா சத்தாம்.

**ஆத்மாசித்து:** எதனால் தனது தாதாத்மிய சம்பந்தத்தால்எல்லாவற்றையும் விளக்குவதாயிருத்தலின் எல்லாவற்றிற்கும் சாதகமாயிருக்கின்றதோ அதனால் ஆத்மா சித்தாம். எதனால் ஆத்மா சுயம் பிரகாசமோ அதனால் ஆத்மாசித்தாம்.

**ஆத்மிஆநந்தரூபம்:** எல்லாக்காலங்களிலும் பரமப்பிரேமைக்கு விஷயமாயும் துக்க சம்பந்தமில்லாததாயுமிருத்தலால் ஆனந்த ரூபமாம்.

**ஆமயம்:** நோய்.

**ஆர்ஜவம்:** குடிலத்தன்மையில்லாமை.

**ஆர்த்தன்:** அத்தியாத்மம் முதலிய துக்கங்களால் வியாகூலமுள்ளவன். துன்பம் வரும்பொழுது மட்டும் இறைவனை நினைப்பவன்.

**ஆர்த்தா:** ஈரத்தன்மை.

**ஆருடம்:** தெளிவானது.

**ஆதிநிகர்:** தற்காலத்தவர்

**ஆசை:** பிறரால் வருங்காலத்தில் அடையத்தக்க வஸ்துவின் இச்சை எதுவோ அது ஆசையாகும்.

**ஆதாயிகள்:** அக்கினியிடுபவன். விஷமிடுபவன். சஸ்திரபாணியாய் கொல்லவந்தவன். பிறருடைய தனத்தை அபகரிப்பவன். பிறருடைய பூமியை அபகரிப்பவன். பிறருடைய மனைவியை அபகரிப்பவன். இந்த ஆறு பேரும் ஆதாயிகள்.

**ஆதி:** விஷயேந்திரியங்களின் சையோகம்.

**ஆப்தகாமன்:** சர்வான்ம திருஷ்டியினால் எவன் சர்வ பதார்த்தங்களையும் அடைந்துள்ளானோ அவன் ஆப்தகாமன்.

**ஆறு தத்துவம்:** இது ஸ்தூல சரீரம் என்று சொல்லப்படும். சர்மம், உதிரம். மாமிசம். சனாயு. அத்தி. மஜ்ஜை முதலியனவாம்.

**ஆறு லிங்க வடிவ யுக்தி:** 1. உபக்கிரம உபசம்ஹாரம் (ஆரம்பம்.சமாப்தி). 2. அப்பியாசம் (அடிக்கடி சொல்லுதல்) 3. அபூர்வதை (சுருதிக்கு வேறாகிய பிரமாணங்களுக்கு விஷயமாகாமை -யினாலேனும் சொப்பிரகாசத் தன்மையினாலேனும்

அத்வைத வஸ்துவின் அலௌகிகத்தன்மை). 4. பலம் (அனர்த்த நிவிருத்தியும் பரமானந்தப் பிராப்தியுமாகிய மோட்சம்) 5. அர்த்தவாதம் (பேத ஞானத்தின் நிந்தையும் அபேத ஞானத்தின் ஸ்துதியும்). 6. உபபத்தி (அத்வைத ஞானத்திற்கு அனுகூலமான திருஷ்டாந்த வடிவ யுக்தி.

**ஆவரணம்:** தத்துவஞானியையும் ஈசுவரனையுந் தவிரமற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாட்சிசைதந்நியம் என்னுமிவைகளின் ஒன்றுக் கொன்றுள்ள பேதம் தெரிய வொட்டாமல் மறைக்கும். நான் கூடஸ்தரைக் காணேன் என்கிற அறிவாக யிருந்துங் கூடஸ்தர் தோற்றவில்லையென்கிற மயக்கமே ஆவரணம்.

" பரநிலை காணோமென்று பகர்தலே ஆவரணமூடல்"

– (கைவல்லியம்.)

இது தமஸிருந்து தோன்றிய சக்தியாகும். மறைப்பு என்ற அர்த்தத்தைக் கொடுப்பதாகும். இது பிரம்மத்தையும் ஆத்மாவையும் மறைக்கிறது. ஆவரண சக்தி விவேகி, அவிவேகி யாவர்க்கும் ஜனனத்திற்கு மூலகாரணமாயிருந்து வெகுவிதமான பிரயாசங்களைத் தருவதால் ஆவரணம் முற்றிலும் நீங்கத்தக்கதாகும்.

**ஆரோபிதம்:** கற்பனைத் தோற்றம்.

**ஆழி** : கடல், சங்கு.

**ஆனந்தமய கோசம்** : இது காரண சரீரத்தை உடையதாக உள்ளது. புண்ணிய பலபோகத்தின் அபாவ

காலத்தில் உண்டாகின்ற சுழுத்தி எதுவோ அதன்கண் அவ்விருத்திகள் தமது காரணமாகிய அஞ்ஞானத்தில் ஒடுங்குகின்றன. அந்த அஞ்ஞானம் ஆனந்தமயகோசமாம். புறத்தே காட்டிக்காட்டி நம்மை மயக்கப்படுத்துவது எதுவோ அது ஆனந்தமயகோசமாம்.

**ஆனந்தம்:** நித்திய, நிருபாதிக நிரதிசய, சுக சொரூபமாயிருப்பது ஆனந்தமாம். பிரமானந்தம், முக்கியானந்தம், ஆன்மாநந்தம், அத்துவிதானந்தம், வாசனானந்தம், நிசானந்தம், விஷயானந்தம், வித்தியானந்தம், என்பன ஆனந்தங்களாம். பரமப்பிரீதியின் விஷயம் ஆனந்தமாகும்.

**ஆனந்தமயன்:** மனோமயனும், விஞ்ஞானமயனும் அஞ்ஞானத்திலே அழுந்தின வேளை ஆனந்தமயனென்று சொல்லப்படும்.

**ஆரோபம்:** பொய்யாக உள்ளது.

**ஆலத்தின்:** பூமியின்.

**ஆச்சியம்:** நெய்.

**ஆர்ஜவம்:** சிரத்தையோடு கேட்பவனிடத்தில் நிச்சயித்த பொருளை மறைக்காமை.

**ஆசக்தி:** ஆசை.

**ஆசிரமம்:** நிலை, இருப்பிடம்.



**இச்சாவிருத்திகள்:** ஆசை, திருஷ்ணை, காமனை, வாஞ்சை, லோபம், தீனத்தன்மை முதலியவை. இவைகள் காரிய வடிவ இருதயக்கிரந்திகள்.

**இந்திரியங்கள்:** ஞானேந்திரியம், கர்மேந்திரியம், அந்தக்கரண ரூபமான மனம், புத்தி இவைகளாகும்.

**இந்திரியா ராமர்:** இந்திரியங்களால் விஷயங்களில் சதா கிரீடிப்பவர்.

**இந்தனம்:** விறகு.

**இருதயக் கிரந்தி :** சித், ஜடக் கிரந்தியும் அதன் ஞானமாகிய விபரீத பாவனையும் இருதயக்கிரந்தி எனப்படும்.

**இராகத் துவேஷம் :** சரீர ஸ்துதி மாத்திரத்தில் உபயோகமான சப்தாதி விஷயங்களில் உளவாகும் இராகத் துவேஷங்கள்.

**இருபத்து நான்கு தத்துவங்கள்:** எண் வகைப் பிரகிருதிகளும் (பஞ்ச தன் மாத்திரைகள் 5 அகங்காரம் 1. மகதத்துவம் 1, அவ்வியத்தம் 1) விகாரங்கள் பதினாறும் (மகாபூதமைந்து, கருமேந்திரியமைந்து. ஞானேந்திரியங்களைந்து, மனமொன்று) சேர்ந்தது இருபத்து நான்கு தத்துவங்கள் எனப்படும்.

**இரண்யகர்ப்பன்:** பரமாத்மா சமஷ்டி சூட்சுமபூத சூட்சும சரீரத்துடன் கூடுகின்ற பொழுது இரண்யகர்ப்பன் என்று சொல்லப்படும். சூட்சும சரீர சமஷ்டி அபிமானியாகப் படத்திலே சூத்திரமிருக்கிறாற்போல எங்குமிருக்கிறவராய் இச்சா. ஞானக், கிரியையென்று சொல்லப்பட்ட மூன்று சக்திகளையுடையவர். இரண்யகர்ப்பர். சந்தியாகாலத்து இருட்டிலே காணப்படுகிற உலோகம் போலவும். கரியினால் அச்சுக்கட்டின சித்திரபடம் போலவும் எங்கு மொக்க குறுமுளையாயிருக்கிற பயிர்வகை போலவும். ஈசுவரனுடைய சூட்சும சரீரமும் அழகாக வெங்கும் ஒக்காலஞ்சனை (சமமாக) பண்ணப்பட்டு தோற்றுமென்று உத்தரம்.

சூட்சும பூதங்களைந்தும். அந்தப் பூதங்களிலே தோன்றிய சூட்சும சரீர சமஷ்டியுங்கூடி ஈசுர சூட்சும சரீரமென்றும், இரண்யகர்ப்பனென்றும் சொல்லப்படும்.

**இராஜயோகம்:** இது ஞானசாத்தியம். கிரியாசாத்தியம், ஞானக்கிரியா உபயசாத்தியம் என்றும் சொல்லப்படும். சுத்த சித்தமுடைய புருஷன் சாஸ்திரத்தினாலும் குரு கிருபையினாலும்

பிரம்மாத்ம ஐக்கிய நிச்சயமாகிய தத்துவ ஞானத்தையடைந்து ஜீவன்முக்திலட்சணானந்தித்தினது அனுபவத்தின் பொருட்டு சகல பிரவிருத்திகளையும் விட்டு. ஏகாந்தமான இடத்தில் இருந்துகொண்டு பிரம்மாகார விருத்தியை அப்பியாசம் செய்தலே இராஜயோகம் எனப்படும்.

**இலட்சணம்:** அசாதாரணதர்மத்தினை லட்சணமென்பர். ஒன்றில் இருப்பதாகிய தர்மம் அசாதாரண தர்மமெனப்படும்.

**இஷ்டகர்மம்:** அக்கினி ஹோத்திராதி கர்மங்கள்.

**இருள்:** தமோகுணம்.

**இரசதம்:** வெள்ளி.

**இந்தத்து:** சந்தேகம்.



**ஈஷணாத்திரயம்:** இதை மூவேடணை என்றும் சொல்வர். அவைகள் தனவேடணை. தார ஏடணை, புத்திரஏடணை என்பவையாகும்.

**ஈசுவரன்:** அந்தர்யாமி பிரமத்திற் கற்பிதமான மாயா பிரதிபிம்பன் ஈசுவரன் எனப்படும். பிரகிருதியின்

சத்துவ குணத்தை மாயையென்று சொல்லப்படும். இந்த மாயையினிடத்திலே நிர்மல சலப்பிரதிபிம்பம் போலப் பிரமம் சுலட்சணமாகப் பிரதிபிம்பிக்கும். இந்தப் பிரதிபிம்பச் சைதண்ணியத்தை சர்வக்ஞனாகிய ஈசுவரனென்று சொல்லப்படும்.

**ஈசுவரதூலசரீரம்:** கற்பிதப் பிரபஞ்ச வடிவமாகத் தோன்றுகின்ற தூல பஞ்ச பூதங்களும். அந்தப் பூதங்களிலே தோன்றிய மூன்று சாதியாயிருக்கிற தூல. சரீர சமஷ்டியும் கூடி ஈசுவர தூல சரீரமென்றும் விராட்டென்றும் சொல்லப்படும்.

**ஈசுவர சாட்சி:** தத்பதத்தின் லட்சியம் சுத்தப்பிரம்மம். அதுவே ஈசுவரசாட்சி.

**ஈசுவர சிருஷ்டி:** இந்திரிய வாயிலாக அந்தக் கரணத்தின் விருத்தியினால் எதனைச் சாட்சி பிரகாசிக்கின்றதோ (அறிகின்றதோ) அது ஈசுவர சிருஷ்டி எனப்படும். இதுவே பிரமாதாபாஸியம் என்றும் வியாவகாரிகம் என்றும் அழைக்கப்படுகிறது.

**ஈசுவரநாமோச்சாரணக்கிரமம்:**

ஈசுவர நாமத்தைக் கடைப்பிடிப்பதில் கடைப்பிடிக்கக் கூடாததான பத்து நிகழ்வுகள்.

1. சாதுக்கள் நிந்தை கூடாது. 2. அசத் புருஷர்களிடத்து நாமத்தின் வைபவத்தைச் சொல்லுதல் கூடாது. 3. சிவன். விஷ்ணு. கணேசன். சூரியன். தேவி

என்பவர்களிடத்துப் பேதபுத்தி கூடாது. 4. வேதவாக்கியங்களில் அசிரத்தை, விசுவாசமில்லாமை கூடாது. 5. சாஸ்திர வசனங்களில் அசிரத்தை கூடாது. 6. குருவாக்கியங்களில் அசிரத்தை கூடாது. 7. ஈசுவர நாம மகாத்மியத்தில் அர்த்தவாதப்பிரம்மம் (யஞ்ஞத்தின் கம்பம் ஆதித்தனாம் என்பதைப் போல) ஸ்துதியை அறிவிப்பதாமென்னும் மயக்கம் கூடாது.
8. நாமம் ஸர்வ பாபத்தையும் கெடுப்பதாம் என்னும் புத்தியால் நிஷித்த கர்மங்களை யாசரித்தல் கூடாது. 9. மகத்தான புண்ணியத்தை உண்டாக்குவது நாமமென்னும் புத்தியால் விகித கர்மங்களை விடுதல் கூடாது. 10. அந்நியதர்மங்களோடு நாமம் சமம் என்னுதல் கூடாது. இந்த அபராதங்களின்றி பிராதக்காலம், மாத்தியானக்காலம், சாயங்காலம், மத்திய ராத்திரிக்காலமென்னும் இந்நான்கு காலங்களிலும் பிரித்து லட்சம் அல்லது அதற்கு மேலாகவும் ஈசுவர நாமத்தை உச்சரித்து அதனிடத்து சித்த விருத்தியை நிறுத்தவேண்டும். இது ஈசுவரநாமத்தைச் செபிக்கும். சாமானியக்கிரமம்.

## ஈசுவரபத வாச்சியார்த்தம்:

சாமக்கிரியைகளோடு கூடிய மாயையும் மாயையிற் பிரதிபிம்பித்த சிதாபாசனும் அதனோடு கூடிய பிரம்ம சேதனமும் ஈசுவரபதத்திற்கு வாச்சியார்த்தம்.

**ஈசுவரலட்சியார்த்தம்:** சாமக்கிரிகை (சாதனங்கள்) களோடு கூடிய மாயையும், சிதாபாசனையும்

மித்தியாத்துவ புத்தியினால் விட்டு. மிஞ்சிய பிரம்ம சேதனம் எதுவோ .அது ஈசுவரபதத்தின் லட்சியமாம்.

**ஈசுவரனது தேகம்:** விராட்டு. சூத்திராத்துமா. அவ்வியாகிருதம் இம்மூன்றும் ஈசுவரனது தேகங்களாம்..

**ஈசுவரனது இடம்:** குலாலனுக்குப் பூமி முதலியன இடமாதல் போல மாயை ஈசுவரனுக்கு இடமாகும்.

**ஈசுவரனது அபிமானிகள்:** வைசுவானரன். இரணியகர்ப்பன், அந்தர்யாமி, என்ற மூவரும் ஈசுவரனது தேகங்களாகிய விராட்டு வைசுவானரன். சூத்திராத்மா - இரணியகர்ப்பன்.. அவ்வியாகிருதம் - ஈசுவரன் (அந்தர்யாமி)

**ஈசுவரனது காரியம்:** ஏகமாயிருக்கும் நான் அனேகரூபமாவேன் என்னும் ஈஷனை (பார்வை) முதல் ஜீவரூபமாக வியஷ்டி சரீரத்தில் பிரவேசித்தல் பரியந்தமாகிய திருஷ்டி எதுவோ அது ஈசுவரனது காரியமாம்.

**ஈசுவரனது தர்மம்:** சர்வஞ்ஞத்துவம் முதலியன ஈசுவரனது தர்மங்களாம்.

**ஈசுவரனது அவஸ்தைகள்:** ஜகத்தின் உற்பத்தி. ஸ்திதி, லயமென்னும் இம் மூன்றும் ஈசுவரனது அவஸ்தைகளாம்.

**ஈசுவரன், குரு முதலியோரிடத்து செய்நன்றி கொன்றதற்கு நிவர்த்தி:** ஈசுவரன், குரு, சாதுக்கள் என்பவர்களுக்கு தேக திருஷ்டியினால் நான் தாசனாயிருக்கின்றேன். ஜீவ திருஷ்டியினால் அந்த ஈசுவர வடிவமாக மதிக்கப்பட்ட குரு முதலியோர்களின் அம்சமாயிருக்கிறேன். ஆத்மதிருஷ்டியினால் அவர்களே யானாயிருக்கின்றேன் என்று எண்ணுவதே நிவர்த்தியாகும்.

## உ

**உருத்திரன்:** சத்துவத்தில் தமஸ் பிரதானமாகும்பொழுது அதில் பிரதிபிம்பித்த ஈசுவரன் ஜகத்தை உபசம்மாரம் செய்கையினால் உருத்திரன் என்ற பெயரை அடைவார்.

**உபராமம்:** சமாதி ஷட்க சம்பத்தில் மூன்றாவது பதமாக அமைந்தது. இதற்கு உபரதி என்றும், வேறு பதங்களும் உண்டு. சாதன சகித சகல கர்மங்களையும் விட்டு. அதாவது சாதனைகள் செய்வதற்கு ஏதுவான சகல காரியங்களையும் விடுத்து, அவைகளை 'விஷம்' போல் எண்ணி விஷயங்களை விட்டு ஓடுதல். ஒரு விஷயத்தை தியாகம் செய்தபின். அந்த விஷயத்தில்

மறுபடியும் இச்சை உண்டாகாமல் இருப்பதும், ஸ்திரியை விட்டு விலகுதல் முதலியனவும் இதன் பொருளாகும்.

**உபபோகம்:** போஜனாதி ஐந்நிய சுகானுபவம்.

**உபரஞ்சகம்:** இயல்பாய் பெறப்பட்ட தர்மவடிவ வியாவர்த்தகம் உபரஞ்சகம் எனப்படும். (உ.-ம்) பிரமத்தின் சத்தியத்தன்மை, ஞானத்தன்மை, அநந்தத்தன்மை முதலிய தர்மங்கள். இதனையே 'சொரூபலட்சணம்' என்றும் கூறுவர்.

**உபரஞ்சிதம்:** உபரஞ்சகமுடையதனை உபரஞ்சிதம் என்பர்.

**உபரதிக்கு ஏது:** இயமம் முதலான அஷ்டாங்கயோகம் எனப்படும் எட்டும் உபரதிக்கு ஏதுவாம்.

**உபரதியின் அவதி:** சுழுத்தியைப் போல் உண்டாயின் அது உபரதியின் அவதியாம்.

**உபரதி திதீக்ஷை:** சிரவணாதிகளைச் சாதிக்குங்கால் அவற்றிற்கு விரோதமாயுள்ள சீதம், உஷ்ணம், பசி, கூடியவனும் மென்மையான சித்தத்தோடு கூடியவனும் சுத்த புத்தியுடையவனும் குருவை விட பலத்தினாலும் புத்தியினாலும் அதிகாரத்தினாலும் குறைந்தவனும்

நோய் இல்லாதவனும் மற்ற நற்குணங்களும் கொண்டவன் உத்தம அதிகாரியாவான்.

**உத்தமப்பிராரத்தம்:** எப்போதும் நிவர்த்திக்கு ஏதுவாகிய பிராரத்தம் எதுவோ அது உத்தமப் பிராரத்தமாம். (உ.-ம்) சுகதேவர், வாமதேவர், ஜனகாதியர், முதலியவர்களிடம் இருந்த பிராரப்தம். இது பிறப்பு முதல் சரீரம் இருந்தவரையில் நிவர்த்திக்கு ஏதுவாயிருந்தமையால் உத்தமமாம்.

**உபக்கிரம உபசம்ஹாரம்:** ஆரம்பம் - முடிவு..

**உபசத்தி:** இது குருவை சரணடையும் விதியாகிய சாஸ்திரம். (பகவான் என்று கூறி எனக்கு உபதேசம் செய்வீராக என்று சாஸ்டாங்கமாக நமஸ்கரிக்க வேண்டுதல்).

**உபபத்தி:** அத்வைத ஞானத்திற்கு அநுகூலமான திருஷ்டாந்த வடிவே யுக்தி. தாத்பரியத்தை நிச்சயிக்கும் ஆறு லிங்க வடிவ யுக்தி.

**உபமான பிரமாணம்:** சொப்பனம், கந்தர்வ நகரம், கண்ணாடியில் பிரதிபிம்பம் முதலிய மற்றும் அனேக திருஷ்டாந்த வடிவம்.

**உபயசாத்திய ராஜயோகம்:** இயமம், நியமம் முதலான அஷ்டாங்க யோகம் சித்தித்த பின்னர் லயம்,

விட்சேபம், கஷாயம், ரசாஸ்வாதம் என்னும் நான்கு விக்கினங்களையும் விலக்கி எழும்பிய சம்ஸ்காரத்தை கெடுத்து நிரோத சம்ஸ்காரத்தை வெளிப்படுத்தலை முன்னிட்ட திரிபுடி பானமின்றிய பிரம்மாஹார விருத்தியின் ஸ்திதியாகிய நிர்விகல்ப சமாதி உபயசாத்திய ராஜயோகமாம்.

**உபலட்சணம்:** லட்சியத்தின் ஏகதேசத்திலிருந்து கொண்டு இலட்சியம் முழுவதையும் அறிவிப்பது எதுவோ அது உபலட்சணமெனப்படும். (உ-ம்) காகம் உள்ளது தேவதத்தினின் வீடு.

**உபலக்ஷிதம்:** உபலட்சணத்தினால் அறிவிக்கப்படும் அர்த்தமெதுவோ அது உபலக்ஷிதம் எனப்படும்.

**உபகிதம்:** உபாதி உடையதனை உபகிதம் என்பர்.

**உபலப்தி:** ஞானம்.

**உபலப்தா:** ஞானத்தின் கர்த்தாவை உபலப்தா என்பர்.

**உலோபம்:** வேறு புருஷர்களால் வர்த்தமான காலத்தில் (நிகழ்காலத்தில்) அடையப்படாத வஸ்துவினை அடையவேண்டுமென்றும் இச்சை உலோபமாம். இதனையே தீனத்தன்மை என்றும் கூறுவர்.

**உலகம் பதினாலு:** பூமிக்கு மேலே பூலோகம். புவர்லோகம். சுவர்க்கலோகம். மகத்லோகம். ஜனலோகம். தபலோகம். சத்திய (பிரம்ம) லோகம். பூமிக்குக்கீழே அதலம். விதலம். சுதலம். தராதலம். ரசாதலம். மகாதலம். பாதாலம். ஆகிய பதினான்கும் பதினாலு லோகங்களாகும்.

**உற்போதம்:** பிரகாசம்.

**உச்சைச் சிரவம்:** பாற்கடலிலே உண்டான ஒரு குதிரை வடிவம்.

**உத்பிஜம்:** வித்து. வேர், கிழங்கு, கொம்பு, கொடி முதலியவற்றினின்றும் உண்டாகும் விருட்சம் முதலியன.

**உடுக்கள் :** நட்சத்திரம்.

**உதகதீரம்:** நதிக்கரை.

## ஏ

**ஏகாக்கிரம்:** சுத்த சத்துவத்துடன் கூடிய சித்தத்திற்கு ஏகாக்கிரம் என்று பெயர். இந்த நிலையே சம்பிரக்ஞாத சமாதி என்று கூறப்படும்.

**ஏகரஸன்:** ஆகாசத்தைப் போல விலட்சண தர்மங்களின்றி நிர்விசேஷவடிவமாயிருத்தலால் ஏகரஸன் என்பதாகும்.

**ஏகேந்திரியம்:** இந்திரியங்களை அடக்குதலாகிய தர்மத்திற்கு ஏகேந்திரியம் என்று பெயர்.

**ஏடணை:** இச்சை. விருப்பம். (தனஏடணை. தாரஏடணை. புத்திரஏடணை என ஏடணை மூன்று வகைப்படும்).

**ஏமுற:** இறுமாப்புற.

**ஏம:** இன்பம்.



**ஐந்து காரகங்கள்:** கர்த்தா. கர்மம். கரணம். சம்பிரதானம், அதிகரணம்.

**ஐதிகப் பிரமாணம்:** பரம்பரையாக உலகத்தில் ஜகத்து மித்தையென்று சொல்லிக்கொள்ளுதல் ஐதிகப்பிரமாணம்.

**ஐந்துசுகம்:** பிரமசுகம். வாசனைசுகம். நிசசுகம். விஷயசுகம், முக்கிய சுகம்.



**ஓமம்:** இது ஹோமம் என்றும் சொல்லப்படும். நெய் முதலிய தியாகம் செய்யப்பட்ட பொருள்களை அக்கினியின் இடுவது ஓமம்.

**ஓதப் புரோதம் :** பரஸ்பரத்தில் பரஸ்பரத்தைச்

சேர்த்தலாகிய வியதிகாரத்தினை ஓதப்புரோதம் என்பர்.

**ஓதப்புரோதபாவம்:** பிரம்மம், ஆத்மா என்னும் இரண்டுமே ஏகம் என்பது ஓதப்புரோதபாவமாகும்.

**ஒவ்வா:** சகிக்கக்கூடாத.

## க

**கர்த்தவ்யம் :** சாஸ்த்திரத்தின் விதி நிஷேத வடிவ ஆணையினால் எந்தச் சாதனம் செய்யப்படுகிறதோ அது கர்த்தவ்யமாகும்.

**கர்ம ஜாதாத்மியம் :** அகங்காரத்திற்கு ஸ்தூல தேகத்தோடுள்ள தாதாத்மியம்.

**கர்மாசங்கம் :** நான் செய்தேன் என்னும் கர்த்திருத்துவ அபிமானம். அத்துவிதானந்ததரிசனத்தாற் கர்மாசங்கம் நீங்கிவிடும்.

**கர்மசங்கிகள் :** கர்மங்களிலும், அவற்றின் பலன்களிலும் அதிகாரிகளாகிய மானுடர்கள்.

**கலிலம் :** கலங்குதல்.

**கர்த்ததந்திரம் :** இது உபாசனையென்று கூறப்படும். இந்த உபாசனை குரு உபதேசத்தினால் வரும். இந்த உபாசனை செய்கின்றபோது நாம் பிரமம் ஆவோம்.

என்கிற புத்தியைக் கொடுக்கும். இந்த உபாசனை விட்டுப் போனால் விட்சேபத்தின் வசமாய் விடுவர். இந்த உபாசனை உள்ளவன் நித்திரை வருமளவும். மரணம் வருமளவும் இடைவிடாது அப்பியாசம் செய்வது வரவேண்டும். இந்த உபாசனை முதிர்ந்தது என்பதை அறிய பிட்சையெடுக்கிறவன் சொப்பனத்திலும் பிட்சையெடுக்கிறது போலவும். வேதமோதுகிறவன் சொப்பனத்திலும் வேதம் ஓதுகிறான் போலவும் இந்த உபாசகன் தினந்தோறும் சொப்பனத்திலும் இப்படிக்காண்பானாகில் உபாசனை முதிர்ந்தது உபாசனைக்கு முடிவு என்பதாகும்.

**கர்ம நிஷ்டன் :** ரஜஸில் ரஜஸ் பிரதானமாகும் போது அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் காமக்குரோத பரனாய் கர்மநிஷ்டனாவான்.

**கர்மேந்திரியம் :** வாக்கு. பாணி. பாதம். பாயுரு. உபஸ்தம். பஞ்சபூதங்களினுடைய ரஜோம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரையெடுத்து தனித்தனியே வைத்தது கர்மேந்திரியம் என்று சொல்லப்படும். ஆகாசத்தினிடமாக வாக்கு வசனிக்கும். வாயுவினிடமாகப் பாணி இடுதல். ஏற்றல் செய்யும். அக்கினியிடமாகப் பாதம் நடக்கும்.
அப்புவினிடமாகப் பாயுரு மல, ஜலத்தைத் தள்ளும். பிருதிவியினிடமாகப் உபஸ்தம் சுகத்தைப் பண்ணும். இந்த ஐந்தும் தனித்தனியே இருந்தது கொண்டு மறு தொழில் செய்யமாட்டாது.

**கற்பித தாதாத்மிய சம்பந்தம் :** கற்பித பேதத்தோடு வாஸ்தவ அபேதத்தைக் கற்பிததாதாத்மிய பந்தமென்பர்.

**கற்பித விசேஷ அம்சம் :** எது அஞ்ஞான காலத்தில் தோற்றுகின்றதோ, ஞானகாலத்தில் தோற்றுகிறதில்லையோ அதனைக் கற்பித விசேஷமென்பர். இதனையே "அத்யஸ்தம்"என்றும் கூறுவர்.

**கரணம் :** வியாபாரத்திற்கு வேறாகிய அசாதாரணமான காரணத்தைக் கரணமென்பர்.

**கதி :** மோட்சம், வழி, மூச்சுப்பயிற்சியில் ஒரு வகை.

**கதிர் :** ஒளிக்கீற்று, கிரணங்கள்.

**கண்டசாமீகர நியாயம்:** கழுத்தில் சங்கிலியைப் போட்டுக் கொண்டு காணோமென்று தேடுதல்.

**கபாலபாதி:** கொல்லன் துருத்தியினைப்போல விரைவாய் ரேசக, பூரகஞ் செய்தல் கபாலபாதியாம்.

**கர்த்தா:** எது கிரியையின் ஆசிரயவடிவமாய்க் கிரியை உடையதாய் இருக்கின்றதோ அது கர்த்தா எனப்படும்.

**கருமக்கிரந்தி :** ஆகாமியம். பிராரப்தம். சஞ்சிதம் என மூவகைப்படும்.

**கர்மேந்திரியங்களின் பஞ்சக விஷயங்கள்:**
வசனம். ஆதானம். கமனம். ரதி. மலநீக்கம் ஐந்தும் கர்மேந்திரியங்களின் பஞ்சக விஷயங்களாகும்.

**கர்மேந்திரியம் ஐந்தின் தேவதைகள் :**
அக்கினி. இந்திரன். உபேந்திரன். பிரஜாபதி. மிருத்தியு என்னும் ஐவரும் கருமேந்திரியங்கள் ஐந்தின் தேவதைகளாகும்.

**கற்பிதகாரியம்:** அதிர்ஷ்டானத்தினும் குறைந்த சத்தையுடைய வேற்றுச் சொரூபத்தை கற்பித காரியமென்று கூறுவார். இதனையே விவர்த்தமென்றும் கூறுவர்.

**கற்பிதம் :** எங்கே தோஷமாகிய உபாதியின் பலத்தினால் அபேதம் தோற்றுகின்றதோ அங்கே அந்த அபேதம் கற்பிதமாகும்.

**கனிஷ்ட அதிகாரி :** முப்பத்தோரு வயது முதல் நாற்பது வயதுடையவனும்.தோஷத்தோடு கூடிய கடின கேசங்களையுடையவனும். கடின சித்தமுடையவனும் குறைந்த புத்தி உடையவனும். குருவை விட வலிமையினாலும் புத்தியினாலும்,அதிகாரத்தினாலும். அதிகமானவனும்.

ரோகமின்றியவனும்இவை போன்ற மற்ற குணங்களையுமுடையவன்.

**கனிஷ்ட பிராரத்தம்:** எப்போதும் பிரவிருத்திக்கு ஏதுவாயுள்ள பிராரத்தம் கனிஷ்டமாம். (அதமம்) அது ஜனகர் முதலியோருக்கு இருந்த பிராரத்தமாகும்.

**கமல பத்த உதக நியாயம் :** தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாதது போல.

**கர்மநிஷ்டன்:** உழவு, வரைவு, வாணிபம், வித்தை, சிற்பம் இவை முதலியனவும் பரலோகத்துக்குரிய யஞ்ஞம், தானம், தவம், விரதம், சீலம், உபாசனை இவை முதலியனவுமாகிய கிருத்தியங்களின் நிஷ்டையை உடையவன்.

**கவருடை:** நானாக்கூறுபாடுகளை.

**காலபரிச்சேதம் :** பிராக பிரத்துவம் ஸாபாங்களின் பிரதியோகித்தன்மை எதுவோ அது காலபரிச்சேதம்.

**காலநேமி:** காலச்சக்கரம்.

**காரணம் :** அவித்தை, காமகர்மங்கள்.

**காமம் :** இஷ்ட விஷயங்களைக் காணினும்,

கேட்பினும், நினைக்கினும்.அவைகளைப்பற்றி அந்தக்கரணத்தின்கண் எழுகின்ற திருஷ்ணையே காமம். உரோமாஞ்சலி, முகவிகாசம் முதலிய கலக்கங்கள் காமத்தினால் ஏற்படும் விளைவுகளாகும். அடைந்த பொருளை அனுபவிக்க வேண்டுமென்றும் இச்சை எதுவோ அது காமம். இதனை காமனை என்றும் கூறுவர்.

**காரிய அஞ்ஞானம்** :பிராந்தி ஞானத்தினையும் அதன் விஷயத்தினையும் காரிய அஞ்ஞானம் என்பர்.

**காமிய பதார்த்தங்கள்** : மாரணம், மோகனம், உச்சாடனம், ஸ்தம்பனம், ஆகர்ஷணம், வசீகரணம்.

**காரிய வடிவ இருதயக்கிரந்தி** : ஆசை, திருஷ்ணை, காமனை, வாஞ்சை, லோபம்,தீனத்தன்மை.

**கரதலாமலகம்** : உள்ளங்கை நெல்லிக்கனி

**காடசுழுத்தி:** எதனினின்றும் விழிப்புத்தரலன்றி விழிக்கிறதில்லையோ அது காட சுழுத்தி எனப்படும்.

**காயம்** : சரீரம், உடல்.

**காதை:** யுத்தம்.

**காகதாலீய நியாயம் :** காகம் உட்காரப்பனம் பழம் விழுந்தது போல.

**காமனை:** அடைந்த பொருளை அனுபவிக்க வேண்டுமென்னும் இச்சை எதுவோ அதுகாமனையாம்.

**காரணதேகத்தின் தர்மம்:** ஆத்மா இல்லை ஆத்மா தோற்றவில்லையென்ற இருவகை ஆவரணத்திற்கு ஏதுவாந்தன்மையும் சிதாபாசனோடு கூடிய ஸ்தூலசூட்சும சரீரங்களும், கர்த்திருத்துவம் மற்றும் அவற்றின் தந்திரங்களுமாகிய பிரபஞ்சவடிவ விட்சேபத்திற்கு ஏதுவாகிய இரண்டு வித ஆவணரங்களும் காரணதேகத்தின் தர்மங்களாம்.

**காரணதேகம்:** ஸ்தூல, லிங்க தேகங்களுக்கு ஏதுவாயிருத்தலின் அஞ்ஞானம் காரணதேகம் எனப்படுகிறது.

**காரண அஞ்ஞானம்:** பிராந்திக்கு ஏதுவான அஞ்ஞானத்தினைக் காரண அஞ்ஞானம் என்பர்.

**காலான:** வலியான.

**காரியசரீரம்:** கர்மேந்திரியங்களுள் வாக்கும், ஞானேந்திரியங்களில் சிங்குவையும் வாயிலிருக்கும், உதான வாயுவும், மனதும் கண்டத்திலேயிருக்கும், பிராணவாயுவும், புத்தியும் இதயத்திலே இருக்கும், சமானவாயுவும், சித்தமும் நாபியிலிருக்கும்

அபானவாயுவும் பாயுருவும் குதத்திலிருக்கும் வியானவாயுவும் ஞானேந்திரியங்களுள் துவக்கும். அகங்காரமும், சர்வாங்கமும் வியாபித்திருக்கும்.

உச்சியிலே உள்ளமும். கருவிழி நுனியிலே சட்சு இந்திரியமும் காதிற்குள்ளே சுரோத்திரியமும் கழுத்திற்கு மேலே தனித்தனியே இருக்கும்.

கை. கால் குய்யங்களில் பாணி. பாதம். உபஸ்தம் மூன்றும் தனித்தனியே இருக்கும். இப்படித் தூல சரீரதத்துவங்கள் ஆறு. அதில்குடி. புகுந்த சூட்சும சரீர தத்துவங்கள் இருபது. ஆகத்தத்துவங்கள் இருபத்தாறும் பஞ்ச பூதங்களின் காரியமான படியினாலே ஒருமைப் பாடாகக் காரிய சரீரமென்று சொல்லப்படும்.

**கிருபணத்தன்மை:** கிடைத்த தனம் முதலியவற்றைச் செலவு செய்யாதிருக்க வேண்டுமென்னும் இச்சை. லோபத்தின் பத்தினியாகிய கிருபணத்தன்மையாம்.

**கிரியாசாத்திய ராஜயோகம்:** சகல பிரவிர்த்திகளையும் விட்டு சிறிதளவு சாத்வீகஆகாரமுடையவனாய். சப்தம் முதலிய தடைகள் இன்றியதும். கொசு முதலியன இல்லாத இடத்திலும் காற்றோட்டமுள்ளதுமான ஏகாந்த இடத்தில் இலவம் பஞ்சு முதலியவற்றிலான ஆசனம் விரித்து தெற்குத் திசையை நோக்கி உட்கார்ந்து. குருவினால் சொல்லப்பட்ட நியமத்தில் நிற்பவனாய். சமாதி சித்தித்த

குருவினது சக்தியினாலும். பின் அயஸ்காந்த முதலிய நிமித்தத்தாலும் எந்தச் சமாதியைச் சித்தி செய்கின்றானோ அது கிரியாசாத்திய ராஜயோகமாம்.

**கிருதகிருத்தியன் :** செய்ய வேண்டியவற்றைச் செய்தவன்.

**கிருஷத்தன்மை:** மெலிவு.

**கிருஷ்ணன் :** 'கிருஷ்' என்னும் தாது சத்தையின் வாசகம். 'ண' என்னும் பிரத்தியயம் ஆனந்தத்தின் வாசகம். இவ்விரண்டின் ஐக்கிய ரூபமான பரப்பிரம்மமே 'கிருஷ்ணன்' என்ற பெயராகும்.

**கிருஷ்ணகர்மம்:** சகாம பாவம் எதுவோ அது கிருஷ்ணகர்மமாம்.

**கிலேசம் :** துக்கம் (பஞ்சக்கிலேசம்)
அவத்தை. அஸ்மிதை. இராகம். துவேஷம். அபினிவேசம். முதலியன.

**கிரியாசாதனம் :** வியானாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும் ஒன்றாய்க் கூடினது கொண்டு கர்மேந்திரியம் ஐந்தின் வழியினாலும் ஐந்து தொழில்களையுஞ் செய்து முடிக்கும். இந்த வாயுக்களைந்தும் கர்மேந்திரியங்களைந்தும் ஆகப்பத்தும்ரஜோம்சமானபடியால் கிரியாசாதனமாயின.

**கிளிஞ்சல்:** காக்காய்சிப்பி.குளக்கரைகளில் கிடைக்கும் ஒரு வகை சிப்பி இனம்.

**கிரந்தி** - முடிச்சு.

**கிரீடி** : வினவுதல் (வினவிய) கேட்டல் (கேட்ட).

**குணத்திரயம்** : மனம். வாக்கு. காயங்களில் செய்யப்படும் கர்மங்கள்.

**குண்டலம்:** சிறுவட்டம்.

**குரோதம்** : பிரதி கூல பதார்த்தங்களைக் காணினும். கேட்பினும், நினைப்பினும் அவைகளைப்பற்றி அந்தக்கரணத்தின்கண் எழுகின்ற துவேஷமே வெகுளியென்றும் குரோதம் என்றும் சொல்லப்படும். இதனால் சரீரநடுக்கம். வியர்வை. பற்கடி. பெருமூச்சு. குரூரப்பார்வை முதலியன ஏற்படும்.

**குசை** : தருப்பைப் புல்.

**குசலன்** : மிகவும் புத்திசாலி.

**குசங்க நீக்கம்:** பேதவாதிகளின் சங்க வடிவ நீக்கமே குசங்க நீக்கமாகும். திடஞானத்திற்கு பின்னும் கூட ஜீவன் முக்தியின் பொருட்டு பேதவாதிகளின் சங்கம் நீக்கத்தக்கதாம்.

**குடீசகன்:** சந்நியாசத்தில் ஒருவகையைக் கடைப்பிடிப்பவன் யாத்திரைக்குச் சக்தியின்மையால் எங்கேனும் குடிசை ஏற்படுத்தி இருத்தல் குடீசகசந்நியாசம் எனப்படும்.

**குணாதீதன்:** மூன்று குணங்களையும் சமமாகப் பாவிப்பவன்.மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டவன்

**கும்பகம்:** பூரித்த சுவாசத்தை நிறுத்துதல் கும்பகம் எனப்படும்.

**குருசேவை:** சரீரம், மனம், வாக்கு ,தனம் முதலியவற்றின் அர்ப்பணமாகும். குருசேவையினால் மலதோஷ நிவர்த்தியும் விட்சேபதோஷ நிவர்த்தியும் உண்டாகின்றன.

**குலாயந்தனில்:** கூட்டில்.

**குரவர்கள்:** பூருவ ஆச்சாரியர்கள்.

**குரு:** 'கு' அஞ்ஞானம் 'ரு' ஞானம். ஆகவே ஞானத்தால் அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்பவரே குரு.

**குடம்பை:** குளவிக்கூடு.

**கூடஸ்தன் :** கொல்லனது உலைக்கூடத்தைப்போல இருப்பதனாலும் கபட வடிவ மாயையின் பரினாமமான அந்தக்கரணத்தில் இருப்பதாலும். நிச்சலத்தன்மையாக நிற்பதாலும் கூடஸ்தன் என்பதாம். நிர்விகாரமாக இருக்கின்ற அதிஷ்டான சைதன்னியமே அந்தர்த்தனத்தில் வளைபட்டது "கூடஸ்தன்" ஆகும். சிதாபாசன், விருத்தி, கடம் இம்மூன்றையும் காண்கின்றவன்.

**கூடம்:** மறைந்து.

**கெல்லிய:** அகழ்ந்த.

**கேவலம்:** ஐக்கியம்.

**கைதவங்களை:** அசத்தியமான வார்த்தைகளை.

**கோடி நூல்களின் சாரம்:** பிரம்மம் நித்தியம். ஜகத்து மித்தை ஜீவன் பிரம்மமேயன்றி வேறில்லை என்பதாம்.

**கோதில்:** குற்றமற்ற.

**கோஷம்:** கிராமம். கோசகாரமென்னும் புழுவின் முட்களினால் செய்யப்பட்ட கூடு. அந்தப்புழுவிற்கு கூடு எப்படி கிலேசத்திற்கு ஏதுவானதோ அப்படியே பஞ்சகோசங்களும் ஆத்மாவிற்கு ஆவரண வாயிலாகக்

கிலேசத்திற்கு ஏதுவாக இருத்தலின் கோசம் எனப்பட்டது. கத்தியை மூடியிருக்கும் உறையும் கோசமெனப்படும்.

**கோன்:** அரசன், தலைவன்

**கோகிலம்:** குயில்

**கோடு:** கொம்பு, இலை

**கௌமுதிகாநியாயம்:** ஒரு தேகத்தில் ஒரு ஆத்மாவே உள்ளது அப்படியிருந்தும், பாதத்தின் வலியை சரீரம் முழுவதும் அனுமதிப்பதில்லை. சிரசின் சுகத்தை சரீரம் முழுவதும் அனுபவிப்பதில்லை. அந்தந்த உறுப்பில் மாத்திரம் அனுபவிக்கப்படுகிறது. எப்போது ஒரு தேகத்தில் சர்ம பேதத்தினால் சுகதுக்கங்களினது விலட்சணத் தன்மையின் அனுபவமுண்டாகிறதோ அப்போது பின்ன அபின்ன சரீரங்களில் கர்ம பேதத்தால் சுகதுக்கங்களினது விசித்திரத்தன்மையின் அனுபவம் உண்டாகாது.

**கௌரத்தன்மை:** திண்மை.



**சம்சயம்:** சங்கை, சந்தேகம், ஐயம், வினவுதல். இரு கோடியினை (இரண்டு பக்ஷங்களையுடைய ஞானத்தினைச் சம்சயமென்பர்.

**சஜாதீயம்:** சம ஜாதி உடையதனோடு உள்ள சம்பந்தம்.

**சகாம கர்மம்:** பலனை விரும்பி செய்யப்படும் காரியங்கள்.

**சகமார்க்கம்:** பக்தியை அடிப்படையாகக் கொண்ட மார்க்கம். சுந்தரர். இறைவனை நண்பனாகப் பாவித்தல்.

**சன்மார்க்கம்:** மாணிக்கவாசகர். இறைவனை நண்பனாகப் பாவித்தல்.

**சத்புத்திரமார்க்கம்:** சம்பந்தர். இறைவனை நண்பனாகப் பாவித்தல்.

**சம்பாவனை:** நிகழ்ச்சி. தட்சணை. காணிக்கை.

**சகஜதாதாத்மியம்:** அகங்காரத்திற்கு சிதாபாசனோடுள்ள தாதாத்மியம்.

**சம்பிரஞ்ஞாத சமாதி:** ஷிப்தம். மூடம். விஷிப்தம் ஏகாக்கிரம். நிருத்தம்.

**சங்கற்பம்:** நினைத்தல். சத்தியம்.

**சங்காதம்:** கூட்டம். சேர்க்கை.

**சர்வவிபூதி :** பலம். சக்தி. ஐசுவரியம். முதலியன

**சஹசரிதம்:** கூட இருப்பது.

**சம்ரட்சணம்:** எஞ்ஞும் முதலியவற்றில் உலகைப் பிரவிர்த்திப்பித்தல், நன்றாகப் பாதுகாத்தல்.

**சம்:** நன்றாக.

**சகித்தல்:** சுகம் வந்த போது சந்தோசமும், துக்கம் வந்த போது வருத்தமும் அடையாதிருத்தல்.

**சத்துரு:** தான் செய்த அபகாரத்தை நாடாமற் கேவலம் தனது குரூர சுபாவத்தாலேயே அபகாரம் செய்பவன் சத்துரு.

**சமசித்தம்:** ராகத்துவேஷமில்லாத புத்தி.

**சகாமபக்தர்:** ஆர்த்தன் சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி, இம்மூவரும் சகாமபக்தர்.

**சமாதி:** தியானம் பண்ணுகிறவனையும் தியானத்தையும் இழந்து தியானிக்கப்படுகிற வஸ்து மாத்திரமாகயிருக்கிற சித்தமே சமாதி எனப்படும்.

**சத்:** அத்துவிதப்பிரம்மம் விஜாதீயம், சசாதீயம், ஸ்வகதபேதம் என்ற மூன்றுமற்றது சத். அசையாமல் கெம்பீரமாய் பிரபையுமல்லாமல் அந்தகாரமுமில்லாமல் அவாங்மன கோசரமாயிருக்கிற பிரமமே சத். மூன்று காலத்திலும் பாதிக்கப்படாதது சத்.

**சக்திவிருத்தி:** சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சாட்சாத் சம்பந்தம் (பிரவிருத்தி) எதுவோ அது சப்தத்தின் சக்திவிருத்தியாம். அந்த சக்தி விருத்தியினால் எந்த அர்த்தம் அறியப்படுகிறதோ அது வாச்சியார்த்தம் எனப்படும். இதுவே சக்கியார்த்தம், போத்தியார்த்தம், விதேயார்த்தம் முக்கியார்த்தம் என்றும் சொல்லப்படுகிறது.

**சபளப்பிரம்மம்:** மாயையோடு கூடிய பிரம்மம்

**சத்லட்சணம்:** நல்லிணக்கம், அவ்வியாப்தி, அதிவியாப்தி, அசம்பாவமென்னும் மூன்று தோஷங்களுமின்றிய லட்சணத்தினை சத்லட்சணம் என்பர். பாதயோக்கிய சொரூபமுடையதனை சத்லட்சனமென்பர்.

**சத்த சத்விலட்சணம்:** பாதயோக்கிய சொரூபமுடையதனை சத்த சத்விலட்சமென்பர்.

**சம்சர்க்காத்தியாசம்:** கற்பித தாதாத்மிய சம்பந்தத்தினை சம்சர்க்காத்தியாசம் என்று கூறுவர்.

**சமாதிஷட்கசம்பத்தி:** ஆறு சாதனங்களின் அடைவையே சமாதி ஷட்கசம்பத்தி என்று கூறுவர்.

1. வெளி விஷயங்களினின்றும் மனதைத் தடுத்தலே **சமம்.**

2. வெளி விஷயங்களினின்றும் இந்திரியங்களைத் தடுத்தலே **தமம்.**

3. வாந்தியினைப்போல விட்டபின் மீண்டும் வந்தடைந்த விஷயத்தினை **விடல்** அல்லது உபரதி என்பர்.
4. துவந்துவ (குளிர், உஷ்ணம் முதலிய சீதோஷ்ண) தர்மங்களைச் சகிக்கும் இயல்பினை திதீட்சை என்பர். இதையே **சகித்தல்** என்றும் கூறுவர்.
5. சாஸ்திர வாக்கியத்திலும் குருவாக்கியத்திலும் உண்டாகும் விசுவாசத்தினைச் **சிரத்தை** யென்பர்.
6. சொரூபத்தில் சித்தம் ஏகாக்கிரமாதலைச் **சமாதானம்** என்பர்.

**சந்நியாசம்:** இது குடீசகம், பகூதகம், ஹம்சம், பரமஹம்சம் என நான்கு வகைப்படும்.

**சர்வசாட்சி:** தத்பதம், துவம்பதம், அஸிபதம் மூன்றுக்கும் சாட்சியாயிருப்பது சர்வசாட்சியாம்.

**சத்தியம்:** தினம், மாதம், வருடம் முதலிய காலங்கள் தோறும், ஜனனங்கள் தோறும், தோற்றுகின்ற அவஸ்தாதிரயங்களில் தோன்றி நசிக்கும் பஞ்சகோசங்களுக்கு வேறாய, அவைகள் உண்டாவதற்கு முன்னும் உண்டாகி, அழிந்த பின்னும், மத்திய காலத்திலும் என்றும் ஒரே பிரகாரமாயிருத்தலால் சத்தியம்.

**சச்சிதானந்தம்:** சத்து+சித்து+ஆனந்தம் என்ற மூன்று பதங்களின் சேர்க்கையே சச்சிதானந்தமாகும். விளங்குகின்ற காலங்கள் மூன்றும் கெடாதிருப்பது

சத்தாகும். வேறுபாடு அறிதல் சித்தாகும். அநுபூதியே ஆனந்தமாகும்.

**சகத்தின் கூறுகள்:** அசத்து, மூடம், இடர்.

**சகர்ப்பம்:** பிரணவமாகிய ஓம்காரத்தின் உச்சாடணத்தோடு கூடிய பிராணாயாமம்.

**சகல பதார்த்தங்களின் அம்சம் ஐந்து:** அஸ்தி (இருக்கிறது) பாதி (விளங்குகிறது) பிரியம். நாமம் (பெயர்) ரூபம் (வடிவம்) இவற்றில் முதல் மூன்றும் பிரம்ம வடிவம். பின் இரண்டும் மாயாவடிவம்.

**சரம்:** சரித்தல், நடத்தல், ஓடுதல்.

**சம்ஸ்காரம்:** தொடர்வினை, முன்வினை, பழவினை.

**சராயுஜம்:** கருப்பையினின்றும் தோன்றும் மனிதர் மிருகம் முதலியன.

**சரதமாய்:** உள்ளபடி.

**சடன்:** மூடன்.

**சட்பாவவிகாரம்:** இது ஷட்பாவவிகாரம் என்றும் கூறப்படும். இவைகள் ஜன்மம், அஸ்தி, விர்த்தி, விபரிணாமம்.அபட்சயம், விநாசம்.

**சம்வற்சரம்:** தமிழில் ஆண்டு, வருடம். மலையாளத்தில் சம்வற்சரம்.

**சங்கிரகம்:** சுருக்கமாக.

**சதுஷ்டயம்:** நான்கு ஏற்ற முறைகள்.

**சம்சார தர்மம்:** சங்கம், சஜாதிய, விஜாதிய, சுவகதபேதம், விகாரம், அஸ்தித்துவம், விருத்தி, விபரிணாமம், அபஷயம், நாசம் என்பன சம்சார தர்மங்களாம்.

**சர்வாந்தர்யாமித்வம்:** சர்வ ஜீவர்களின் புத்திகளிலிருந்து தேகாதிப்பாவைகளை அபிமானமாகிற கயிற்றால் பூட்டி ஜன்மாந்திர கன்ம வாசனைகளின்படி விதிநிஷேத வழியே ஆட்டி வைக்குந் தன்மையே சர்வாந்தர்யாமித்துவம் என்பதாம்.

**சம்சயபாவனை:** சந்தேகம்.

**சத்திய:** என்றும் இருந்து விளங்கிக்கொண்டிருப்பது.

**சதுரர்:** அறிஞர்.

**சர்வசக்தித்துவம்:** சர்வ காரியப்பிரபஞ்சத்தின் காரணரூபமாகிய சர்வசக்திகளையுமுடைய தன்மை சர்வ சக்தித்தன்மை.

**சர்வகாரணத்துவம்:** தூல, சூட்சுமரூப சர்வ ஜகத்திற்கும், அபின்ன நிமித்த உபாதான காரணத் தன்மையே சர்வ காரணத்துவமாம்.

**சர்வநியந்திருத்துவம்:** சமுத்திரம், அணைகடவாமலும் சூரிய சந்திராதிக்ள் நியமம் தவறாமலும் இருக்கும்படி அவைகள் அனைத்தையும் தமது ஆணையில் நிறுத்தும் தன்மையே சர்வநியந்திருத்துவம்.

**சந்ததமும்:** சதாகாலமும்.

**சம்பந்தாத்தியாசம்:** கற்பித தாதாத்மிய சம்பந்தத்தினை சம்பந்தாத்தியாசம் என்பர். இதை சம்சர்காத்தியாசமென்றும் கூறுவர்.

**சம்வாதிப்பிரம்மம்:** சேதனத்திற்குப் பரமார்த்த சத்தையும் சகலப் பிரபஞ்சத்திற்கும் பிரதிபாஸ சத்தையுமுண்டு. அதில் ஜாக்கிரப்பிரபஞ்சம் சம்வாதி மணியின் பிரபையில் மணியின் பிரமத்தைப்போல ஸபலப் பிரவிருத்தியை உண்டுபண்ணும் பிரமமாம்.

**சம்சாரக்கிரந்தி:** பந்தம்.

**சமிக்கும்:** நசிக்கும்.

**சரஅசரம்:** நிற்பன, நடப்பன.

**சரீர அர்ப்பணம்:** குருவின் ஆணையை பரிபாலித்தல்.

**சர்வாத்மா:** எல்லா வடிவத்தையும் சர்வாத்மா என்பர்.

**சர்வாத்மத்தன்மை:** சர்வ பூதங்களிலும் ஆத்மாவின் (தன்னுடைய) பகவத் பாவத்தைக் காண்கின்றானோ பகவத் வடிவத்தை தன்னிடத்து பூதங்களைக் காண்கின்றானோ. அவன் பாகவத பக்தர்களில் உத்தம ஞானியாகிய பக்தனாவான் என்னும் ஓதப்புரோத பாவவடிவ தன்மையே சர்வாத்மத்தன்மையாகும்.

**சகஜ சமாதி:** சுத்த சித்தமுடைய புருஷன் சாஸ்திரத்தினாலும் குரு கிருபையாலும் பிரம்மாத்ம ஐக்கிய நிச்சயமாகிய தத்துவ ஞானத்தையடைந்து ஜீவன் முக்தி விலட்சணானந்தத்தின் அனுபவத்தின் பொருட்டு சகலப் பிரவிருத்திகளையும் விட்டு ஏகாந்தமான இடத்தில் இருந்து கொண்டு பிரம்மாகாரவிருத்தியை அப்பியாசம் செய்ய வேண்டும். இதனாற் சகஜ சமாதியாகும். இதை ஞான சாத்திய ராஜயோக மென்றும் கூறுவர். இது கீதையின் ஆறாவது அத்தியாயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானாலும் அபரோஷா அனுபூதியில் ஸ்ரீ சங்கராச்சாரியாராலும் நிரூபணம் செய்யப்பட்டுள்ளது.

**சக்கிய சம்பந்தி:** லட்சணா விருத்தியினால் தோற்றுவதாகிய அர்த்தத்தினை லட்சியார்த்த மென்பர். இது தான் சக்கிய சம்பந்தி என்றும் கூறப்படுகிறது.

**சக்கியார்த்தம்:** சக்தி விருத்தியினால் தோற்றுகிற அர்த்தத்தினை சக்கியார்த்தம் என்பர். இதனையே வாச்சியார்த்த மென்றும் கூறுவர்.

**சவிகற்ப்பசமாதி:** க்ஷணம் தோறும் எழும்புவதாகிய புத்தி வடிவ கேவல விபரீத பாவனை. ரஜ்ஜீவில் சர்ப்பத்தின் நிச்சயம் போல ஆத்மாவின் யதார்த்த சொரூபத்தினும் விபரீதமான நிச்சயம் உண்டாகுமாயின் அப்போது அநாத்மாகார விருத்திகளின் நீக்கத்தோடு கூடிய ஆத்மாகார விருத்திகளின் பிரவாக வடிவ நிதித்தியாசனத்தை சவிகற்ப்ப சமாதி என்பர்.

**சங்கப்பிரக்ஷாளனம்:** வாயினால் ஜலத்தைக் குடித்து மூலத்துவாரத்தால் வெளிப்படுத்துதல் சங்கப்பிரக்ஷாளனமாம்.

**சங்கம்:** சஜாதீய சம்பந்தம், விஜாதீய சம்பந்தம் சுவகத சம்பந்தம் மூன்றும் சங்கமாகும். மேலும் தேகாதிகளிலுள்ள அகந்தையும் வீடு முதலியவற்றில் உள்ள மமதையும் சங்க மெனப்படும்.

**சஞ்சிதம்:** ஜன்மாந்தரங்களின் ஆகாமிய கர்மங்கள்

அந்தக்கரண உபகித சாட்சியின் கண்ணுள்ள அஞ்ஞானத்தின் ஆவரண சக்தி வடிவக் களஞ்சியத்திலிருக்கின்றன. அக்கர்மங்களே சஞ்சித மெனப்படுகின்றன.

**சஞ்சித கருமநாசம்:** சகல சஞ்சித கர்மங்களும் ஞானாக்கியினால் நாசமாகின்றன. ஏனெனில் தனது ஆசிரயமாகிய அஞ்ஞானத்தின் ஆவரண சக்தி நாசமாயிற்று. ஆதலால் ஆசிரயமில்லாமையால் சகல சஞ்சித கர்மங்களும் நாச முண்டாகின்றன.

**சத்தியபேதம்:** பாரமார்த்திகம் வியாவகாரிகம். பிராதிபாஸிகம் என மூன்று விதமாயிருக்கும்.

**சத்ரூபம்:** ஆத்மா எல்லாக் காலங்களிலும் உள்ளபடியே பிரகாசமுடையதாய் நிலைத்திருக்கின்றது. இவ்வாறு அவ்வியபிசாரியாய் இருத்தலால் ஆத்மா சத்ரூபமாம்.

**சத்துவாபத்தி:** ஞான சப்த பூமி ஏழினுள் நான்காம் பூமி. இப்பூமியையடைந்தவன் பிரம்ம வித்தென்னும் தன்மை உடையவனாவான்.

**சப்தவிருத்தி:** சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் சப்தத்தின் விருத்தி என்பதாம்.

**சப்தப்பிரமாணம்:** திருஷ்டமாகிய இந்த லோகத்தோடு சுருதமாகிய சுவர்க்காதி லோகங்களையும் அசத்தென்றறிந்து அதனைத் தியானிக்கலாகாது.

அனுபவிக்கவும் கூடாது. அந்தத் திருஷ்ட சுருதங்களின் தியான முதலியவற்றில் சம்ஸ்ஹாரத்தையும் தனது நாசத்தையும் எவன் அறிகின்றானோ அவன் ஆத்மஞானியாவான். என்ற ஸ்ரீபாகவதத்தின் வாக்கியம் சப்தப்பிரமானங்களாம்.

**சமஸ்டி:** தோப்பு - பன்மை.

**சமுதாயம்:** பொது.

**சரு:** அன்னம்.

**சயம்:** குறைவு.

**சமம்:** விஷய வாசனையாகிய பலத்தினால் உன் மத்தமாகிய மனமென்னும் யானை எதுவோ அதனை விஷயங்களில் அத்தியந்த தோஷ திருஷ்டி வடிவமாகிய அங்குசத்தினை ஜெயித்தல். (சுவாதீனம்செய்தல்) சமம் என்பதாம்.

**சமஷ்டி ஈசுவர உபாதி:** சமஷ்டிகாரணசரீரம். சமஷ்டிசூட்சுமசரீரம். சூட்சுமசரீரம். தூலசரீரம் அதன்விருத்திகளிலுமுள்ள சேதனமாத்திரம் சாஷியாம்.

**சமஷ்டி பிரபஞ்சம்:** விராட்டு முதலிய சரீரமும். சர்வஞ்ஞத்தன்மையும். சிருஷ்டியை உண்டு பண்ணும் தன்மைகளும். அவற்றின் தர்மங்களும். உற்பத்தி

முதலியவற்றின் அவஸ்தைகளும் சமஷ்டி பிரபஞ்சமாம்.

**சமாதானம்:** பிரம்மமாகிய லட்சியத்தில் சித்தம் ஏகாக்கிரமாயிருத்தலை சமாதானமென்பர்.

**சம்சயகிரந்தி:** இரண்டு கோடிகளை அதாவது இது ரஜ்ஜீவா அல்லது சர்ப்பமா என்னும் வடிவினதாகிய இரண்டு கோடிகளை உடையது.

**சமாஜம்:** பதங்களின் சந்தி (பகவத் + கீதை).

**சாமக்கிரியை:** சாதனங்கள்.

**சாமானிய வடிவ ஞானம்:** தோற்றுகின்ற ஜகத்து அத்தியாச ரூபமாயிருத்தலால் மித்தையாக இருந்தாலும் உபாயமின்றி அது கெடுகிறதில்லை. ஆனால் ஞானம், பக்தி அல்லது கர்மம் என்ற யாதேனும் ஓர் உபாயத்தால் தான் கெடும். எவனுக்குப் பிரத்தியகபிந்நபிரம்ம வடிவ அதிஷ்டானத்தின் அபரோட்சஞானம் உண்டாகின்றதோ, அவனது திருஷ்டியினால் காரண சப்தப்பிரபஞ்சம் அதன் ஞானம் என்பவற்றில் நிவர்த்தியுண்டாகிறது.

**சாரநிவிருத்தி:** காரணத்தோடு காரியத்தின் லய வடிவ இரண்டாவது நிவிருத்தி எதுவோ அது சாரநிவர்த்தியாம். அதாவது மோட்சத்தில் உபயோகமுள்ளதாயிருத்தலின் சிரேஷ்டமாம்.

**சாத்வீகவிருத்தி:** சாந்தம். (சத்துசித்துஆனந்தம்) சச்சிதானந்தத்தைத் தரும்.

**சாந்தி:** அந்தக்கரணத்தின் உபசமம்.

**சாஸ்திர ஜந்ய:** சரீரம் ஆன்மா அல்ல வென்னும் பரோட்ச ஞானம்.

**சாட்சாத்காரம்:** தரிசனம்.

**சாகரம்:** கடல்.

**சாந்தம்:** சலனமற்ற அமைதி.

**சாங்குசம்:** தண்டி.

**சாட்சிசேதனம்:** அந்தக்கரணத்தினாலும் அதன் விருத்தியினாலும் உபகிதமான (வரையப்பட்ட) சேதனம் சாட்சி சேதனமாம்.

**சாங்குசத்திருப்தி:** ராஜா முதல் பிரம்ம லோக பரியந்தமுள்ள விஷயங்களினால் உண்டாகும் திருப்தி தன்னினும், அதிகமான வேறு விஷயத்தின் இச்சை வடிவ அங்குசத்தோடு கூடியதாயிருத்தலின் சாங்குசத் திருப்தியாம்.

**சாத்தியசிரவணம் :** இதை அங்கி சிரவணம்

என்றும் கூறுவர். அபரோட்ச ஞானத்தின் உற்பத்தி நிமித்தம் குருமுக வாயிலாகத் தத்துவமஸி முதலிய மகாவாக்கியங்களது அர்த்தத்தின் உபதேச வடிவமே சாத்திய சிரவணமாகும்.

**சாத்துவீக அகங்கார சிருஷ்டி:** சாத்வீக அகங்காரத்தினின்றும் அந்தக்கரண சப்தத்திற்கு வாச்சியமாகிய மனம், திக்கு, வாயு, சூரியன், வருணன், அசுவினி குமாரன் என்னும் ஐந்து ஞானேந்திரியங்களின் தேவதைகளும், அக்கினி, இந்திரன், வாமனை, பிரஜாபதி, இயமன் என்னும் ஐந்து கன்மேந்திரியங்களின் தேவதைகளும், மனதிற்கு தேவதையாகிய சந்திரனும், புத்திக்குத் தேவதையாகிய பிரம்மாவும், சித்தத்திற்குத் தேவதையாகிய வாசுதேவனும், அகங்காரத்திற்குத் தேவதையாகிய உருத்திரனும் உண்டானார்கள்.

**சாமானிய சேதனம்:** இது அஞ்ஞானத்தின் ஆசிரயமும் விஷயமுமாம். யான் பிரமத்திற்கு வேறாகிய பிரத்தியகாத்மா. நான் அஞ்ஞானி பிரம்மத்தையறியேன் என்னும் அனுபவத்தினாலேனும் அல்லது சுழுத்தியிலுள்ள சேதன அஞ்ஞானங்களினது அவிரோதத்தின் அனுபவத்தினாலேனும் சித்தித்துள்ளது.

**சார்வபௌமான்:** சகல பிருதியையும் ஆள்பவன் (சக்கரவர்த்தி).

**சாக்யம்:** நட்பு. தோழமை.

**சாட்சி:** அந்தக்கரண உபகித சேதனம். உதாசீனமாய் சமீபத்திலிருந்து கொண்டு அறிவதாகிய சேதனம். அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலுமுள்ள சேதனமாத்திரம் சாட்சியாம்.

**சாஸ்திரீயம்:** சீவத்துவிதம் (ஈசுவர. சீவசிருஷ்டி) இரண்டு விதமாய் இருக்கும். வேதாந்திர சாஸ்திரம் சொன்னபடி கேட்டு மனதிலே நிர்ணயித்த தத்துவ சித்தாந்த யுத்திக்கிரமம் முதலான அந்தக்கரணபிரபஞ்சம் சாஸ்திரீயம் என்று சொல்லப்படும்.

**சாட்சிபாஷியம்:** இது பிராதிபாஸிகம். ஜீவசிருஷ்டி என்றும் அழைக்கப்படுகிறது. அவித்தையின் விருத்தியினாலேனும் அல்லது கேவல மனதின் விருத்தியினாலேனும் எதனைச் சாட்சி விளக்குகின்றதோ அது சாட்சிபாஷியம்.

**சாமாநிய அம்சம்:** எது பிராந்தி காலத்திலும். பிராந்தியின் நிவிருத்தி காலத்திலும் தோற்றுகின்றதோ அதனைச் சாமானிய அம்சம் என்பர். இதனையே ஆதாரமென்றும் கூறுவர்.

**சாதாரண காரணம்:** சகல காரியங்களின் காரணத்தினைச் சாதாரண காரணமென்பர். இத்தன்மையன ஈசுவரன். அவர்ஞானம். இச்சை. பிரயத்தனம். அதிருஷ்டம். பிராகபாவம். பிரதிபந்தகாபாவம். காலம். திக்கு என்னும் ஒன்பதாம்.

**சிரவணாதிகள்:** மூன்று வகைப்படும். அவை சிரவணம். மனனம். நிதித்தியாசனம் என்பனவாம்.

**சிரவணம்:** சகல வேதங்கட்கும் ஆறு லிங்கத்தினாலர்த்தவிசாரம் பண்ணி பிரமதாற்பரியமாய் காண்கிறதே சிரவணம். கேட்ட ஞானம். ஆறு லிங்க வடிவ யுக்திகளால் வேதாந்தத்தின் உபநிடதங்களின் தாற்பரியத்தை நிச்சயித்தல் சிரவணமாகும்.

**சிதாபாசனது அவஸ்தைகள் ஏழு:** அஞ்ஞானம். ஆவரணம். விட்சேபம். பரோட்சம். அபரோட்சம். துக்க நிவர்த்தி. தடையற்ற ஆநந்தம்.

**சிரகாலம்:** பதங்களின் சந்தி (பகவத்+கீதை)

**சித்தாசனம்:** இடது காற்குதியை ஆசனத்தின் கீழ் அழுத்தி வலது காற்குதியை இலிங்கத்தின் மேல் வைத்து உட்கார்ந்து சரீரத்தை தடிபோல் நிமிர்த்தி பார்வையைப் புருவ நடுவில் வைத்தல் சித்தாசனமாம்.

**சித் ஜடக்கிரந்தி:** புத்தி (அகங்கார) சிதாத்மாக்களது தாதாத்மிய அத்தியாசவடிவ இருதயக்கிரந்தி சித் ஜடக் கிரந்தியாம்.

**சிரௌதம்:** இந்தப் பிரம்மத்தில் நாநா என்பது சிறிதுமில்லை. இங்ஙனமன்று, அங்ஙனமன்று என்றல் முதலிய சுருதி வாக்கியங்களால் உண்டாகிய முக்காலத்தன்மையின் நிச்சய வடிவ வித்வான்களது சித்தத்தில் ஆருடமானது.

**சிவபிரார்த்தனை:** சம்புவே! தேக திருஷ்டியினால் நான் உன்னுடைய தாசன். திரியம்பரரே, முக்கண்ணணரே, ஜீவ திருஷ்டியினால் (உபாதியோடு கூடிய சேதன திருஷ்டியினால்) நான் தங்களுடைய அம்சமாயிருக்கிறேன். எல்லாவற்றின் ஆத்மாவே, ஆத்ம திருஷ்டியினால் தாமே நான் என்னும் இத்தன்மைய எனது புத்தி சர்வ சாஸ்திரங்களாலும் நிச்சயத்தை அடைந்திருக்கின்றது.

**சிருஷ்டி:** சித்திர படத்தை விரித்தாற்போல தம்மிடத்திற் பிரபஞ்சத்தை அவரவர் கூர்மவசத்திலே தோற்றுவிக்கிறதே சிருஷ்டியாகும்.

**சிருஷ்டி, திருஷ்டி வாதம்:** இதனையே வியவாகரிக பக்ஷமென்பர். இதில் பரமார்த்த சத்தை, வியவகாரசத்தை, பிராதிபாஸிகத்தை எனும் மூன்று சத்தைகள் உண்டு. முன்னர் சிருஷ்டி, பிரபஞ்சத்தின் உற்பத்தி உண்டாயிருந்து பின்னர் காலாந்தரத்தில் திருஷ்டி அதாவது அதன் ஞானம் உண்டாகும் என்னும் வாதமே சிருஷ்டி திருஷ்டி வாதமாகும்.

**சிரேயசு:** தர்மம் அல்லது மோட்சத்தில் விருப்பம்.

**சிறிது இருந்தாலும் துன்பம் தருவன:** நெருப்பு, விஷம், சத்ரு, கடன், அன்பு, அசுத்தவாசனை

**சித்தர்:**
பிரயத்தனமில்லாமலே ஜனனமாத்திரத்தினாலே தர்மம், ஞானம்.வைராக்கியம் ஐசுவரியத்தன்மை முதலிய குணங்களும் பரமார்த்தவஸ்து நிச்சயமும் அடைந்துள்ள புருஷர் சித்தர் எனப்படுவார்.

**சித்து:** சர்வப்பிரகாச ஞானசொரூபமாயிருப்பது.

**சிம்மீலிக்கும்:** கண்களை மூடுதல்.

**சித்:** பரமாத்மா ஒரு உபாதியுமற்று தானாய் இருக்கும்போது சித்தென்று சொல்லப்படும், கேடின்றிய பிரகாசம் சித்தெனப்படும்.

**சிதாபாசன்:** கடமாத்திரத்தைக் காண்கின்றவன் சிதாபாசன். சித்துப்போல் தோன்றியும் சித்லட்சணம் இல்லாதவன் சிதாபாசன்.

**சிரத்தை :** வேதாந்த சாஸ்திர வசனத்திலும் குரு வாக்கியத்திலும் உண்டாகும் விசுவாசம் சிரத்தையாம்.

**சீவன் முக்தி:** தேகாதிப்பிரபஞ்சம் தோற்றிக் கொண்டிருக்க பிரம்ம சொரூபமாக நினைத்தலை சீவன் முக்தியென்பர்.

**சீவன்முக்தியின் விலட்சணானந்தம்:** நிராவரண பரிபூரண விருத்தியோடு கூடிய ஆனந்தம்.

**சீவன்:** கூடஸ்தரிடத்திற் கற்பிதமான அந்தக்கரண பிரதிபிம்பன் சீவன்

**சீவன் முக்தன்:** யாதொரு புருஷனுக்கு சகலபிராணிகளாலேயும் அனுபவிக்கப்படுகின்ற இந்த நாமரூபப் பிரபஞ்சம் முழுவதும் உள்ளிலும். வெளியிலும் சித்திவிர்த்தியில்லாததனாலே தோணவில்லையோ. சுழுத்தியிற் போலச் சகலமும் தன்னிடத்திலே அடங்கி சொப்பிரகாசமான சிதாகாச மாத்திரம் பிரகாசிக்குமோ அவனே சீவன்முக்தன்.

**க்ஷீனசுழுத்தி:** எதினின்றும் விழிப்பித்தலின்றி தானே விழிக்கின்றானோ அது க்ஷீன சுழத்தி எனப்படும்.

**சுழுத்தி ஆனந்தத்திற்கு வேதத்தில் சொல்லப்பட்ட ஐந்து திருஷ்டாந்தங்கள்:**

1. கயிற்றிலே கட்டப்பட்ட வல்லூறு.
2. கூட்டைநோக்கி வேகமாக வரும் பருந்து.
3. ராகத்துவேஷமில்லாத கட்டில் குழந்தை.

4. சகல பூமியையும் தன்வசம் பண்ணிய மகாராஜா.
5. கற்கவேண்டியவைகளைக் கற்றுணர்ந்த மகாப்பிராமணன்.

**சுவகதம்:** தனது அவயங்களோடுள்ள சம்பந்தம்.

**சுத்தோதகம்:** மதுர ஜல சமுத்திரம்.

**சுத்திகை:** சிப்பி.

**சுத்திகா ரஜித நியாயம்:** சிப்பியில் வெள்ளி போல.

**சுகிருது:** பிரதியுபகாரமே அபேட்சியாமல் உபகாரஞ்செய்பவன்.

**சுவானம்:** நாய்.

**சுவேதசம்:** வியர்வையினிடமாக உண்டாவது.

**சுதை:** பொருந்திய.

**சுத்தப்பிரம்மம்:** சுத்தப்பிரம்மமாயிருக்கிற சர்வ சாட்சியினிடத்தே அக்கினியிற் சூடுபோல அபின்னமாக ஒரு சக்தியுண்டு. அந்த சத்தி அவ்வதீதப்பிரமத்தில் அடங்கியிருக்கும் போது அதற்குச் சுத்தப்பிரம்மம் என்று பெயர்.

**சுரோத்திராதிஞானேந்திரியம்:** ஆகாச முதலான பஞ்ச பூதங்களில் பூதத்திற்கு ஒரு மாத்திரையெடுத்து தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியம் எனப்படும்.

சுரோத்திரம் (காது) ஆகாசத்தின் அம்சமானபடியால் அதன் குணமான சத்த மாத்திரத்தை அறியும்.

துவக்கு(தோல்) வாயுவினம்சமான படியால் அதன் குணமான பரிச மாத்திரத்தை அறியும்.

சட்ச்சு(கண்) அக்கினியின் அம்சமான படியால் அதன் குணமான ரூப மாத்திரத்தை அறியும். சிங்குவை(நாக்கு) அப்புவினம்சமான படியால் அதன் குணமான ரச மாத்திரத்தை அறியும்.

கிராணம்(மூக்கு) பிருதிவியின் அம்சமான படியால் அதன் குணமான கந்தமாத்திரத்தை அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தை கிரகிக்க அறியாது.

**சுரோதா:** கேட்பவன்.

**சுழுத்தி:** ஆழ்ந்த உறக்கம். சூன்ய நிலை. எந்த அவஸ்தையினின்று விழித்து 'யான் ஒன்று மறியேன்' என்று நித்திரைக் காலத்தில் அனுபவிக்கப்பட்ட அஞ்ஞானத்தின் ஸ்மரணவடிவ ஞானமுண்டாகின்றதோ அத்தன்மைய ஆழமான நித்திரையினைச் சுழுத்தியென்பர்.

**சுரர்:** தேவர்.

**சுத்தி:** சிப்பி.

**சுக துக்கங்கள் மித்தை:** ஜாக்கிர முதலிய அவஸ்தைகளின் அபிமானத்தால் விசுவன். தைஜசன். பிராஞ்ஞன் என்னும் பெயரை அடைந்து அந்தக்கரணத்தில் சேதனத்தின் பிரதிபிம்பமயமான சிதாபாச வடிவ போக்தாவும். இவ்விரண்டும் எதனால்

மித்தையோ. அதனால் அந்தப் போக்கியத்தின் நிமித்தமாகிய போக்தாவினாற் செய்யப்பட்ட புண்ணிய பாவங்களும் மித்தையாம். இதனால் அப்புண்ணிய பாவங்களின் பல வடிவ சுகதுக்கங்களும் மித்தையாம்.

**சுகத்திற்கு ஏது:** வைராக்கியம் ஞானத்திற்கு ஏது. ஞானம் உபரதிக்கு ஏது. உபரதி சாந்திக்கு ஏது. சாந்தி சுகத்திற்கு ஏதுவாம்.

**சுகம்:** மிகுந்த பிரேமைக்கு எதெதெல்லாம் விஷயமோ அத்தனையும் சுகம் எனப்படும்.

**சுக்கிலகர்மம்:** சகாம புண்ணியம் எதுவோ அது சுக்கிலகர்மம் எனப்படும்.

**சுபேச்சை:** ஞானசப்த பூமிகளுள் முதலாவது பூமி. இந்தப்பூமியில் அப்பியாசமுடைய ஜிஞ்ஞாசுகளுக்கு ஜாக்ராவவஸ்தையுண்டு.

**சுழூத்தி அபிமானிபிராஞ்ஞன்:** பிராஞ்ஞன் என்னும் பெயரையடைந்த ஜீவன் அந்தச் சுழூத்திக்கு அபிமானியாம்.

**சுழூத்தியின் குணம்:** இதன் குணம் தமசு.

**சுழூத்தியின் போகம்:** ஆனந்தம்
**சுழூத்தியின் வாக்கு:** பைசந்தி. இது இதயத்தில்

உள்ளது.

**சுழுத்தி அவஸ்தையின் சாமக்கிரியை ஆறு:**
1. இருதயம் - ஸ்தானம் 2. பலம் (சக்தி) - திரவிய வடிவம் 3. வாக்கு - பைசந்தி 4. ஆனந்தம் - போகம் 5. குணம் - தமசு 6. பிராஞ்ஞன் - அபிமானி.

**சூத்திரதோதி:** நூலால் ஆக்கப்பட்ட ஒன்றே கால் முழமுள்ள கயிற்றை வாயின் வழியாய் வயிறு பரியந்தம் போட்டு அசைத்து வெளிப்படுத்துதல் சூத்திரதோதியாம்.

**சூட்சும பூதங்கள்:** எவற்றிற்கு பஞ்சீகரணம் உண்டாகவில்லையோ அப்படிப்பட்ட ஆகாசாதி பஞ்சமகாபூதங்கள் சூட்சும பூதங்களென்றும் அபஞ்சீகிருத பூதங்களென்றும் தன்மாத்திரைகள் என்றும் பெயர் பெறும்.

**சூட்சுமபஞ்சபூதங்கள்:** விட்சேப சக்தியினின்றும் சத்த தந்மாத்திரையான ஆகாசம் தோன்றிற்று ஆகாசத்தினின்றும் ஸ்பரிச தந்மாத்திரயான வாயு தோன்றிற்று. வாயுவினின்றும் ரூப தந்மாத்திரையான அக்கினி தோன்றிற்று அக்கினியின்றும் ரஸ தந்மாத்திரையான அப்பு தோன்றிற்று. அப்புவினின்றும் கந்த தந்மாத்திரையான பிருதிவி தோன்றிற்று. இவைகளே சூட்சும பூதங்கள் என்று பௌதிக பரியந்த

அழைக்கப்படுகின்றன. இந்தத் தந்மாத்திரைகளான பஞ்சபூதங்களும் முக்குணங்களுடனே பிறந்தபடியால் இதற்கு தந்மாத்திரைகளென்றும், அபஞ்சீகிருத பூதங்களென்றும், முக்குண பூதங்களென்றும் சாஸ்திரங்களில் உள்ளன.

**சூட்சும சரீரம்:**

| | | |
|---|---|---|
| அந்தக்கரணங்கள் | - | 5 |
| ஞானேந்திரியங்கள் | - | 5 |
| வாயுக்கள் | - | 5 |
| கர்மேந்திரியங்கள் | - | 5 |
| ஆகமொத்தம் | - | 20 |

ஆக 20 தத்துவங்களும் சேர்ந்து சூட்சும சரீரம் எனப்படும்.

**சொரூபலட்சணம்:** இதை ஸ்வரூபலட்சணம் என்றும் சொல்வர். எப்போதும் இருப்பதாய் எது வியாவர்த்தகமாகின்றதோ (வேறுபிரித்தறிவிப்பது) எதுவோஅது சொரூபலட்சணமாம்.

**சொரூபாத்தியாசம்:** சம்பந்தியின் அத்தியாசத்தை சொரூபாத்தியாசம் என்பர்.
இதுவே அந்நியதராத்தியாசம் என்றும் சொல்லப்படும்.

**சொரூபஞானம்:** சொரூபஞானமே விருத்தி ஞானமாய் தோன்றும். சொரூப ஞானம் அஞ்ஞானத்திற்கு சத்துரு அல்ல.

**சொப்பிரகாசம்:** தனது பிரகாசத்தில் அந்நியப்பிரகாசத்தின் அபேட்சையில்லாததாய் எல்லாவற்றையும் பிரகாசிப்பதனைச் சொப்பிரகாசம் என்பர். இதையே சுவபிரகாசமென்றும், சுயம் பிரகாச மென்றும் கூறுவர்.

**சொசம் வேத்திய:** தன்னால் அறியப்படுகின்ற.

**சேதனம்:** சைதந்நியம்.

**சேனை:** ஆதாயம்.

**சேனம்:** பருந்து.

**சோதனம்:** சுத்திகரிப்பு.

**சோபாதிகப்பிரீதி:** யாதொரு பிரீதி ஒன்றில் அந்நியத்தின் பொருட்டு உண்டாகா நிற்குமோ அந்தப் பிரீதி, சோபாதிகப் பிரீதி, அது ஸ்திரீ, புத்திரன், தனம் முதலியவற்றுள் உளதாகும்.

**சோபாதிகப்பிராந்தி:** விலட்சணமான நிமித்த காரண வடிவ உபாதியோடு கூடிய அஞ்ஞான ஜந்நியப்பிராந்தி சோபாதிகப்பிராந்தியாம்.



**ஞமலி:** நாய்.

**ஞாதுரு:** விஞ்ஞானமயன்.

**ஞேயம் :** விஷயமயம்.

**ஞானாத்தியாசம்:** பிராந்தி ஞானமே ஞானாத்தியாசம். ஒன்றில் மற்றொன்றின் ஞானத்தைப் பிராந்தி ஞானமென்பர். இதுவே விபர்யயம், விபரீதபாவனையென்றும் அழைக்கப்படுகிறது.

**ஞானேந்திரியம்:** சுரோத்திரம் (காது), துவக்கு (தோல்), சட்ச்சு (கண்), சிங்குவை (நாக்கு), ஆக்கிராணம் (மூக்கு).

**ஞானத்திற்கு ஏது:** சிரவணம், மனனம், நிதித்தியாசனம் மூன்றும் ஞானத்திற்கு ஏதுவாம்.

**ஞானியின் கதி விலட்சணம்:** ஞானியின் ஸ்வரூபத்தில் கதிவடிவ ஞானத்தை மனிதனால் அறிய முடியாது. சர்வஞ் ஞானியாகிய சித்தயோகியினாலும் அறிய முடியாது.

**ஞானேந்திரியங்களின் விஷயங்கள்:** சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்தும் ஞானேந்திரியங்களின் விஷயங்களாம்.

**ஞானம்:** விஷயம், இந்திரியங்கள் இவற்றின் கூட்டால் தோன்றியது ஞானம். தியானத்திலிருந்து வேறுபட்டது ஞானம். கண்டறிந்தது ஞானம். சொல்லக்கேட்டது மறந்துபோம். கண்டது மறவாது. அஞ்ஞானத்தைக் கண்ட அக்கணமே கொல்வது

ஞானம். இது மனோமயன் ஆகும்.

**ஞானசாதனம்:** சத்துவ குணத்திலுண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் ஆகப்பத்தும் சத்துவாம்சபடியினால் ஞான சாதனமாயின.

**ஞானிக்கு யதேஷ்டா சரணம் இல்லை:** ஞானிக்குப் பசி, தாகம், சர்க்கரை அன்னம், முதலியவற்றின் விவேகத்தைப் போலச் செய்யத்தக்கனவும், செய்யத்தகாதனவுமாகிய காரியங்களின் விவேகமுண்டு. ஆதலால் அவற்றின் அவிவேகத்தாற் தோன்றும் யதேஷ்டா சரணம் சம்பவியாது.

**ஞாதா:** அறிவது, அறிகின்றவனை அல்லது ஞானத்தின் கர்த்தாவை ஞாதா என்பர்.

**ஞாணி:** ஜீவன் முக்தன்

**ஞாதம்:** எதனால் ஞாதத்தன்மை வடிவ தர்மம் வர்த்தமான ஜீவன் முக்தி காலத்தில் தனது இருப்புடையதாய் வருங்காலத்தில் தனது இருப்பு இல்லாததாலும் சொரூப வடிவப் பிரம்மம் ஞாதமாம்.

**ஞானசூரியன்:** திட அபரோட்ச ஞானம்.

**ஞானத்தின் அவதி:** அஞ்ஞானியாகிய புருஷன்

திடமாக அப்பியாசிக்கப்பட்ட தனது சரீரத்தின் பெயர், ஜாதி முதலியவற்றை விசாரமின்றியறிகிறான். சொப்பனத்திலும் மறக்கிறதில்லை. அதுபோலத்தேகத்தில் ஆத்மஞானத்தைப் பாவித்து எனக்கு ஆத்மாவில் திட அபரோட்ச ஞானமிருக்கின்றது என்பது ஞானத்தின் அவதி.

**ஞானத்தின் பிராப்தி:** இக, பரத்தின் சுகங்கள், சித்தத்தின் சுத்தி, ஏகாக்கிரத் தன்மை வடிவ அர்த்தம், திட அபரோட்ச ஞான வடிவ அர்த்தம், சஞ்சித, ஆகாமிய கர்மம், ஜென்மம் முதலிய காரியத்தோடு அவித்தையின் நிவிர்த்தியும் பரமானந்த வடிவப் பிரமத்தின் பிராப்தியுமாகிய அர்த்தம் இவையாவும் இப்போது எதனால் அடையப்பட்டதோ அது ஞானத்தின் பிராப்தியாம்.

## த

**தடத்தலட்சணம்:** ஒன்றைக்காட்டி மற்றொன்றை அறிவிப்பது.

**தனு:** தூலசரீரம்.

**தப்த:** காய்ச்சிய, சூடாக்கிய.

**தப்தபடம்:** எரிக்கப்பட்ட வஸ்திரம்.

**ததியூடு:** தயிரினிடத்தில்.

**தக்ர:** மோர்.

**தரு:** மரம், தாருகாவனம் மரங்கள் நிறைந்த காடு.

**தத்பத சோதனம்:** இவ்வெல்லா ஜகத்தும் சத்த வடிவமேயாம். இவ்வெல்லாம் சித்து ரூபமேயாம். யாவும் பிரம்மமாம் எல்லாம் ஆத்மாவாம். இதெல்லாம் ஆத்மவடிவமேயாம்.

**தர்பணம்:** கண்ணாடி.

**தத்துவஞானத்தின் அவதி:** அஞ்ஞான தசையில் தேகத்தில் ஆத்ம புத்தியிருப்பது போல அதன் தேகத்தில் ஆத்மஞானத்தின் பாதகமான ஒரே ஆத்மாவில் புத்தியுண்டாயின் அது தத்துவ ஞானத்தின் அவதியாம்.

**தத்துவ ஞானத்தின் பலம்:** மீண்டும் கிரந்தி(முடிச்சு) உதயமாகாமை. காரணகாரியங்களோடு கூடிய அந்நியோந்நியாயத்தியாச வடிவ சித் ஜடக் கிரந்தியின் அத்தியந்த நிவர்த்தி பரமாநந்தத்தின் பிராப்தி வடிவ மோட்சம் தத்தவ ஞானத்தின் பலமாம்.

**தத்துவ ஞானத்தின் சொரூபம்:** மித்தையினையும் தத்துவத்தையும், விவேகித்தல். அதாவது நிஷ்பிரபஞ்ச ஆத்மாவின் தன்னின் ஸ்தூல

வேறாகாத பிரம்மத்தின் நிச்சயம் தத்துவ ஞானத்தின் சொரூபமாம்.

**தம்பம்:** தர்மநிஷ்டனாயில்லாதிருந்தும் வெளியே தன்னை தர்மநிஷ்டனாகக் காட்டுவது.

**தர்மி:** எதில் அந்நியத்தின் பேதமிருக்கிறதோ, அப்படிப்பட்ட பேதத்தின் ஆசிரயம் எதுவோ அது தர்மியாம். கடத்திலுள்ள படத்தின் பேதத்திற்கு கடம் அநுயோகியாவதால் இதனை அநுயோகி என்றும் சொல்வர்.

**தனது நிஷ்டை:** ஞானமார்க்கத்தைக் கண்ட வேறு அறிஞன் எவனோ அவன் மற்றைய ஞானியினது நிஷ்டையினைத் தனது சொரூபத்திற்கு பின்னத் தன்மையாகக் காண்பானாயின் அஞ்ஞானியாவான். முன் சொன்ன நிஷ்டையினை மற்றைய ஞானி தனது சொரூபத்தின் அபின்னத் தன்மையாகக் காண்பானாயின் அது தனது ஆத்மாவினும் வேறாகாத தன்மையாகக் காணுதல் தனது நிஷ்டையாம்.

**தத்தம்:** பசு, சுவர்ணம் முதலியவற்றை தானம் செய்தல். சரணாகதமான அனைத்து உயிரினங்களையும் கொல்லாமல் இருப்பது தத்தம் எனப்படும்.

**தவம்:** கிருச்சிர சாந்திராயணாதிகள்.

**தண்ணளி:** மிக்க கிருபை.

**தத்துவ ஞானி:** ரஜஸில் சத்துவம் பிரதானமாகும் போது அதில் பிரதிபிம்பித்த சிதாபாசன் தத்துவ ஞானியாவான்.

**தச வாயுக்கள்:** 1. வியானன். 2. பிராணன் 3. அபானன், 4. சமானன். 5. உதானன். 6. நாகன். (வாந்தி பண்ணவது) 7. கூர்மன் (இமைத்து விழிப்பிக்கிறது) 8. கிரிகரன் (தும்மச் செய்தல்) 9. தேவதத்தன் (கொட்டாவி விடுதல்) 10. தனஞ்செயன் (வீங்கச்செய்யுதல்).

**தநுமானசி :** ஞான சப்த பூமிகளில் இது மூன்றாம் பூமியாகும். இந்தப் பூமியைக் கடந்தவர்கள் தான் முமூட்சுக்களாவார்கள்.

**தமம்:** வெளி விஷயங்களினின்று இந்திரியங்களைத் தடுத்தல் தமம் ஆகும்.

**தடஸ்த லட்சணம்:** ஓர் காலத்திருப்பதாய் வியாவர்த்தகம் செய்வது எதுவோ அதனை (வேறுபிரித்தறிவிப்பது) தடஸ்த லட்சணமென்பர்.. இதனையே உபலட்சணமென்றும் கூறுவர்.

**தத்துவஞானம்:**
நிஷ்டப்பிரபஞ்சப் பரமாத்மாவினது ஏகத்துவத்தின் ஞானத்தைத் தத்துவஞானம் என்பர்.

**தவனம்:** சூடு, எருமை, பறவை, நீர்ப்பாம்பு.

**தடமடு:** ஓடும் நதி.

**தறி:** கட்டை.

**தத்வமசி:** தத்+துவம்+அசி என்னும் மூன்று பதங்களை உடையது. அது நீயாக இருக்கிறாய் என்பது இதன் பொருள். சாந்தோக்கிய உபநிடத வாக்கியம். தத்பதம் - ஈசுவரன், துவம்பதம் - சீவன், அசிபதம் - ஐக்கியம் (ஜீவப்பிரம்மஐக்கியம்)

**தமோகுண விகாரங்கள்:** அஞ்ஞானம், ஆலசியம், ஜடத்துவம், நித்திரை, பிரமாதம், மூடத்துவம்.

**தண்டுலம்:** அரிசி

**தத்துவஞானநிஷ்டன்:** பிரம்ம ஆன்மாக்களின் அபேதத்தை விசயம் செய்வதற்கான ஞானத்தில் நிஷ்டையையுடையவன் தத்துவஞானநிஷ்டனாவான்.

**தாத்பரியம்:** உண்மை, மூலம்

**தாமசவிருத்தி:** மூடம், சகம், சத்தாகத்தோன்றும்.

**தாமச அகங்கார சிருஷ்டி:** சப்தம், ஸ்பரிச, ரூப, ரச, ஸ்கந்தமென்னும் ஐந்து தன்மாத்திரைகளாம்.

இவைகளே சூட்சும பூதங்களென்றும் அபஞ்சீகிருத பூதங்களென்றும் சொல்லப்படும்.

**தானம்:** அன்னம், சுவர்ணம், பசு, பூமி, மனை முதலியவற்றைத் தன் சக்தியளவில் அதிதி, பிராமணாதிகளுக்குக் கொடுத்தல்.

**தாசுப்படும்:** பிரியப்படும்.

**தாதாத்மியசம்பந்தம்:** இரண்டு சம்பந்திகளின்றி சம்பந்தம் கூறுதல் சம்பவியாது. அபேதமின்றி தாதாத்மியம் கூறுதலும் பொருந்தாது. ஆதலால் பேதத்தோடு கூடிய அபேதத்திற்குத் தாதாத்மிய சம்பந்தமென்று பெயர்.

**தாஸ்யம்:** தொண்டு, அடிமை, கைங்கர்யம்.

**தாஸமார்க்கம்:** அப்பர் இறைவனுக்கும் இறையடியார்களுக்கும் தொண்டுசெய்தல்.

**திருஷ்டாந்தம்:** பார்வை, ஞானம்.

**திரோதம்:** மறைப்பு.

**திரவியசக்தி:** எதனால் அஞ்ஞான வடிவத் திரவியமாகிய வஸ்துமாத்திரத்தின் இருப்பு இருக்கின்றதோ அதனால் அது திரவியசக்தியெனப்படுகிறது. அல்லது அஞ்ஞானத்தில்

திரவியமாகிய ஆகாய முதலிய பூதங்களை உண்டாக்குதலின் சாமர்த்திய வடிவ சக்தி எதுவோ அது திரவியசக்தி எனப்படுகின்றது.

**தியேயாகாரவிருத்தி:** தியானிக்கப்படுகின்ற பொருளின் வடிவ விருத்தி.

**தியாகம்:** சந்நியாசம்.

**திருதி:** வியாகுலமடையினும், தேகேந்திரியங்களை ஸ்திரமாகப் பண்ணும் பிரயத்தன விவேகம்.

**தியானம்:** ஆன்மாகார ஸஜாதீய விருத்திப் பிரவாகம்.

**திருஷ்ணை:** கிடைக்காத வஸ்து கிடைக்க வேண்டுமென்னும் அபிலாஷை.

**திவ்வியம்:** மானுடர்களால் அடையப்படாத போகம்.

**திரிவிதபரிச்சேதம்:** தேசபரிச்சேதம், கால பரிச்சேதம் வஸ்து பரிச்சேதம்.

**திருஷ்டம்:** நான் அஞ்ஞானியென்கிற அனுபவம் ஜடத்தினிடத்திலே காணப்படாமல் சித்தினிடத்திலே காணப்படுகிறதே திருஷ்டம்.

**திடஞானம்:** சந்தேக விபரீதமறத் தேகமே

தானென்றிருந்தாற்போல. சாட்சியே நானென்கிறதே திடஞானம். நான் பிரம்மம் என்கிறதும் திடஞானம்.

**திட அபரோட்ச பிரம்மஞானம்:** பர்வதத்தின் குகையிலுள்ள வெகு காலத்தைய இருள் தடியினாலடித்தல் முதலிய வேறு பிரயத்தனங்களினால் ஓடுகிறதில்லையாயிலும் தீபமுளதாயின் அப்பொழுதே ஓடுகின்றது. அங்ஙனமே ஆத்மாவினது அஞ்ஞானம் கர்ம உபாசனை முதலிய மற்றைக் கோடி உபாயங்களினாலும் ஓடுகிறதில்லையாயினும் சகல ஜகத்தும் யானும் பிரம்மம் என்னும் திட அபரோட்ச பிரம்ம ஞானத்தால் அப்பொழுதே ஓடும்.

**திதீட்சை:** துவந்துவ (சீதோஷ்ன முதலிய) தர்மங்களைச் சகிக்கும் இயல்பினைத் திதீட்சையென்பர்.

**திருஷ்டி சிருஷ்டிவாதம்:** திருஷ்டி என்பது ஞானம் அதன் சமகாலத்தில் சிருஷ்டியை (பிரபஞ்சத்தின் உற்பத்தியை) சொல்லுதல் திருஷ்டி சிருஷ்டிவாதம்.

**தீவிர தர வைராக்கியம் :** புநரா விருத்தி உடையவைகள் என்றறிந்து சர்வ லோகங்களின் இச்சையையும் விடுதல் தீவிர தர வைராக்கியமாம்.

**தீவிர வைராக்கியம்:** இவ்வுலகத்துப் புத்திரன் முதலியவற்றின் சம்பந்தமாகிய சுகத்தின் பஞ்சீகரணம்

விருப்பமின்மை எதுவோ அது தீவிர வைராக்கியம்.

**திரிபுடி:** 1. விஞ்ஞான மயன் என்கிற ஞாதுரு 2. மனோமயன் என்கிற ஞானம் 3. விஷயங்கள் என்கிற ஞேயம், காண்பான், காட்சி காணப்படுபொருள்.

**திராடகம்:** நேத்திரங்களால் புருவ நடுவினையாவது அல்லது வேறு சமீபத்திலுள்ள பதார்த்தத்தினையாவது கண்ணீர் விழும் வரையில் பார்த்தல் திராடகமாம்.

**திருஷ்டி:** பார்க்கின்றவனை அல்லது திருஷ்டிய கர்த்தாவை திருஷ்டி என்பர்.

**தீனத்தன்மை:** வேறு புருஷர்களால் வர்த்தமான காலத்தில் அடையப்படாத வஸ்துவினை அடையவேண்டுமென்னும் இச்சை தீனத்தன்மையாகும். இதனையே போகமென்றும் கூறுவர்.

**துயில் :** உறக்கம்.

**துகில் :** ஆடை.

**துவந்துவம்:** சித்தத்தைச் சலனப்படுத்தும் சீதோஷ்ணம், சுகதுக்கம், மான அவமானம் முதலியவைகள் ஆகும்.

**துவேஷி:** தன்னால் செய்யப்பட்ட அபகாரத்தை நாடியே அபகாரம் செய்பவன்.

**துகள்:** ரஜோகுணம்.

**துக்கம்:** அஞ்ஞானத்தையும் அதன் காரியத்தையும் துக்கமென்பர்.

**துர்லட்சியம்:** தன்னினும் அதிகனான வேறு சித்த யோகியினாலும் அறியத்தக்கதாயிருத்தலின் துர்லட்சியமாகும்.துக்கத்தினால் அறியத்தக்கதாயிருக்கும்.

**துரிய அவஸ்தை:** ஞான சப்த பூமிகளில் இது ஏழாவது பூமி. ஜீவன் முக்த நிலையில் வரிட்டன் எனப்படும் நிலையாகும். ஆழமான சுழுத்தி என்பது இதன் லட்சணமாகும்.

**துங்க:** உயர்வான.

**துவம்பதவாச்சியார்த்தம்:** சிதாபாஸ சகித புத்தியோடு கூடிய கூடஸ்த சேதன வடிவ ஜீவன் துவம்பதத்தின் வாச்சியார்த்தம்.

**துவம்பதலட்சியார்த்தம்:** சிதாபாஸ சகித புத்தி வடிவ உபாதியின்றிய கேவல கூடஸ்த சேதனம் எதுவோ அது அவாச்சிய துவம்பதத்தின் லட்சியார்த்தமாம்.

**துவிதம்:** இது இரண்டு வகைப்படும்.

1. சீவனாற் சிருஷ்டிக்கப்பட்டது.
2. ஈசுவரனாற் சிருஷ்டிக்கப்பட்டது.

சாக்கிரமுதல் சீவன் முத்தி பரியந்தமுள்ள அவஸ்தைகளுடைய கற்பனைகளும், அந்தந்த அவஸ்தையிலேயுள்ள ஜாதி, வருணாச்சிரம லௌகீக முறைமை முதலான சகல கற்பனைகளும் சீவசிருஷ்டி. இதில் ஈசுவர சிருஷ்டியான விஷயம் சிதாபாசனால் அறியப்படும். சீவ சிருஷ்டியான விஷயம் சாட்சி ஞானத்தினால் பிரகாசிக்கப்படும்.

**தூலதநு:** தேவர், மனிதர், பறப்பன, நடப்பன, ஊர்வன, நீந்துவன, நிற்பன, உடல்கள் முதலியன.

**தூலசரீரம்:** 6 தத்துவங்கள். சர்மம், உதிரம், மாமிசம், சனாயு, அத்தி, மஜ்ஜை.

**தூலாவித்தை:** சுத்த சேதனத்தை ஆவரணம் செய்கின்ற அவத்தை.

**தூல அஞ்ஞானம்:** கடம் முதலியவற்றின் சேதனத்தை மறைக்கும் அஞ்ஞானம் தூல அஞ்ஞானமாகும். அவஸ்தாஞ்ஞானமென்றும் கூறுவர்.

**தெகம்:** நீர்.

**தேஜசு:** புதிது புதிதாய் மென்மேலும் பிரஞ்ஞையுடையவனாயிருத்தல்.

**தேவபோகம்:** தேவ சரீரத்தினால் புஜிக்கப்படும் போகம்.

**தேவயான மார்க்கம்:** ஞானரூபப் பிரகாசத்தின் அதிகத் தன்மையுடைய அக்கினியாதி தேவதைகளோடு கூடினதாயும், பிரகாசரூப சகுனப் பிரமவித்தையினாலடையப் படுவதாயும் பிரகாசமயமான உலகங்கள் அனேகங்களை உடையதாயும். சொப்பிரகாசமான பிரமத்தின் பிராப்திக் கேதுவாவதால் உத்கிருஷ்டமாயும் ஞானரூபப் பிரகாசமாயும் இருத்தலால் அது சுக்கில (பட்ச) மென்றும் சொல்லப்படும்.

**தேவசம்பந்தி:** சீவேசுரவிபாகமில்லாத சுத்த சைதன்னிய மாத்திரமான தேவனது ஆசிரயரூபமாகவும் விஷயரூபமாகவும் யாதொரு மாயை கற்பனை செய்யப்படுகிறதோ அந்தமாயைக்குத் தேவ சம்பந்தி என்று பெயர்.

**தேயுதத்துவம் :** அக்கினித்தத்துவம் ஐந்து 1. சோம்பல். 2. காந்தி. 3. பசி. 4. தாகம். 5. நித்திரை என்பனவாம்.

**தேஜோமயர்:** பரமானந்தர் சித்ரூப சத்தியுடன் கூடி சர்வப்பிரகாசமென்னும் சொப்பனாவஸ்தையை அடைகின்றபொழுது பரமானந்தர் என்னும் பெயர் போய் தேஜோமயர் என்றும் பெயர் வந்தது.

**தேசபரிச்சேதம்:** முழுதுமின்மைக்குப் பிரதியோகித்தன்மை எதுவோ அது தேச பரிச்சேத மெனப்படும்.

**தேசி:** அசுவம். குதிரை, புரவி.

**தோதி:** ஜலதோதி, சூத்திரதோதி, வஸ்திரதோதி பவனதோதி என்றும் பேதத்தால் தோதிக்கிரியை நான்கு வகைப்படும்.

(உம்) மிளகைத்தின்று சிறிது சூடான உழக்கு ஜலத்தைக் குடித்துப்பின் யுக்தியினால் அந்த ஜலத்தை வெளிப்படுத்துதல் ஜலதோதி.

**தைரியம்:** சரீர இந்திரிய சங்காதங்களைச் சாஸ்திர நிஷித்த மார்க்கப் பிரவர்த்தியினின்றும் நிவர்த்தி செய்யும் சாமார்த்தியம்.

**தைஜசன்:** சொப்பனத்திலே தூலசரீரத்தை விட்டு அந்தக்கரணத்துடனே கூடி நின்றபோது தைஜசனென்றும் பிராதிபாசிக ஜீவனென்றும் சொப்பன கற்பிதனென்றும் சொல்லப்படுவான்.

## ந

**நவநீதம்:** வெண்ணெய்.

**நகுலம்:** கீரி.

**நந்துதம்:** பெரியபாகம்.

**நன்ஞானம்:** யதார்த்த நிச்சயத்தினை நன்ஞானமென்றும் தெளிந்த ஞானமென்றும் சொல்வர்.

**நாஸ்தி நபாதி:** இல்லை. தோற்றவில்லை.

**நாம யாகம்:** விதி பூர்வகத்திற்கு வேறாக அவிதி பூர்வமாகச் செய்கின்ற யாகம்.

**நாகுலி:** கீரிபுரண்டான் பூண்டு.

**நாகபணம்:** நாகத்தின் தலை.

**நால்வகைத் தோற்றங்கள்:** சராயுஜம். அண்டஜம், சுவதேஜம், உத்பிஜம்.

**நார்:** உணர்தல்.

**நரர்:** மானிடன்.

**நிசானந்தம் :** சுகதுக்க ரூபமான ராகு துவேசம் இல்லாத உதாசீன காலத்தில் தோன்றும் ஆனந்தம்.

**நிரங்குசம்:** தடையற்றது.

**நிரஞ்சனம்:** தமமில்லாதது.

**நிராசை:** வைராக்கியம்.

**நிண்ணயம்:** நிச்சயம், உள்ளவாறு.

**நிரவதி:** எல்லையில்லாதது.

**நிருத்தம்:** ஏகாக்கிரமாகிய சம்பிரஞ்ஞாத சமாதியில் தியேயாகார விருத்தி இல்லாத நிலையே 'நிருத்தம்' எனப்படும். இதுவே அசம்பிரஞ்ஞாத சமாதி எனப்படும்.

**நியந்தா:** நியமிப்பவன்.

**நிவாசஸ்தானம்:** போகஸ்தானம்.

**நியதம்:** ஒரு நிச்சித சுபாவமுடைமை.

**நித்திரை:** பிரமானம். விபர்யயம். விகற்பம். ஸ்மிருதி என்னும் இந்நால்வகை விருத்திகளின் அபாயத்திற்கு காரண ரூபமான யாதொரு தமோகுணம் உண்டோ. அந்தந்த தமோ குணத்தை விஷயமாக உடைய விருத்தி விசேசத்திற்கு நித்திரை என்று பெயர்.

**நிஷ்காம ஞானிகளாகிய பக்தர்கள்:** சனகாதியர். நாரதர். பிரகலாதர். பிருது மகாராஜா. சுகதேவர்.

**நிருபாதிகப்பிரீதி:** யாதொரு பிரீதியானது ஒன்றில் அந்நியத்தின் பொருட்டு உண்டாக வில்லையோ, அது நிருபாதிகப் பிரீதி. இது தனது ஆன்மாவின் கண்ணுளதாகும் பிரீதி. ஆன்ம விஷயமான பிரீதி

நிருபாதிகப் பிரீதியாம். ஞானிக்கும் பகவானுக்கும் பரஸ்பரமுளதாகும் பிரீதி இதுவேயாம்.

**நிக்கிருஷ்டம்:** தாழ்வான, கீழ்மையான.

**நிஷேத்தியவிசேஷணங்கள்:** அனந்தம், அகண்டம், அசங்கம், அத்வீதியம், நிர்விகாரம், நிராகாரம், அவ்வியக்தம், அவ்வியயம், அட்சரம் என்பன.

**நித்தியம்:** உற்பத்தி நாசமின்றியது நித்தியம்

**நிர்விகாரம்:** ஷட் (ஆறு) விகாரங்களுமின்றியதனை நிர்விகாரமென்பர். இதுவே அக்கிரியமும், கூடஸ்தருமாம்.

**நிமித்தகாரணம்:** உற்பத்தி மாத்திரத்தின் காரணத்தை நிமித்த காரணம் என்பர். (உ.ம்) மண்.

**நிருபாதிகப்பிராந்தி:** கேவல அஞ்ஞானத்தால் தோன்றும் பிராந்தியினை நிருபாதிகப்பிராந்தியென்பர்.

**நிச்சயம்:** சம்சயத்தின் வேறாகிய ஞானத்தினை நிச்சயமென்பர்.

**நிதித்தியாசனம்:** அநாத்மாகார விருத்திகளைத் தடுத்தல், பூர்வகமான ஆத்மாகார விருத்திகளின்

பிரவாகத்தை நிதித்தியாசனமென்பர்.

**நிரவயம்:** அவயவ(அங்கங்கள்) ங்களின்றியதனை நிரவயமென்பர். இதுவே அக்கிரியமும், கூடஸ்தருமாம்.

**நிராகாரம்:** ஸ்தூலம் முதலிய நான்கு வடிவங்களின்றியதனை நிராகாரமென்பர்.

**நிராதரவு :** ஆதரவின்மை.

**நித்திய நிவிருத்தி:** வியவகாரீக ரஜ்ஜீவிலிருக்கும் பிராதிபாஸிகசத்தையுடைய சர்ப்பம் எதுவோ அதற்குத் தனது அதிர்ஷ்டனமாகிய இரஜ்ஜீவில் பரமார்த்திக சத்தையாகவாவது அல்லது வியவகாரிக சத்தையாகவாவது மூன்று காலத்திலும் எந்த அத்தியந்தாபாவமிருக்கிறதோ அது அந்தச் சர்ப்பத்தின் நித்திய நிவிருத்தியாம். இதுவே விஷயரூப நிவிருத்தி என்றும் சொல்லப்படும்.

**நித்தியநிவிருத்தம்:** நித்திய நிவிருத்தினையுடைய பிராதிபாஸிக சர்ப்பம் எதுவோ அது நித்திய நிவிருத்தம்.

**நித்திய நிவிருத்தத்தின் நிவிருத்தி:** மித்தியாத்தன்மை நிச்சயத்தினையேனும், முக்காலத் தன்மையின் நிச்சயித்தினையேனும் நித்திய நிவிருத்தத்தின் நிவர்த்தி என்பர். இதையே விஷயீ

வடிவபாதமென்றும் சொல்வர்.

**நித்தியப்பிராப்தத்தின் பிராப்தி:** திருசியமாயிருத்தலால் மித்தையாகிய அகங்காராதிப் பிரபஞ்சரூப பந்தத்திற்கு அதிஷ்டானத்தின் ஞானமாகிய விழிப்பினால் சொப்பனம் நிவிர்த்தியாவது போல நிவர்த்தி சம்பவிக்கின்றது. அன்றியும் ஆத்மாவாயிருத்தலால் நித்தியப் பிராப்தமாகிய பிரம்மம் எதுவோ அதன் பிராப்தி ஞானத்தினால் சம்பவிக்கின்றதே நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியாகும்.

**நிரங்குசத் திருப்தி:** ஆனந்த வடிவப் பிரம்மத்திற்கு அபின்னமான ஆத்மாவின் ஞானத்தால் உண்டாகும் திருப்தி நிரங்குசத் திருப்தியாம். இந்தத் திருப்தி உவமையின்றியதாம்

**நிரதிசயப்பிரேமை:** எல்லாவற்றினும் அதிகமான பிரேமையை நிரதிசயப்பிரேமை என்பர். இதனையே பரமப்பிரேமை என்றும் கூறுவர்.

**நிருபாதிகப் பிரணவம்:** 'ஓம்' என்பதாம்.

**நிரூபகம்:** எதன் பேதம் அந்நிய வஸ்துவிலிருக்கின்றதோ அப்படிப்பட்ட பேதமுடைய வஸ்து எதுவோ அது பிரதியோகி எனப்படுகின்றது. அது கடத்தினுற்ற படத்தின் பேதத்திற்கு பிரதியோகி படமாதல் போலவாம். இதனையே நிரூபகம் என்பர்.

**நிரோதம்:** அநாத்மாகாரத்தை விட்டு ஆத்மாவில் நிலைத்தல் அல்லது தனது உபாதானமாகிய சத்துவகுணத்தில் சித்தம் ஒடுங்குதல்.

**நிவிருத்தி:** மித்தியாத்துவ நிச்சயத்திற்கு அல்லது திரிகால அபாவ (மூன்று) காலத்தன்மை நிச்சயத்திற்கு நிவிருத்தியென்று கூறுவர். இதனையே பாதமென்றும் கூறுவர்.

**நிஜசொரூபம்:** ஆத்மா, என்பது பிராணன், இந்திரியம், புத்தி, சூனியம், அஞ்ஞானம் என்பவைகள். அல்லது அது அணு குறுமை, நெடுமை முதலிய பரிணாமமின்றியது.

**நிஷேத்தியம்:** பிரபஞ்சத்தின் நிஷேத வாயிலாக ஆத்மாவைப் போதிக்கும் விசேஷணங்கள் எவையோ அவை நிஷேத்தியமெனப்படுகின்றன.
(உ.ம்.) அநந்தம், அகண்டம், அசங்கம், அத்வதீயம், அஜன்மம், நிர்விகாரம், நிராகாரம், அவ்வியக்தம், அவ்வியயம், அட்சரம் முதலியன.

**நிஷேத்தியவிஷேணங்கள்:** 'அவ்விதவை' என்னும் சொல் விதவை ஸ்திரீயை நிஷேதித்து பொருளால் அவளுக்கு விலட்சணமான சுவாசினி (சுமங்கலி)யை அறிவிப்பதாயிருக்கிறதோ அப்படியே 'அநந்தம்' முதலிய விசேஷணங்கள் எதனால் அந்தம்

முதலிய பிரபஞ்சத்தின் தர்மங்களை நிஷேதித்துப் பொருளால் அவற்றின் விலட்சணமான பிரம்மத்தை அறிவிப்பனவாயிருத்தலால் நிஷேத்திய விசேஷணங்கள் என்பதாம்.

**நிஷ்கிரியம்:** கிரியை இன்றியதை நிஷ்கிரியம் என்பர். இதையே அஷ்கிரியம் என்றும் கூறுவர்.

**நேதி:** எலிவாலைப் போன்ற அனேக நூல்களால் (நூற்கயிறு) திரிக்கப்பட்ட கயிற்றைக் கிரமமாக நாசியின் இரண்டு துவாரங்களிலும் போட்டு மேல் வாய்த்துவாரத்தின் வழியாய் வாயினின்றும் எடுத்தல் நேதியாம். இதல்ல, இதல்ல என்று தள்ளுவதும் நேதி எனப்படும்.

**நௌலி:** நீர்வண்டை (சுழல் வண்டைப்) போல வலப்பாக இடப்பாகங்களால் வயிற்றைச் சுழற்றுதல் நௌலியாகும்.

## ப

**பலா சங்கம்:** போகத்தின் அபிலாஷை. பரமானந்த சொரூப லாபத்தாற் பலாசங்கம் தீர்ந்து விடும்.

**பனை:** கிளை.

**பரமானந்தம்:** மேலான பிரியத்துக்கு விசயமாய் இருப்பது.

**பணியாய்:** கயிறாய்.

**படர்:** துன்பம்.

**பரோட்சம்:** பிரமம் ஒன்று உண்டு என்கின்ற திடஞானமே பரோட்சமாகும்.

**பஸ்தி:** குதத்தின் வாயிலாக ஜலத்தை ஏற்றி மீண்டும் விடுதல் பஸ்தியாகும்.

**பச்சாதாபம்:** பின்னிரங்குதல், துன்பத்திற்குப் பிறகு இரக்கம் காட்டுதல்.

**பஞ்சகோசங்கள்:** அன்னமய கோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம்.

**பஞ்சகோச விளக்கம்:**
1. தூல சரீரமே அன்னமயகோசம்.
2.பிராணவாயுவும், கர்மேந்திரியங்களும் கூடிப் பிராணமயகோசம்.
3. மனதும் ஞானேந்திரியங்களும்கூடி மனோமயகோசம்.
4.புத்தியும் ஞானேந்திரியங்களும் கூடி விஞ்ஞானமயகோசம்.
5. காரண சரீரமே ஆனந்தமயகோசம்.

**பக்திவிருட்சம் :** மோட்ச சாதனங்களின் சம்பந்தி விருட்சமாகும். நிஷ்காம கர்ம முதலியவற்றினால் செய்யப்பட்ட சுத்த சித்தம் நிலமாகும். ஈசுவரன் குரு

முதலியோர்களின் பக்தி விதையாகும். மந்த விவேகம் முளையாகும். திட விவேகம் அடிமரமாம். விவிதமான வைராக்கியம் சாகை (கிளை) களாம். சமம் முதலிய ஆறு சாதனங்கள் புஷ்பங்களின் கொத்துக்களாம் குருவாக்கிய சிரவணம் அதன் பேரிலுண்டாகும் ஆண் விருட்சத்தின் சையோகமாம். சிரவண, மனன, நிதித்தியாசன முதலிய அந்நிய சாதனங்கள் சம்பந்தியான அந்நியப் பிரயத்தனங்களாம். சிரத்தை பழமாம். முமூட்சுத்துவம் பழத்தின் பரிபாக தசையாம். ஞானம் அப்பழத்தின் இரசமாம்.

**பத்மாசனம்:** வலது பாதத்தின் குதியை இடது தொடையின் அடியில் வைத்து, அவ்வாறே இடது பாதத்தின் குதியை வலது தொடையின் அடியில் வைத்து இடது வலது கைகளால் இடது வலது பாதங்களின் பெருவிரலைப் பிடித்து பார்வையை நாசியின் நுனியில் நிறுத்துவது பத்மாசனமாம்.

**பதிகன்:** வழிப்போக்கன்.

**பராஜயம்:** தோல்வி.

**பகவான்:** ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, ஸ்ரீ, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறுக்கும் 'பக' மென்னும் பெயருள்ளதால் பகவான் என்பதற்கு இந்த ஆறு குணங்களும் உள்ளவன் என்பது பொருளாகும்.

**பச்சிமதான ஆசனம்:** இரண்டு பாதங்களையும் தண்டம்போல் நீட்டி இரண்டு கைகளாலும்இரண்டு காற்பெருவிரல்களையும் பிடித்துக்கொண்டு நெற்றியை முழந்தாளின் பேரில் வைத்தல் பச்சிமதான ஆசனமாம்.

**பஞ்சகோசாதீதன்:** பஞ்சகோசங்களுக்கு அப்பாற்பட்டவன்.

**பஞ்சக்கிலேசம்:** அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபிநிவேசம்.

**பஞ்சீகிருதபூதம்:** எந்தப் பூதங்களுக்குப் பஞ்சீகரணமுண்டாயிற்றோ அவற்றைப் பஞ்சீகிருதபூத மென்பர்.

**பதார்த்தாபாவினி:** ஞானசப்த பூமிகளில் ஆறாவது பூமியில் உள்ள பிரம்மவித்து வரன் வரியானாகிய புருடன்.

**பகூதகம்:** இது சந்நியாசத்தில் ஒருவகை. இதை வெகூதகம் என்றும் சொல்வர். சந்நியாசஆசிரமத்தின் கர்மத்தைச் செய்து கொண்டு யாத்திரை செய்தல் பகூதகம்.

**பந்து:** அற்ப சம்பந்தத்தால் உபகாரம் செய்பவன்.

**பக்தி:** பூஜ்ஜிய பக்தியோடு உண்டாகும் பிரீதியைப் பக்தியென்பர். இத்தன்மைய பீரிதியை ஈசுவரன், குரு முதலியோரிடம் வைக்க வேண்டும்.

**பரசவேத்திய:** பிறராலறியப்படும்.

**பண்டு இல்லா:** முன்பு இல்லாத.

**பதார்த்த சோதனம்:** வியஷ்டி சமஷ்டிப் பிரபஞ்சங்களினின்றும் பிரம்மத்தையும் ஆத்மாவையும் விவேகித்தலைப் பதார்த்த சோதனமென்பர்.

**பரோட்சம்:** பிரம்மம் இருக்கிறது என்ற ஞானம்.

**பராவிய:** சொல்லப்பட்ட.

**பரசம்வேத்தியலட்சணம்:** ஞானியால் அறியப்படும் லட்சணம்.

**பரமப்பிரயோஜனம்** :. பலன். துக்கத்தின் அத்தியந்த நிவிர்த்தியும் பரமானந்தமாகிய பிரமம் எதுவோ அதன் பிராப்தியுமே பரமப்பிரயோஜனமாம்.

**பரமஹம்சம்:** சந்நியாசத்தில் ஒருவகை. இது வித்வஸ் என்றும் விவிதிஷ் என்றும் இருவகைப்படும். ஞானத்திற்கு முன் .தீவிரதர வைராக்கியம் விவிதிஷா சந்நியாசம் எனப்படும் ஞானத்திற்குப் பின் தீவிரதர வைராக்கியத்தினால் வித்வானால் செய்து கொள்வது வித்வஸ் சந்நியாசம்.

**பரமார்த்த சத்தை:** எதற்கு மூன்று காலத்திலும் பாதம் உண்டாகிறதில்லையோ அதற்குப் பரமார்த்து சத்தையுண்டு. அத்தன்மையது சேதனமாம்.

**பரிணாமி உபாதானம்:** பரிணாம வடிவ காரியத்தின் காரணத்தினைப் பரிணாமி உபாதான மென்பர்.

**பரோட்சஞானம்:** பிரம்மம் இருக்கிறது என்னும் ஞானம்.

**பலம்:** அநர்த்த நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய மோட்சம்.

**பலவியாப்தி:** பிரம்மம் பல வியாப்தியினால் அறியத்தகாததாயிருத்தலின் மனதிற்கு (சிதாபாசனோடு கூடிய விருத்திக்கு) விஷயமாகாததாம்.

**பவனதோதி:** இரண்டு பாதங்களால் உட்கார்ந்து கழுத்தை உயர்த்திச் சிறிது திறந்த வாயால் காற்றை இழுத்து உள்ளே நிரப்பி, மீண்டும் தைரியமாக விடுதல் பவனதோதி (பவனம், வாயு).

**பரமாநந்தம்:** பரமப் பிரேமையின் விஷயத்தினைப் பரமாநந்தமென்பர். எல்லாவற்றுக்கும் அதிகமான பிரேமையை (பிரியத்தினை) பரமப்பிரேமை என்பர். இதனையே நிரதிசயப் பிரேமை என்றும் கூறுவர்.

**பஞ்சகோசங்கள்:** அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம். ஆனந்தமயகோசம்.

**பரப்பிரம்மம்:** சுத்தப்பிரமத்தில் அடங்கியுள்ள சத்தியானது விசிரிம்பித்து (தனக்குத்தானே விரிவு செய்து) சுத்தப்பிரம்மத்தை வியாபிக்கும்போது அப்பிரம்மம் பரைவியாபகத்துக்குள் இருந்த படியால் அதற்குப் பரப்பிரம்மம் என்று பெயர்.

**பரிபூரணர்:** தேஜோமயர் சத்ரூப சத்தியுடனே கூடி சர்வ வியாபகமென்னும் ஜாக்கிராவஸ்தையை அடைகின்றபொழுது தேஜோமயர் என்னும் பெயர் போய் பரிபூரணர் என்னும் பெயர் பெற்றார்.

**பஞ்சீகரணம்:** தமோம்ஸமாயிருக்கிற ஐந்து பூதங்களையும் ஒவ்வொன்றை இரண்டிரண்டாகப் பகுத்து முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு, நன்காகப் பகுத்து இரண்டாம் பாதி ஐந்தில் தன்னம்சத்துடனே கூட்டாமல் மற்றைய் நான்கு பூதங்களுடன் அரைக்கால். அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது பஞ்சீகரணம் எனப்படும்.

**பத்திரம்:** இலை.

**பரிணாமம் :** உபாதானத்திற்குச் சமானமான

சத்தையுடைய அந்நியதா (வேற்றுச்) சொரூபத்தைப் பரிணாமமென்பர். இதனையே விகாரமென்றும் கூறுவர்.

**பாதம்:** மித்தியாத்தன்மையினையும், அதன் நிச்சயித்தினையும் அல்லது மூன்று காலத்து அபாவத்தினையும் அதன் நிச்சயித்தினையும் பாதமென்பர். இதனையே அத்தியந்த நிவிருத்தி எனவும் கூறுவர்.

**பாரம்:** பாரம், அந்தம், பரிச்சேதம் இம்மூன்றும் ஒரே பொருள்படும்.

**பாவரூபம்:** இருக்கிறது என்னும் வியவகாரத்திற்கு எது ஏதுவோ அது பாவரூபமாம்.

**பாகத்தியாகலட்சணை:** வாச்சியார்த்தத்தின் விரோதி பாகத்தைவிட்டு அவிரோதிபாகம் கொள்ளப்படுவது பாகத்தியாகலட்சணையாம். தேச கால வடிவ விரோதி பாகத்தை விட்டு அவிரோதியான தேவதத்தனது சரீரத்தின் ஏகத்துவம் நிச்சயிக்கப்படுகின்றது.

**பாகவதோத்தமன்:** எவன் சர்வ பூதங்களிலும் ஆத்மாவின் பகவத் பாவத்தைக் காண்கின்றானோ, பகவத்வடிவத்தை தன்னிடத்திலே பூதங்களிலேக் காண்கின்றானோ அவன் பாகவத பக்தர்களிலே பாகவதோத்தமன் ஆவான்.

**பாதசாமாநாதி கரணியம்:** புருஷன் ஸ்தாணு என்னும் இரண்டு பதங்களுக்கும் ஒரு பொருள் கொள்ளுதல்.

**பாதத்தினாலாகிய அபேதம்:** பின்ன சத்தையுடைய பதார்த்தங்களுக்கு இரண்டினின்றும் ஒன்றை அற்பனித்தல்.

**பாதப்பிரஷாளனம்:** பாதபூசை, குருவின் பாதங்களைக் கழுவுதல்.

**பாஷ்பம்:** கண்ணீர்.

**பாதிதம்:** பாதத்தை அடைந்ததனைப் பாதிதம் என்பர். இதையே பாரிதானுவிருத்தி என்றும் கூறுவர். பின் தோன்றுவதை அநுவிருத்தி என்பர்.

**பாரமார்த்திகம்:** எதற்கு மூன்று காலத்திலும் பாதமுண்டாகிறதில்லையோ, அத்தன்மைய உற்பத்தி நாசமின்றியதாயிருத்தலின் நித்தியமான (சத்தியமான) சேதனம் எதுவோ அது பாரமார்த்திகமாம்.

**பாரமார்த்திகசத்தை:** பாரமார்த்திகத்தின் சத்தையினை (இருப்பை) பாரமார்த்திக சத்தை என்பர்.

**பாலகாக்ஞாயிகை:** வாசிட்டத்தில் ஸ்ரீ ராமருக்கு

உபதேசம் செய்யும்பொழுது உதாரணமாகச் சொல்லப்பட்ட கதை.

அசத்தென்கிற பட்டணத்திலே மூன்று இராஜ குமாரர்களுண்டு. இரண்டு பேர் இனிமேல் பிறக்கப்போகிறார்கள், ஒருத்தர் இனிமேல் கர்ப்பத்திலே வரப்போகிறான். புண்ணியவான்களாயிருக்கிற இந்த மூன்று இராஜகுமாரர்களும் வேட்டைக்குப் போனவிடத்திலே ஆகாசத்தில் நல்ல தோப்பிருக்கிறதென்று ஊமைகள் சொல்லக் கேட்டு ஆகாசத்திலே போய்த் தோப்பைக் கண்டார்கள். அவ்விடத்திலே முயற்கொம்பை வெட்டி சிங்கநாதமாக் ஊதிக்கொண்டு இனிமேல் வரப்போகிற பட்டணத்தில் இன்றைக்குப் பிரவேசித்தாரென்று முலைத்தாதி சொன்ன கதை இது.

**பிந்து தரிசனம்:** பத்மாசனம் சேர்த்து ஷண்முகி முத்திரையினால் இரண்டு அங்குஷ்டங்களால் மூடப்பட்ட இரண்டு காதுகளாலும் பத்துவித நாதங்கள் கேட்கப்படுகின்றன. இரண்டு சுட்டு விரல்களாலும் மூடப்பட்ட நேத்திரங்களில் பிரகாச வடிவ பிந்துவின் தரிசனமுண்டாகிறது. இரண்டு நடு விரல்களால் நாசியையும், இரண்டு மோதிர விரல்களாலும், இரண்டு சுண்டு விரல்ககளாலும் வாயையும் மூடப்படவே கும்பகம் உண்டாகின்றது. பின் இரண்டு கைகளையும் விடுதலால் நேத்திரத்திற்கெதிரில் கண்ணீர் விழும் வரையில் பிந்து தரிசனத்தால் திராடகம் உண்டாகின்றது. இது பிந்து தரிசனாதி அப்பியாசமாம்.

**பிரம்மம்:** எல்லாவற்றிலும் அதிக வியாகபம் எதுவோ அது பிரம்மம். பெரிதிற்கெல்லாம் பெரிது அது...

**பிரதீதி**: விளங்குதல், தோற்றம்.

**பிரம்மம் அவ்வியபிசாரி:** அஸ்திபாதிப் பிரிய வடிவப் பிரம்மம் எதுவோ அது எல்லாக்காலத்திலும் எல்லாவற்றிலும் சமானமாக கலந்திருக்கின்றது. ஆதலால் பிரம்மம் அவ்வியாசாரியாம்.

**பிராணயாமம்:** இது அகர்ப்பம், சகர்ப்பம் என இருவகைத்தாம். பிரணவத்தின் உச்சாடணமின்றியது அகர்ப்பம். பிரணவத்தின் உச்சாடணத்தோடு கூடியது சகர்ப்பம்.

**பிராணமயகோசம்:** ஐந்து கர்மேந்திரியங்களும் ஐந்து பிராணாதிவாயுக்களும் சேர்ந்த பத்து தத்துவங்களும் பிராணமய கோசமெனப்படும்.

**பிரம்மவரிட்டன்:** துரியமென்னும் ஏழாவது பூமியை உடையவன். இவனே ஜீவன் முக்தனாவான். இவனுக்கு எப்பொழுதும் ஆழ்ந்த சுழுத்தி அவஸ்தை உள்ளது.

**பிராணவாயுக்கள்:** பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன்.

**பிராரப்தத்தின் ஐந்து வகை:** உத்தமம், மத்திமம், கநிஷ்டம், அதமதரம், அதமதமம்.

**பிராப்தம்:** அஞ்ஞானத்தின் விட்சேப சக்தி வடிவ ஆசிரயத்திலிருக்கின்றது. அந்தக் கர்மம் பிராரப்தமெனப்படுகிறது.

**பிரம்மம் வாக்குக்கு எட்டாதது:** பிரம்மம் நாமரூபமற்றபடியால் வாக்குக்கு எட்டாதது.

**பிரம்மம் மனதிற்கு எட்டாதது:** பிரம்மம் சுயம் சித்தானபடியால் மனதிற்கு எட்டாதது.

**பிரமஜாதாத்மியம்:** அகங்காரத்திற்கு சாட்சியினோடுள்ள தாதாத்மியம்.

**பிரமகர்ம சமாதி:** பிரம ரூபமான கர்மத்தில் சித்தத்தின் ஏகாக்கிரத்தை.

**பிராந்திஞானம்:** வேதவிகிதமான நித்தியகர்மத்தில் நிஷித்தமென்னும் ஞானமும், அனுஷ்டானம் செய்ய வேண்டியவற்றுள் அனுஷ்டானம் வேண்டியதில்லை என்ற ஞானமும் பிராந்திஞானமாகும்.

**பிரமை:** யதார்த்த அனுபவத்தைப் பிரமை என்பர்.

**பிரமவனம்:** சம்சாரரூப விருஷம்.

**பிதுருயான மார்க்கம்:** ஞான ரூபப் பிரகாச மின்மையால் தமோ மயமாயும் அப்பிரகாச ரூபமான தூமம், இராத்திரி முதலியவைகளோடு கூடினதாயும். மீண்டும் சம்சாரத்துக் கேதுவாதலால் நிகிருஷ்டமாயும் இருத்தலால் இது கிருஷ்ண (பட்ச) மென்றும் சொல்லப்படும்.

**பிரதிகாரம்:** அடிக்கும் புருஷனை எதிர்த்து அடித்தல்.

**பிரமாணங்கள்:** ஆறு வகைப்படும்.
1. பிரத்தியட்சம் 2. அனுமானம். 3. ஆகமம்.
4. உபமானம், 5. அர்த்தாபத்தி. 6. அனுபலப்தி
இவற்றுள் பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் என்ற மூன்று பிரமாணங்களை மட்டும் யோக சாஸ்திரமுடையோர். அங்கீகரித்தனர். பிரமையின் கரணத்தினைப் பிரமானமென்பர்.

**பிரகிருதி :** பஞ்சதன்மாத்திரை (5) அகங்காரம் (1) மக்தத்துவம் (1) அவ்வியத்தம் (1) மொத்தம் (8) பூர்வ ஜென்மங்களிலுள்ள தர்மம், அதர்மம், ஞானம், இச்சை முதலியவற்றின் சம்ஸ்காரம் இந்த ஜென்மத்தில் அபிவியக்தமாவதற்கு பிரகிருதி என்று பெயர்.

**பிரதிவிம்பஸ்தானி:** தர்பணத் (கண்ணாடி) திலுள்ள பிரதிவிம்பம் அத்தர்பணத்தின் பசுமை

முதலிய தோஷங்களோடு சம்பந்தமாவது போல அவித்தியா ரூபமான உபாதியின் தோஷத்தோடு சம்பந்தமாவதால் சீவான்மா பிரதிவிம்ப ஸ்தானியாம்..

**பிரம அப்பியாசம்:** பிரம்மத்தைப் பலகாலும் ஏகாந்தத்திலிருந்து சிந்தனை செய்வதும், ஒரு மூமுட்சு வந்தால் அவனிடம் பிரம விஷயத்தையே பேசுவதும், சமானமான அப்பியாசி வரும் பொழுது ஒருவருக்கொருவர் அதையே போதிப்பதுமான இதையே பிரம அப்பியாசம் என்பர்.

**பிராந்தி:** கண்டு மயங்குதல்.

**பிரளயம்:** சுருட்டின சித்திர படம் போல அவரவர் கர்மத்தின் வழியே பிரபஞ்சத்தைத் தம்மிடத்திலே அடக்குகிறதே பிரளயம்.

**பிரதிபந்தம்:** சிரத்தையில்லாததே பரோட்சஞானத்திற்குப் பிரதிபந்தம். விசார மில்லாததே அபரோட்ச ஞானத்திற்குப் பிரதிபந்தம்.

பிரதிபந்தம் 3 வகைப்படும்.

1. **பூதப்பிரதிபந்தம்:** அவனவன் புத்தியை அனுசரித்துப் போதிக்கத் தீரும்.

2. **பௌஷியப்பிரதிபந்தம்:** சங்கற்பத்துடனே கூடியிருந்து வேதாந்த விசாரம் பண்ணின வாமதேவருக்கு ஒரு ஜனனமும், ஜடாபரதருக்கு மூன்று ஜெனனமும் உண்டானதாம். இது ஜெனன

மெடுத்துத்தான் தீரும்.
3. **வர்த்தமானப்பிரதிபந்தம்:** விஷயசக்தி - சாதன சதுட்டத்தினால் தீரும்.
பிரஞ்ஞாமந்தம் - பலகாலும் சிரவணம் பண்ணத் தீரும்
குதர்க்கம்- மனனத்தால் தீரும்.

**பிரமேய தோஷம்:** ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசத்தில் ஆத்மாவின் கண்ணுள்ள நிரபேஷ ஆந்தரத்தன்மையினைப்போல.

**பிராதிபாஸிகம்:** எவற்றிற்க்குப் பிரம்மஞானமின்றி ரஜ்ஜீ முதலியவற்றின் ஞானத்திலேயே பாதமுண்டாகிறதோ அத்தன்மையை தூலாஞ் ஞானமும் அதன் காரியமான ரஜ்ஜீ சர்ப்ப முதலியனவும் பிராதி பாஸிகமாம். அதன் சத்தை பிராதிபாஸிக சத்தையாம்.

**பிரத்துவம்சாபாவம்:** உபாதான காரணத்தில் காரியம் விலயமாதலை அல்லது பிரதியோகியின் பிரதிபூர்வக காரியத்தின் விலயத்தினை) பிரத்துவம் சாபாவம் என்பர். இதையே நாசமென்றும் சொல்வார்.

**பிரதிபாதகம்:** பிரம்மத்தைச் சொல்லுவது.

**பிரதிபாத்தியம்:** நூலின் வழியாக பிரம்மத்தைச் சொல்லுவது.

**பிரமோதம்:** தன்னை மறந்த ஆனந்த நிலை.

**பிரமானகதம்:** வேதத்தில் உள்ள அசம்பாவத்தின் ஞானம்.

**பிரமேயகதம்:** பிரமானத்தின் விஷயமாகிய மோட்சம் முதலியவற்றில் உள்ள அசம்பாவத்தின் ஞானம். துராக்ராகந்தை - சமாதியினால் தீரும்.

**பிரமாதா:** அந்தக்கரணம்.

**பிரமாணம்:** பிரமையின் அந்தக்கரணத்தின் விருத்தி.

**பிரமேயம்:** கடாதி.

**பிரம்ம சுபாவம் :** சத்தென்றும், சித்தென்றும் ஆனந்தமென்றும் பிரமத்திற்கு மூன்று சுபாவங்களுண்டு மண், கல், முதலான ஜடங்களிலே சத்துமாத்திரம் தோற்றுமேயல்லாமல் மற்ற இரண்டும் தோற்றாது. கோர, மூட விருத்திகளிலே சத்தும், சித்தும், தோன்றும் ஆனந்தம் தோன்றாது. சாந்த விருத்தியிலே சச்சிதானந்தம் மூன்றும் தோற்றும்.

**பிரம்மா:** சத்துவத்தில் ரஜஸ் பிரதானமாகும் பொழுது அதில் பிரதிபிம்பித்த ஈசுவரன் ஜகத்தை சிருஷ்டிக்கையினால் பிரம்மா என்ற பெயரைப் பெறுவார்.

**பிராஞ்ஞன்:** சுழுத்தியிலே காரிய சரீர தத்துவங்கள் இருபத்தாறையும் கைவிட்டு காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தியிருக்கும் போது பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திக சீவனென்றும் சொல்லப்படுவன்.

**பிருதக்கு:** வேறு.

**பிரத்தியட்சப்பிரமாணம்:** சாதன வடிவ பஞ்சேந்திரியங்கள். (ஞானேந்திரியங்கள்).

**பிரமாதாபாஸியம்:** இது வியாவகாரிகம் ஈசுவர சிருஷ்டி என்றும் சொல்லப்படுகிறது. இந்திரிய வாயிலாக அந்தக்கரணத்தின் விருத்தியினால் எதனைச் சாட்சி பிரகாசிக்கின்றதோ அது பிரமாதாபாஷியம்.

**பிரமான தோஷம்:** ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசத்தில் தானே பெறப்பட்ட பிரமான வடிவ ஆத்மாவிலுள்ள அவித்தை எதுவோ அது பிரமான தோஷமாம்.

**பிரஷ்டர்:** தள்ளப்பட்டவர்.

**பிராப்தப்பிராப்பியன்:** அடையவேண்டியவற்றை அடைந்தவன்.

**பிரமாதிஸ்தம்பபரியந்தம்:** பிரமா முதல் சிறு பூச்சிவரையிலான உயிர்கள்.

**பிரமாதாவின்தோஷம்:** லோபம்.பயம் முதலியன பிரமாதாவின் தோஷமாம். (அந்தக்கரணத்தின் தோஷமாம்)

**பிரமேயத்தின் தோஷம்:** சர்ப்பத்திற்கும், ரஜிதத்திற்கும் சமான வடிவமாம் பிரமேய (அதிஷ்டானம்) த்தின் தோஷமாம்.

**பிரமோத விருத்தி:** இஷ்ட விஷயத்தின் போகத்தால் உண்டாகும் விருத்தியாகும்.

**பிரம்ம வடிவம்:** ஒரு சரீரத்தில் சச்சிதானந்த வடிவ ஆத்மா யான் இருக்கின்றேன். யான் விளங்குகின்றேன்.யான் என்றும் பிரியனா யிருக்கின்றேன் என்று அனுபவத்தினால் சித்திக்கின்றதோ அங்ஙனமே அந்நிய சரீரங்களிலும் ஆகாய முதலிய பிரபஞ்சத்திலும் சித்திக்கின்றது. அதலால் அது பூரணமாம். எங்கும் வியாபகமாம். அதுவே பிரம்மவடிவமாம்.

**பிரம்மவித்து:** நான்காம் பூமியான சத்துவாபத்தியில் உள்ளவர். இவனுக்கு தனது சொரூபத்தின் அவிசார காலத்தில் ஜாக்கிரத்தைப் போன்ற அவஸ்தையிருக்கின்றது.

**பிரம்மவரன்:** அசம்சத்தி என்னும் ஐந்தாவது பூமியை உடையவன். சமாதியினின்றும் விழித்தது

போன்ற அவஸ்தை இருக்கின்றது.

**பிரம்மவரியான்:** பதார்த்த பாவனை என்னும் ஆறாம் பூமியை உடையவன்.

**பிரியம்:** பாசம். விஷயசுகத்தின் சாதனங்கள் தாமே பிரீதிக்கு விஷயமாகா. ஆனால் விஷயசுகத்திற்கு ஏதுவாயிருத்தலின் பிரீதிக்கு விஷயமாவதால் அவை பிரியமெனப்படும்.

**பிராதிபாஸிக சத்தை:** எதற்குப் பிரம்ம ஞானமின்றியே ரஜ்ஜீ முதலியவற்றின் ஞானத்தால் பாதமுண்டாகிறதோ அதற்குப் பிராதிபாஸிக சத்தையுண்டு.

**பிரதியோகி:** எதன் பேதம் அந்நிய வஸ்துவிலிருக்கின்றதோ அப்படிப்பட்ட பேதமுடைய வஸ்து எதுவோ அது பிரதியோகியெனப்படுகின்றது.

**பிரமானகதசம்சயம்:** ஆறு லிங்க வடிவ யுக்திகளால் வேதாந்தத்தின் தாற்பரிய நிச்சய வடிவ சிரவணஞ் செய்வதற்கு முன் எந்த சம்சய முண்டாகிறதோ அது பிரமானகதசம்சயமாம்.

**பிரமேயகதசம்சயம்:** வேதாந்த வடிவ பிரமானத்தினால் அறியத்தக்க மோட்ச முதலிய பதார்த்தங்களின் சொரூபத்தில் எந்த சம்சயமுளதோ அது பிரமேயகதசம்சயம் எனப்படும்.

**பிரமானத்தின் தோஷம்:** திமிரம், பித்தம், காமாலை, முதலிய நேத்திரரூப தோஷங்கள்.

**பிரமாண்டம்:** பஞ்சீகிருத பஞ்ச பூதங்களினின்றும் ஒன்றிலொன்று கலத்தல் வாயிலாகப் பிரம்மாண்டம் உண்டாயிற்று.

**பிரமாதம்:** தீயொழுக்கத்தால் உண்டாகிய சம்ஸ் காரமய பாபவடிவ அதர்மத்தினால் அறியாமை உண்டாகிறது. காரியாகாரியங்களின் பேத ஞானமாகிய விவேகத்தின் அபாவவடிவ அங்குர (முளை) வாயிலாக உற்பத்தியாகிய அவசியம் செய்யத்தக்க காரியத்தை மறத்தல் வடிவானது என்னும் பிரமாதம் உண்டாகிறது.

**பிரியதரம்:** விஷய சுகம் எதுவோ அது பரமப்பிரீதிக்கு விஷயமாகாது. ஆனால் பிரீதி மாத்திரத்திற்கு விஷயமாவதால் பிரியதரமாகும்.

**பிரியதமம்:** சொரூபசுகம் பரமப்பிரீதிக்கு விஷய மாதலால் பிரியதமம் எனப்படுகிறது.

**பிரஞ்ஞானப்பிரம்மம்:** பிரஞ்ஞானம்+பிரம்மம். அறிவே அதாவது ஞானமே பிரம்மம், இது ஐதரேயஉபநிடதத்தில் உள்ளது. ரிக்வேதமகாவாக்கியம்.

**பிராஞ்ஞன்:** மிகுந்த அறிவை உடையவன் அல்லது

சுழுத்தியில் அவத்தையை விஷயமாக உடைய அவினாசி ரூபப் பிரஞ்ஞையை உடையவன்.

**பிருதிவியின் ஐந்து தத்துவங்கள்:** எலும்பு. மாமிசம், இரத்தம், தோல், ரோமம்.

**பீஜ அங்குரநியாயம்:** வித்திலிருந்து மரம் வந்தது போல உடல் ஆதியால் கருமமும் கருமத்தால் சரீராதிகளும் அநாதியாகவே மாறி மாறி வருவது.

**பீஜம்:** விதை. உற்பத்திக்கு எது காரணமோ அது.

**பீழை:** துன்பம்.

**பீனம்:** பருத்த.

**புத்தேள்:** சூரியன்.

**புத்புத:** நீரில் தோன்றும் குமிழி.

**புநருத்தி:** கூறியது கூறல்.

**புத்தி:** நிச்சய ரூப விருத்திமயமானது.

**புத்திவிருத்தி:** ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்பன புத்திக்கு விருத்திகாளம்.

**புருஷார்த்தம்:** தர்மம், அர்த்தம், காமம், மோட்சம்.

**புணரி:** சமுத்திரம்.

**புலாகம்:** சோறு.

**புரீஷம்:** மலம்.

**புவனம்:** மேல் கீழாக பதினான்கு லோகங்கள்.

**பூரணன்:** தேசகால வஸ்துக்களால் ஆகிய பரிச்சேதமின்றியவனாயிருத்தலின் பூரணன் எனப்படுகின்றான்.

**பூரகம்:** முதலில் சந்திர நாடியினாலும், பின் சூரிய நாடியினாலும் சுவாசத்தை நிரப்புதல் பூரகம் எனப்படும்.

**பூர்த்தம்:** குளங்கள் வெட்டுவதும், ஆலயங்கள் கட்டுவதும், அன்னதானங்கள் செய்வதும் சத்திரங்கள் கட்டுவதும் பூர்த்தம் எனப்படும்.

**பூர்வஅப்பியாசம்:** பூர்வ ஜனனத்தில் சம்பாதித்த ஞான சம்ஸ்காரத்திற்கு பூர்வ அப்பியாசம் என்று பெயர்.

**பூதங்களின் குணங்கள்:**

| | | |
|---|---|---|
| ஆகாசம் | - | குணம் ஒன்று |
| வாயு | - | குணம் இரண்டு |
| அக்கினி | - | குணம் மூன்று |
| அப்பு | - | குணம் நான்கு |
| பிருதிவி | - | குணம் ஐந்து |

**பேராத:** மாறாத, ஒழியாத.

**பேதம் ஐந்து:** ஜீவேசுவர பேதம், ஜீவர்களின் பரஸ்பர பேதம், ஜீவ ஜடங்களின் பேதம், ஜட

ஜடங்களின் பேதம், ஜடஜடங்களின் பேதம், ஜட ஈசுவர பேதம்.

**பேதித்தல்:** நாசஞ்செய்தல்.

**போதம்:** தத்துவஞானம்.

**போது அலர்:** புஷ்பம்.

**போக்தா:** அனுபவிப்பவன்.

**போதசொரூபம்:** ஆன்மசொரூபம்.

## ம

**மருத்து:** தேவதைகளில் ஒரு பகுதி, பிரிவு.

**மகாரதி:** தான் ஒருவனாகவே தனுசையுடைய பதினாயிரம் சூரவீரர்களோடு யுத்தம் செய்பவன். சஸ்திர சாஸ்திரத்தில் மிகச் சிறந்தவன்.

**மத்தியஸ்தன்:** பரஸ்பரம் விவாதம் செய்யும் இருவர்க்கும் இதத்தை இச்சிப்பவன் மத்தியஸ்தன்.

**மனம்:** பத்து இந்திரியங்களுக்கும் (ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5) ராஜாவாய் இந்திரியங்களின் வழியே குணதோசம் விசாரிக்கிறதாய் இருதய கமலத்தின் நடுவாக இருப்பதே மனமாகும். வைராக்கியம், சமை முதலான சாத்வீகப் பிரவிருத்தியும் காமக்குரோத முதலான ராஜதப்பிரவிருத்தியும், சோம்பல்

நித்திரை முதலான தாமதப் பிரவிருத்தியும் மனதின் தொழில்களாகும்.

**மங்கலம்:** விக்கினத்தை அழிப்பதற்கான ஆதாரத்தை மங்கலமென்பர். இந்த மங்கலம் வஸ்து நிர்த்தேசரூபம். ஆசீர்வாதரூபம். நமஸ்காரரூபம் என்னும் பேதத்தால் மூன்று வகைப்படும்.

**மனனம்:** பேதத்திற்குப் பாதகமும். அபேதத்திற்குச் சாதகமுமான யுக்திகளால் அத்வைதப்பிரம்மத்தை சிந்தித்தலை மனனமென்பர். சிரவணத்தினால் பிரமத்தை அனவரதம் சிந்திக்கிறதே மனனம். இதுவே ஆத்ம சோதனையாகும்.

**மகாவாக்கியம்:** பரமாத்மாவின் ஏகத்துவத்தை அறிவிக்கும் வாக்கியம் ("தத்துவமசி" தத்+துவம்+அசி)

**மண்டலம்:** பெருவட்டம்.

**மதம்:** அதிகத் தன்மையன அல்லாத. திமிர். தமக்கென்று கொள்கைகளையும். குறிக்கோள்களையும். கடவுள்களையும். சடங்குகள் சம்பிரதாயங்களையும் கொண்டது.

**மகதத்துவம்:** மாயையினின்றும் உண்டானது என்று அறியமுடிகிறது. மலதோஷம் நீங்க நிஷ்காம கர்மத்தையாவது சர்வ ஜீவர்களிடத்தும் மாயையோடு

கூடிய சேதனமாகிய ஈசுவரனது இச்சையால் சமஷ்டி புத்தியாகிய மகதத்துவம் உண்டாயிற்று. இம்மகதத்துவமானது சாத்விகம். ராஜசம். தாமசம். என்னும் பேதத்தால் மூன்று விதமான அகங்காரத்தை உண்டாக்கியது.

**மகாவாக்கியார்த்தம்:** ரிக்வேதம் - பிரஞ்ஞானப்பிர்மம். யசுர்வேதம் - அகம் பிரமாஸ்மி. சாமவேதம் - தத்துவமசி. அதர்வனம் - அயம்ஆத்மாபிரம்மம்

**மங்கலம் மூன்று:** வஸ்து நிர்த்தேசரூபமங்கலம். ஆசீர்வாதரூபமங்கலம். நமஸ்காரரூபமங்கலம்.

**மச்சேந்திராசனம்:** இடது தொடையின் அடியில் வைக்கப்பட்ட வலது பாதத்தின் குதியை இடது கையினாற் பிடித்து வலப்பாகத்தின் முழந்தாளில் வைக்கப்பட்ட இடது பாதத்தின் அங்குஷ்டத்தினை வலது கையினாற் பிடித்துக் கொண்டு உட்காருதல் மச்சேந்திராசனம்.

**மத்திய அதிகாரி:** இருபத்தோரு வருஷ முதல் முப்பது வருஷமான வயதுடையவனும் அதிக தோஷமில்லாத மத்திய கேசங்களையுடையவனும் மத்திய புத்தியையுடையவனும் ஆசாரியனை விட வலியினாலும். புத்தியினாலும் அதிகாரத்தினாலும் சமானமுள்ளவனும் ரோகமில்லாதவனுமாய் உள்ளவன்.

**மத்தியப்பிராரப்தம்:** முதலில் பிரவிருத்திக்கு ஏதுவாயும் பின் நியதிக்கு ஏதுவாயுமுள்ள பிராரத்தம். மத்தியமாம். கிரகஸ்தாசிரமத்திலிருந்து பின் வித்வஸ் சந்நியாசம் (உ.ம்.) யாக்கியவல்கியர்.

**மந்தவைராக்கியம்:** புத்திரன். திரவியம். முதலியவற்றின். நாசத்தால் "சை" இதென்ன சம்சாரம் என்றுண்டாகும் க்ஷணிக புத்தி விருத்தி மந்த வைராக்கியமாம்.

**மயூராசனம்:** இரண்டு கைகளையும் பூமியில் வைத்து. இரண்டு முழங்கைகளையும் நாபியின் பக்கங்களின் பொருத்திச் சரீரத்தை மயிலுக்குச் சமானமாய் நிராதாரமாய் தூக்கி நிறுத்துதல் மயூராசனமாகும்.

**மலதோஷம்:** மலமென்பது பாபத்திற்காம். இந்தப் பாவம் ஜன்மாந்திரங்களில் செய்யப்பட்ட அசுபகர்மத்தினால். அதாவது தீவினையினால் உண்டாகிய அதர்மம். அபூர்வம். அதிர்ஷ்ட மென்னும் பெயர்களோடு கூடிய சம்ஸ்காரம்(வாசனை) வடிவமாயிருத்தலால் மிகச் சூட்சுமமாயிருக்கின்றது. பிரத்தியட்சமாகப் பார்க்கமுடியவில்லையாயினும் அசுபவாசனையின் வாயிலாக அதன் அனுமானம் உண்டாகின்றது. ஒருவனுக்கு நிஷித்த கர்மங்களிலாவது விஷயங்களிலாவது இச்சையுண்டாகிறதோ அவனுடைய சித்தத்தில் அசுபவாசனையிருப்பதால் மலதோஷத்தை

இரக்கத்தையாவது அல்லது ஈஸ்வரநாம உச்சாடனத்தையாவது சொல்ல வேண்டும்.

**மதுரம்:** தேன் மெய்மறந்த.

**மனோமயகோசம்:** ஞானேந்திரியங்கள் ஐந்தும். மனம் ஒன்றும் ஆகிய ஆறுதத்துவங்களும் சேர்ந்தது மனோமயகோசம். இது ரஜோகுணத்தோடு கூடிய சத்துவகுணத்தின் அவஸ்தையாகும்.

**மறீசகம்:** நாசமாகின்ற பூமி. விசாரித்துப் பார்க்கில் ஜகம் மித்தையாகும்.

**மமர்:** மயக்கம்.

**மர்க்கட:** குரங்குக்குட்டி.

**மாலான:** மயக்கத்திற்குக் காரணமான.

**மாதாமகன்:** அம்மாவின் தகப்பனார்.

**மாயை:** சத்துமில்லாமல் அசத்துமில்லாமல் உற்றுப்பார்த்தால் இல்லாமல் போகிறதே மாயை அசத்தென்றும், ஜடமென்றும், துக்கமென்றும், மாயையின் சொரூபம் மூன்று விதமாயிருக்கும். அசத்து மானுடக்கொம்பு முயற்கொம்பிலே காணப்படும். மண், கல், முதலானவைகளில் ஜடம் காணப்படும். கோர மூடவிருத்திகளிலே துக்கம் காணப்படும். சாந்த

விருத்தியிலே ஜடமும். போதமும் இருக்கிற படியினாலே மாயை பிரமத்தோட கலந்து காண்பிக்கும்.

**மானம்:**
வாஸ்தவமாகப் பூஜிக்கத்தக்கவனல்லாதிருந்தம் உலகத்தர் முன் தன்னைப் பூஜ்யத்தன்மையனாகக் காட்டுவது.

**மார்த்தவம்:** குரூரசுபாவமில்லாமை.

**மாத்திரை:** ஓம் என்னும் பிரணத்தை ஒரு தடவை உச்சரிக்க ஆகும் காலம். கை நொடித்தல் அல்லது கையினால் முழந்தாளைச் சுற்றுதல் ஆகியனவும் மாத்திரையாம்.

**மாயையின் வேறு பெயர்கள்:** அவ்வியக்தம். அட்சரம். அஞ்ஞானம், பிரதானம், சக்தி, பிரகிருதி முதலியன.

**மித்தை:** பாதிக்கத்தக்க சொரூபமாயிருப்பதாகிய அஞ்ஞானம் மித்தை எனப்படும். இதுவே அநிர்வசநியம் என்றும் கூறப்படுகிறது.
**முமூட்சு:** மோட்சத்தில் இச்சையுடையவன். சிஞ்ஞாசு என்றும் கூறப்படுபவன்.

**முக்கிய அகங்காரம்:** அதிஷ்டமான அகங்காரங்களைப் பகுத்துக் காணாத மூடர் ஒருமைப்பாடாக நான் வந்தேன். நான் போனேன்

என்று சிதாபாசனாகப் பேசுகிறது முக்கியவகங்காரம்.

**முத்தி:** இது முக்தி என்றும் சொல்லப்படும். அகங்காரக்கிரந்தியென்றும், சம்சார பந்தமென்றும் சொல்லப்படுகிற ஆவரணத்தை சற்குரு கடாட்சத்தினாலே இருபத்தொன்பது தத்துவங்களின் ஒன்றற்கொன்றுள்ள பேதந் தெரிகிறதே முத்தி.

**முத்தம்:** அஞ்ஞானமும் அதன் காரியமான பாசபந்தகளினின்றும் விடுபட்டு இருப்பது முத்தம்.

**முக்கிய அபேதம்:** பாதமாக்குதலின்றியே சொரூபமாகத் தோற்றும் அபேதம் எதுவோ அது முக்கிய அபேதமாம். ரஜ்ஜிவிற்கும், சர்ப்பத்திற்கும், தாணுவிற்கும் புருடனுக்கும், தேகத்திற்கும் ஆத்மாவிற்கும், பிரம்மத்திற்கும் ஜகத்திற்கும் முதலில் அவிவேக காலத்தில் உள்ள அபேதம் எதுவோ அது முக்கிய அபேதமாம்.

**முத்திரை:** ஹடயோகத்தின் முத்திரை பத்தாகும். 1. மனமுத்திரை, 2. மகாபந்தம், 3. மகாவேதம், 4. கேசரி, 5. உட்டியானபந்தம் 6. மூலபந்தம், 7. ஜாலாந்தரபந்தம், 8. விபரீதகரணி, 9. வஜ்ரோலி, 10. சக்தி சாலனம்.

**மூலப்பிரகிருதி:** ஜகத்திற்கு காரணமாயும் முக்குண சாமியாவஸ்த ரூபமாயும் இருப்பது மூலப்பிரகிருதி.

**மூடம்:** நித்திரை. ஆலசியாதி. இவற்றால் மூடப்பட்ட சித்தத்திற்கு மூடம் என்று பெயர்.

**மூல அஞ்ஞானம்:** சுத்தசைதன்னியத்தை மறைக்கும் அஞ்ஞானம் மூல அஞ்ஞானமாகும். இது அவஸ்தையாகும்.

**மூன்று சக்திகள்:** சுத்த சத்துவத்திற்கு ஆனந்த ரூப சத்தி என்றும், சுத்த ரஜஸிற்கு சித்ரூப சத்தியென்றும். சுத்த தமஸிற்கு சத் ரூப சத்தியென்றும் பெயருள்ளதால் இவைகள் முக்குண சத்தியாகும்.

**மூவகைச் சாதிகள்:** 1. இக லோக பரலோக புத்தி இரு வகையில் கொடுக்கின்ற மனுட சரீரம் உத்தம ஜாதி.
2. பரலோக புத்தியை மறைத்து, இகலோக புத்தியை மாத்திரம் கொடுக்கின்ற பசு, பட்சி முதலானவை மத்திம ஜாதி.
3. இரண்டு லோக புத்தியையும் மறைக்கின்ற மரம், செடி. கொடி முதலியவை அதம ஜாதி.

**மூன்று கிரந்திகள்:** 1. இருதயக்கிரந்தி - சித் ஜடக் கிரந்தியும் அதன் ஞானமாகிய விபரீத பாவனையும் இருதயக்கிரந்தியாம் .2. சம்சயக்கிரந்தி - யதார்த்த அயதார்த்தமென்னும் இரண்டு பட்சங்களை விஷயம் செய்யும் ஞானம் சம்சயக்கிரந்தியாம்.

3. கர்மக்கிரந்தி - கர்மத்தோடு கூடிய கிரந்தியாம்.

**மூர்த்தம்:** உருவத்தோடு கூடிய சிலை முதலானவைகள்.

**மூலாவித்தை:** இது மூல அவத்தையென்றும் மூலப்பிரகிருதியென்றும், மகாமாயை என்றும் சொல்லப்படும். அஞ்ஞானமிருக்கிறது. விளங்குகிறது என்று பிரம்மத்தினது சத்தாஸ் பூர்த்தியினால் சித்தமாகுதலால் "ஸ்வ" என்னும் பிரம்மம் எதுவோ அதன் ஆசிரமாயிருத்தலின் "சுவராசியம்" எனப்படுவதும் நான் பிரமத்தை அறியேன் என்று தானாகிய பிரம்மத்தை ஆவரணம் செய்தலால் "ஸ்வ விஷயமும்" நான் அஞ்ஞானி என்று அபிமானம் செய்தலால் இது மூலாவித்தையாம்.

**மூலபந்தம்:** பாதத்தின் குதியை ஆசனத்தின் கீழ் அழுத்தி மூலத்துவாரத்தை நிரோதித்தல் மூலபந்தமாம்.

**மூன்று சத்தை:** பரமார்த்த சத்தை, வியவகார சத்தை, பிரதிபாசிக சத்தை.

**மூன்று ஆத்மாக்கள்:** பிரம சைதந்நியமும் சாக்கிரத்திற்கும் சாட்சியாயிருக்கும் போது சீவாத்மா. பிரமசைதந்நியமும் சொப்பனத்திற்கும் சாட்சியாயிருக்கும் போது அந்தராத்மா. பிரமசைதந்நியமும் சுழுத்திக்கு சாட்சியாயிருக்கும்போது பரமாத்மா.

(பிரமசைதந்நியமும் அவஸ்தாத்திரயமும் சாட்சியாயிருக்கும் போது ஞானாத்மாவென்றும் கூடஸ்தனென்றும் சொல்லப்படும்).

**மேயோர்:** மேன்மை உடைய யோகிகள்.

**மேகாகாசம்:** மகாகாசத்தின் மேக ஜலத்திலே அனுமானத்தினாற் கண்ட பிரதி பிம்பமே மேகாகாசம்.

**மோதம்:** இஷ்டவிஷயத்தின் லாபத்தால் உண்டாகும் விருத்தி. மகிழ்ச்சி.

**மோட்சம்:** சகல அநர்த்தமும் நீங்கிப் பரமானந்தமடைதலை மோட்சமென்பர்.

**மோகஜித்தா:** மோகத்தைச் ஜெயித்தவர்கள்.

## ய

**யதேஷ்டா சரணம்:** இஷ்டப்படி நடத்தல்.

**யாகம்:** ஹோமத்திற்கு நெய் முதலிய பொருள்களைத் தருவது (தியாகம் செய்வது) யாகம் எனப்படும்.

**யதிரிச்சை:** வேண்டாதிருக்கத் தாமே வந்தடைவன.

**யதமானம்:** மந்த விராகத்திற்கு யதமானமென்று பெயர்.

**யௌக்திகம்:** ரஜ்ஜு சர்ப்பம், சுத்தி ரஜிதம், சொப்பன ஜகத்து முதலிய திருஷ்டாந்த வடிவமும் அனுமானாதி வடிவமுமான யுக்திகளாலாகிய வேதாந்த யுக்திகளில் சமர்த்தராகிய பண்டிதர்களது சித்தத்தில் ஆரூடமானது.

**யோகம்:** சித்தவிருத்தி நிரோதமான அஷ்டாங்க யோகம், சித்தத்தின் சர்வ விருத்திகளினுடைய நிரோதத்திற்கு யோகமென்று பெயர். உபாசனையென்றும் வழங்கப்படும். அடையாத வஸ்து அடையப்படுவதும் யோகம்.



**ரமணீயம்:** சுந்தரம், அழகு.

**ரதன்:** ஒரே ஒரு வீரனோடு நேருக்குநேர் யுத்தம் செய்பவன்.

**ரஜிதம்:** வெள்ளி.

**ராகம்:** கிடைத்த விஷயங்களை நாசம் பண்ணும்படியான காரணம் நேரிட்டிருந்தும் இவ்விஷயம் நாசமடையாதிருக்க வேண்டுமென்னும்

சித்தத்தின் விருத்தி விசேசத்திற்கு இராகமென்று பெயர்.

**ராசி:** கூட்டம்.

**ராசதவிருத்தி:** கோரம், காமமாதிகள் ஆனந்தத்தைத் தரும்.

**ரேசகம்:** கும்பத்தில் நிறுத்திய சுவாசத்தை மெதுவாக வடுதல் ரேசகமாகும்.

## ல

**லக்ஷணை:** சையோகம் அல்லது தாதான்மிய முதலிய எவ்வகையாகவேணும் பிற பொருளோடு வாச்சியார்த்தத்திற்குள்ள சாட்சாத் சம்பந்தம் எதுவோ அது லக்ஷணை எனப்படுகிறது.

**லக்ஷியார்த்தம்:** வாச்சியார்த்தத்தின் சம்பந்தி லட்சியார்த்தமாம்.

**லக்ஷணாவிருத்தி:** சப்தத்திற்குத் தனது வாச்சியார்த்த வாயிலாக வேறோர் (வாக்கிற்கு விஷயமாகாததாகிய) பொருளோடுள்ள பரம்பரைச் சம்பந்தம் எதுவோ அது சப்தத்தின் லட்சணாவிருத்தியாம்.

**லயபூர்வகசமாதி :** காரிய காரணங்களான

சர்வப்பிரபஞ்சமும் உளதாக இருந்தும் சைதனியப் பிரமமாத்திரம் விஷயமாயுள்ள சமாதி எதுவோ அது லயபூர்வகசமாதியாம்.

**லட்சணம்:** அசாதாரண தர்மம்.

**லிங்கதேகத்தில் மூன்று கோச கற்பனை:** பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், என்னும் மூன்று கோசங்களும் லிங்கதேகவடிவமாகும். பிராணமயகோசம், கேவலம் ரஜோ குணத்தின் அவஸ்தையாம். மனோமய கோசம் ரஜோகுணத்தோடு கூடிய சத்துவகுணத்தின் அவஸ்தையாம். விஞ்ஞானமயகோசம் கேவல சத்துவகுணத்தின் அவஸ்தையாம்.

**லிங்கதேகத்தின் தத்துவங்கள்:** ஞானேந்திரியங்கள் - 5, கர்மேந்திரியங்கள் - 5, வாயுக்கள் - 5, மனம் - 1, புத்தி - 1 ஆக 17 தத்துவங்கள்.

**லிங்கதேகத்தின் தர்மம்:** சுபாசுபக்கிரியைகளின் கர்த்திருத்துவம், சுகதுக்கங்களின் போக்திருத்துவம், பரலோகத்திற்குப் போதல், இவ்வுலகத்திற்கு வருதல், இராகம் துவேஷம் முதலியன, சமதமம் முதலியன, அந்த மந்த படுத்துவங்களெனும் இவை முதலியன லிங்கதேகத்தின் தர்மங்களாம்.

**லிங்கதேகம் அசத்து:** மரணம், மூர்ச்சை சுழுத்தி, பிரளயம், ஞானம் (சமாதி) என்னும் ஐந்து

அவஸ்தைகளிலும் லிங்கதேகத்திற்கு நாசம் (தனது காரணமாகிய அஞ்ஞானத்தில் லயமாதல்) உண்டாகிறது. இப்படி வியபிசாரியாயிருத்தலால் இந்த லிங்க தேகம் அசத்தாம்.

**லௌகிகம்:** விசாரமின்றிய பாமர விஷயிகளது சித்தத்தில் இயல்பாய் பெறப்பட்டுள்ளது என்னும் பேதத்தால் மூன்று வகையாகும். அவற்றால் இந்த ஜகத்தாகிய காரியத்தோடு கூடிய மாயையானது துச்சை, அநிர்வசனியை, வாஸ்தவி என்னும் பேதத்தால் மூன்று வகையாக அறியத்தக்கது.

## வ

**வர்த்தமான காலம்:** நிகழ்காலம்

**வஸ்து தந்திர ஞானம்:** இது தத்துவ விசாரத்தால் வரும். இது வந்து விட்டால் சகல சம்சாரத்தையும் சுடும். விசாரம் செய்ய மறந்தாலும் கூட சம்சாரத்தை மீண்டும் தொடர விடாது. இந்த ஞானத்தை அடைந்தவன் சீவன் முக்தனாய் திருப்தியடைந்து பிராரத்த க்ஷயத்தைப் பார்த்திருப்பான்.

**வஸ்து பரிச்சேதம்:** அந்நியோந்நியாபாவத்தின் பிரதி யோகத்தன்மை வஸ்து பரிச்சேதமெனப்படும்.

**வஸ்து:** சுத்தப்பிரமத்தை வஸ்து என்பர்.

**வஸ்திரதோதி:** நான்கு அல்லது ஆறு அங்குல அகலமும் எட்டு அல்லது பதினாறு முழ நீளமுள்ள மல் அல்லது ஜகன்னாதி என்னும் துணிப்பட்டியை ஜலத்தில் நனைத்து வாயால் விழுங்கி வயிற்றில் போட்டுப் பின் வாய்க்கு வெளியில் வைக்கப்பட்ட துணியினால் தைரியமாக இழுத்த வெளிப்படுத்துதல் வஸ்திர தோதி.

**வசீகரவைராக்கியம்:** மனத்தின் நிக்கிரகமாகிய சமம் வசீகாரவைராக்கியமாம். இது ஜீவப்பிரம்மம் என்றும் சொல்லப்படும்.

**வஜ்ரோலி:** குய்யேந்திரிய வாயிலாக ஜல முதலியவற்றை இழுத்து விடுதல் வஜ்ரோலியாம்.

**வருத்தம்:** பிரயாசை.

**வாசுதேவர்:** சர்வபூதங்களும் எவரிடத்தில் வசிக்கின்றனவோ, எவர் சர்வ பூதங்களிலும் அந்தர்யாமியாக வசிக்கின்றனரோ அவரே வாசுதேவர்.

**வாதம்:** ஒரு குருவினிடத்தில் பயின்ற இரண்டு மாணாக்கர்கள் அல்லது குரு, மாணாக்கர் இவர்களுடைய தத்துவ நிர்ணய பரியந்தத்தை வினாவிடை ரூபமாக அறிவது.

**வாயுக்கள் :** பஞ்சவாயுக்கள் என்றும் அழைக்கப்படும். ஐந்து பூதங்களினுடைய

ராஜோம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரையெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது வாயுக்கள் எனப்படும்.

**வாயுவின் ஐந்து தத்துவங்கள் :**

1. சுருங்குதல் - பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கிறது.
2. நடத்தல் - ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது.
3. இருத்தல்,நிமிர்தல் - தேயுவின் பாகம் சேர்ந்திருக்கிறது.
4. ஓடுதல் - வாயுவின் முக்கிய பாகம்.
5. விரிதல் - ஆகாயத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது.

1. **வியானன்:** இது ஆகாசத்தின் அம்சமான படியால் அதைப்போல சர்வாங்கமும் வியாபித்திருக்கும்.

2. **பிராணன்:** இது வாயுவினம்சமான படியால் அதைப்போல இருதயத்திலிருந்து நாசிகாதி பரியந்தம் அலையும்.

3. **அபானன்:** இது அக்கினியின் அம்சமான படியால் அதைப்போல சாடராக்கினியாக உஷ்ணித்துக் கொண்டுகுதத்தைப் பற்றி நின்று உண்ட அன்னபானாதிகளைச் சீரணிப்பயக்கும்.

4. **சமானன்:** இது அப்புவின் அம்சமான படியால் சரீரநடுவான நாபித்தானத்தில் நின்று உண்ட அன்னரசங்களை அப்புவைப்போல இழுக்கும்.

5. **உதானன்:** இது பிருதிவியின் அம்சமான படியால் கண்டத்தைப்பற்றி பிருதியைப் போல கடினமாக நின்று உண்ட அன்னபானாதிகளைக் கடையும்.

**வாசனை நசித்தல் :** வைராக்கியத்தினால் வாசனை நசிக்கின்றது.

**வாளமர்:** அஸ்திர, சஸ்திரங்களைக் கொண்டு செய்யும் யுத்தம்.

**வாயுவின் தத்துவங்கள்:** சுருங்குதல். நடத்தல், இருத்தல், ஓடுதல், விரிதல்.

**வாஸ்தவி:** சத்தியமானது.

**வாத்ஸல்யம்:** தாயின் பரிவு.

**வாயசம்:** காகம்.

**வாஞ்சை:** நிகழ்காலத்தில் அடையத்தக்க பொருளின் இச்சை எதுவோ அது வாஞ்சையாம்.

**விஜாதியம்:** அந்நிய ஜாதியினுடையதோடு உள்ள சம்பந்தம்.

**விரவும்:** பொருந்தும்.

**விள்ளும்:** முன் சொல்லிய.

**வியத்தமாம்:** பிரகடனமாம்.

**விகிதகர்மம்:** சுபகர்மம்

**விஷிப்தம்:** பெரும்பொழுது ராகத் துவேஷாதிகளுடனும், சிறுபொழுது தெய்வீக நிலையுடனும் இருக்கும் சித்தத்திற்கு விஷிப்தம் என்று பெயர்.

**வியர்யயம்:** அநான்ம ரூபமான தேகாதிகளில் ஆன்மத்துவபுத்தியும், ஆத்ம ரூபமான புத்தியில் அநாத்துமபுத்தியும் உடையது மித்தியா ஞானமாகும். விபரீத நிச்சயித்தினை உடையது.

**விராகம்:** வைராக்கியம்.

**விகல்பம்:** சிந்தனையற்றது.

**விகாரங்கள்:** ஆகாச முதலிய பஞ்சமகாபூதங்களும், சுரோத்திராதி ஞானேந்திரியங்களும், வாக்காதி கர்மேந்திரியங்களும் மனமும் ஆகியவைகள் பதினாறு விகாரங்கள்.

**விதண்டை:** ஒருவரை ஒருவர் ஜெயிக்கும்படியான இச்சையுடைய புருஷர் தமது பட்சத்தை ஸ்தாபனம் பண்ணுகிற கதைக்கு விதண்டை என்று பெயர்.

**வியித்தானம்:** விசேஷமாக எழுதல்.

**விவேக விஞ்ஞானம்:** மகாவாக்கியவிசாரத்தால்

ஜனிக்கின்ற பரமான்ய ஐக்கிய சாட்சாத்காரம்.

**விகற்பம்:** சப்த சிரவணத்தின் அனந்தர முண்டாவதும், அர்த்த ரூபவஸ்துவோடு கூடாததுமான சித்தத்தின் விருத்தி விசேசத்திற்கு விகற்பமென்று பெயர். இங்ஙனம் கூறியது வந்தியா புத்திரன். நர சிருங்க முதலிய பொருள்களை விஷயமாக உடைய விருத்திகளை.

**விம்பஸ்தானி:** அவத்தை ரூபமான உபாதியின் தோஷங்கள் சம்பந்தியாமையின் பரமேஸ்வரன் விம்பஸ்தானியாம்.

**விராட் புருஷன்:** பரமாத்மா சமஷ்டி ஸ்தூலபூத. ஸ்தூல சரீரத்துடனே கூடினால் விராட் புருஷன் என்று சொல்லப்படுவான்.

**விவேகம்:** ஜீவன், ஜகத்து, பரமாத்மாக்களைக் குரு சந்நிதானத்திலே பலப்படவிசாரித்ததால் வரக்கூடியதே விவேகம்.

**விசாரம்:** கடாகாசம், மகாகாசம், ஜலாகாசம், மேகாகாசம் போலக் கூடஸ்தரையும் பிரமத்தையும், ஜீவனையும், ஈசுவரனையும் பகுத்தறிகிறதே விசாரமாகும்.

**விக்ஷேபம்:** விட்சேபம் என்றும் சொல்லப்படும். கிளிஞ்சலை வெள்ளியென்று பார்க்கிறாற் போல சுபாவ சைதன்னியமாயிருக்கிற தன்னைக் கற்பிதமாயிருக்கிற அகங்காரியாய்க் காண்கிறதே விட்சேபம்.

**விபரீத பாவனை:** தேகமே தான்என்பதே விபரீத பாவனையாகும். (நான் பிரம்மம்) என்னும் நிதித்தியாசனத்தால் இது நீங்கும்.

**விஷ்ணு:** சத்துவத்தில் சத்துவம் பிரதானமாகும் பொழுது அதில் பிரதி பிம்பித்த ஈசுவரன் சகத்தை ரஷிக்கும்பொழுது விஷ்ணு என்று பெயர் பெறுகிறார்.

**விசுவம்:** உலகம்

**விசிரிம்பித்தல்:** வெளிப்படுதல்.

**விருத்திஞானம்:** இந்த ஞானம் சொரூபத்தில் மருவும் அஞ்ஞானத்தைச் சுடும்.

**விகாரம்:** அந்நிய உருவத்தை அடைதல்.

**விசுவன்:** அவித்தையிற் பிரதிபிம்பித்த சிதாபாசன் சாக்கிரத்திலே இருபத்தாறு தத்துவங்களுடனே கலந்து நின்ற போது விசுவனென்றும், வியவகாரிக சீவனென்றும் சொல்லப்படுவான்.

**வியஷ்டி:** தனிமரம். ஒருமை

**வியவகாரம்:** சொல்லுதலையும், தோற்றுதலையும் வியவகாரம் என்பர்.

**விஷயசேதனம்:** ஜாக்கிரப் பிரபஞ்சம், சுத்தி, ரஜ்ஜு என்பவற்றால் வரையப்பட்ட சேதனம் விஷயசேதனமெனப்படும்.

**வியாகாத தோஷம்:** ஒன்றிற்கொன்று விரோதமுள்ள இரண்டு தர்மங்கள் ஒரு அதிகரணத்திற் கூடியிருப்பது வியாகாத தோஷமாம். (உ.ம்.) என் தாய்மலடி, எனக்குப் பேசநாக்கில்லை.

**விதேய விசேஷணங்கள்:** சத்து, சித்து, ஆனந்தம், பிரம்மம், சுயம்பிரகாசம், கூடஸ்தன் சாட்சி, திருஷ்டி, உபதிருஷ்டா, ஏகம்.

**வியாவர்த்தகம்:** வேறு பிரித்தறிவிப்பது.

**விஷயவடிவபாதம்:** மித்தியாத் தன்மையினையேனும், முக்காலத்தின்மையினையேனும் விஷயவடிவபாதமென்பர். இதனையே நித்திய விருத்தியென்றும் கூறுவர்.

**விவர்த்தம்:** அதிஷ்டானத்தினும் விஷம (குறைந்த) சத்தையுடைய வேற்றுச் சொரூபத்தை விவர்த்தமென்பர். அதனையே கற்பித காரியமென்றும் கூறுவர்.

**விஷம சத்தை:** குறைந்த சத்தை

**வியவகிதம்:** மறைப்பு உள்ளதனை வியவகிதமென்பர்.

**விவர்த்த உபாதானம்:** விவர்த்த வடிவ காரியத்தின் காரணத்தினை விவர்த்த உபாதானமென்பர். இதனையே அதிஷ்டானமென்றும் கூறுவர்.

**விசேஷ அம்சம்:** எது பிராந்தி காலத்தில் தோற்றுகிறதில்லையோ, எதன் தோற்றத்தால் பிராந்தி நீங்குகின்றதோ, அதனை விசேஷ அம்சமென்பர். இதனையும் அதிஷ்டானமென்பர்.

**வியதிரேகம்:** அஃது (காரணம்) இல்லாதிருந்து அஃது (காரியம்) இல்லாதிருத்தல் அல்லது வியாவிருத்தியினை (பேதஞானத்தினை) வியதிரேகமென்பர்.

**விருத்தி:** சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு ஏதுவான அஞ்ஞான அந்தக்கரணங்களை பரிணாமத்தின் விருத்தியென்பர்.

**வியாபாரம்:** காரணத்தினின்றும் உண்டாய்க் காரியத்தினை உண்டுபன்னுவது எதுவோ அதனை வியாபாரமென்பர்.

**விதேகமுக்தி:** பிரபஞ்சத் தோற்றமின்றிய பிரம்ம சொரூபமான நிலையினை விதேக முக்தி என்பர்.

**விவேகஞானம்:** ஆத்ம அநாத்மாக்களின் பேத ஞானமே விவேகஞானமாகும்.

**விக்கினம்:** கிரந்தத்தின் சமாப்திக்கு பிரதிபந்தகமாயுள்ள பாபம்.

**விசம்வாதிபிரம்மம்:** சொப்பனப்பிரபஞ்சம் விசம்வாதி (தீபத்தின் பிரமையில்) மணியின் பிரமத்தைப் போல நிஷ்பலப் பிரவிருத்தியை உண்டு பண்ணும் பிரம்மாம்.

**விசிஷ்டம்:** விசேஷத்திற்கு ஆசிரயமான விசேஷணமுடைய வஸ்து எதுவோ அது விசிஷ்டம்.

**விசேஷணத்தின் லட்சணம்:** விசேஷி -யத்தினது காரியத்தின் சம்பந்தியாய் வர்த்தமான வியாவர்த்தகம் எதுவோ அது விசேஷணத்தின் லட்சணமாம்.

**விஞ்ஞானமய கோசம்:** ஞானேந்திரியங்கள் ஐந்தும் புத்தியும் சேர்ந்தது விஞ்ஞானமயகோசமாம்.

**விதி :** குருவைச் சரணடையும் தன்மையை

அறிவிக்கும் சாஸ்திர வசனம் விதியெனப்படும்.

**விபரிணாமம்:** திரிபு.

**விபரீத கரணி:** பூமியிற் தலையை வைத்து இரண்டு கைகளாலும் இடுப்பைப் பிடித்துக்கொண்டு பாதங்களை நிராதவராக வைத்துத் தலை கீழாயிருத்தல் விபரீத கரணியாம்.

**விபு:** தேச கால வஸ்துக்களாலாகிய அந்தமின்றி யதனை விபுஎன்றும் வியாபகம் என்றும் கூறுவர்.

**வியதிகாரம்:** பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் ஐக்கியத்தினை வியதிகாரம் என்று கூறுவர். பிரம்மம் நான் பிரம்மம் என்னும் வடிவினதாகிய ஓதப்புரோதபாவம் வியதிகாரம் எனப்படும்.

**வியபிசாரி:** எந்து வஸ்து எல்லா தேசத்திலும் எல்லாக் காலத்திலுமிராது யாதேனும் ஓர் தேசத்தில் யாதேனும் ஓர் காலத்திலுமிருக்கின்றதோ அது வியபிசாரியெனப்படும்.

**வியவகாரம்:** சொல்லுதலையும், தோற்றுதலையும் வியவகாரமென்பர்.

**வியஷ்டி சீவ உபாதி:** ஒவ்வொரு மரத்தைப் போலாவது ஒவ்வொரு நீர்த்துளியைப் போலாவது

தனது தேகத்தில் உள்ள கிருமி முதலியவற்றின் தேகத்தைப் போலாவது அனேக புத்திகளுக்கு விஷயமாதல் வியஷ்டி காரணதேகம். வியஷ்டி தூலதேகம் சீவர்களது உபாதியாம்.

**வியஷ்டிபிரபஞ்சம்:** ஸ்தூல தேகமும் அதன் ஸ்தூலத் தன்மை (பருமை) கிருசத்தன்மை (மெலிவு) கௌரத்தன்மை (தின்மை) கருமைவர்ணம் (ஜாதி) ஆசிரமம் (நிலை) முதலிய தர்மங்களும், தேகத்தின் ஜாக்ரம், பால்யம், முதலிய அவஸ்தைகளும் மற்றும் இந்திரியம், பிராணன், மனம், புத்தி, அஞ்ஞானம் அவற்றின் தர்மம், அவஸ்தை என்பனவும் வியஷ்டி பிரபஞ்சமாம்.

**விவகாரிகசத்தை:** எதற்குப் பிரம்ம ஞானமின்றி பாதமுண்டாகிறதில்லையோ பிரம்மஞானத்தினால் எதற்கு அதிஷ்டானத்தினும் வேறாகிய சத்தாஸ்பூர்த்தி தோற்றுகிறதில்லையோ அதற்கு விவகாரிக சத்தையென்றுபெயர்.
ஆகாயம் முதலிய பிரபஞ்சமும் மாயையும் இதற்கு உதாரணமாம்.

**விஜாதீய, ஸஜாதீய, ஸ்வகத பேதம்:** மரத்திற்கு கல், விஜாதீயம், மறுமரம், ஸஜாதீயம். இலை, பூ, காய் ஸ்வகதபேதம்.

**வியாவர்த்தியம் :** வியாவிருத்தி உடையதனை

வியாவர்த்தியம். வியாவிருத்தம். வியாவர்த்தநீயம் அவச்சேத்தியம் என்றும் கூறுவர்.

**விராட்டு:** பஞ்சீகிருத முதல் ஸ்தூலதேகபரியந்தமான பிரபஞ்சமெதுவோ அது முழுவதும் சேர்ந்து விராட்டு எனப்படும்.

**விராட்டுசரீரம்:** அபஞ்சீகிருத பூதங்களினின்றும் பிராணன் முதலிய கிரமமாகச் சமஷ்டியாகிய லிங்க சரீரம் உண்டாயிற்று. பின்னர் பஞ்சீகிருதமாகிய அந்தப் பூதங்களினின்றும் பிரம்மாண்டம் உண்டாயிற்று. அந்தப் பிரமாண்டம் விராட்டு சரீரம் எனப்படுகின்றது

**விருத்திவியாப்தி:** சூரியனுக்கு எதிர்முகமாக வைக்கப்பட்ட தீபம் மழுங்க, நேத்திரத்தினால் சூரியனது பிரகாசம் உண்டாவது போலப் பிரம்மாகார விருத்தியிலுள்ள சிதாபாசன் மழுங்க அவ்விருத்தி மாத்திரத்தால் பிரம்மத்தின் பிரகாசம் (ஆவரணபங்கம்) உண்டாவதே விருத்தி வியாப்தியாகும்.

**விலட்சணம்:** வேறாக, அந்நியமாக.

**விபாகம்:** பிரித்தல், பங்கு வைத்தல், வேதத்தைப் பிரித்து வைத்ததால் தான் வியாசர் அப்பெயரைப் பெற்றார்.

**விம்பம்:** பிம்பம், நிழல், சாயை.

**வியதிரேகி:** கீரிபுரண்டான் பூண்டின் ஆசிரயத்தால் சர்ப்பத்தோடு யுத்தம் செய்கின்ற கீரியைப் போல சற்சங்கத்தின் ஆசிரயத்தால் துர்க்குணங்களை விடுவதிலும், நற்குணங்களைக் கொள்ளுவதிலும் உண்டாகும் உற்சாகம் எதுவோ அது வியதிரேகியாம்

**வியாவிருத்தி:** வியாவிருத்தியினை அவச்சேதமென்பர். பிறவற்றினின்றும் வேறுபிரித்து அறிவித்தலை வியாவிருத்தி என்பர்.

**விலட்சணானந்தம்:** நிராவரணமாய்ப் பரிபூரணமாய் விருத்தியோடு கூடியதால் உண்டாவது எதுவோ அதுவிலட்சணானந்தம் எனப்படும்.

**விலட்சணானந்தத்தின் லட்சணம்:** நிராவரணமும் பரிபூரணமும் விருத்தியோடு கூடியதுமான ஆனந்த வடிவம் விலட்சணாநந்தத்தின் லட்சணமாம்.

**விவிதிஷா சந்நியாசம்:** ஞானத்திற்கு முன் தோஷ திருஷ்டியினால் உண்டாகும் தீவிரதர வைராக்கியத்தால் ஜிஞ்ஞாசுவினாற் செய்து கொள்ளப்படுவது விவிதிஷா சந்நியாசம்.

**விவேகலட்சணம்:** ஆத்மா நித்தியமும் கிரியை யில்லாததுமாயிருக்கின்றது என்று அறிந்து சாரமாகிய

ஆத்மாவையும் அசாரமாகிய அநாத்மாவையும் திடமாக விசாரித்தல் விவேகலட்சணமாகும்.

**விஜாதியப்பிரத்தியங்கள்:** அநாத்மாகார விருத்திகள்.

**விஷயரூபநிவிருத்தி:** வியாவகாரிக ரஜ்ஜீவிலிருக்கும் பிராதிபாஸிக சத்தையுடைய சர்ப்பம் எதுவோ அதற்குத் தனது அதிஷ்டானமாகிய ரஜ்ஜீவில் பாரமார்த்திக சத்தையாகவாவது மூன்று காலத்திலும் எந்த அத்தியந்தாபாவமிருக்கிறதோ அது அந்தச் சர்ப்பத்தின் விஷயரூபவிருத்தி என்று சொல்லப்படுகிறது.
நிச்சய ரூபமான விருத்தி ஞானமாகிய பாதமே நித்திய நிவிருத்தமாகிய சர்ப்பத்தின் நிவர்த்தி ரூபமாயிருக்கின்றது. இதுவே விஷயரூப நிவர்த்தியாகும்.

**விஷயரூபப்பிராப்தி:** முன்னமே சித்தித்துள்ள வஸ்துவின் ஞானமாகிய பிராப்தி எதுவோ அது விஷயரூபப்பிராப்தியாம்.

**விஷயிவடிவபாதம்:** மித்தியாத்தன்மை நிச்சயித்தினையேனும் முக்காலத்தன்மையின் நிச்சயித்தன்மையையேனும் விஷயிவடிவபாதமென்பர்.

**விட்சேபசக்தி :** பிரபஞ்சத்தையும், அதன்

ஞானத்தன்மையும் உண்டாக்கும் சாமர்த்தியமே விட்சேப சக்தியாம்.

**விட்சேப நிவர்த்தியின் பொருட்டு விடவேண்டிய வஸ்துக்கள்:** 1. ஸ்திரி 2. பொன், மடம் முதலியனவாகிய தனத்தை அடைதல் 3. விஷயங்களை (சப்த.ஸ்பரிச, ரூப, ரச, கந்தம்.விடுதல்.) 4. சபைகள் (ஜனக்கூட்டம்) 5. சன்மானம் இவற்றின் ஐந்து விஷயங்களில் ஸ்பரிசத்தையும், ரசத்தையும் பாதி விடுதல் வேண்டும். ஏனெனில் முற்றும்விட்டால் தேகத்தினால் யாத்திரை செய்யமுடியாது. ஆதலால் வஸ்திரமாகிய ஸ்பரிசத்தையும், பிட்சையாகிய ரசத்தினையும் சிறிதளவுமட்டும் கொள்ளுவது என்பதாம்.

**விபுவாய்:** பூரணமாய்.

**வீரியம்:** சரீரத்தின் வலிமை.

**வெறிது:** பற்றற்று.

**வெண்ணீர்:** பஷ்பம், வெண்மையான விபூதி, எரியூட்டப்பட்ட நீறு.

**வைராக்கியம்:** சாட்சாத்காரம் விடுதலின் இச்சையினை அல்லது இச்சையின்றிய தன்மையே வைராக்கியமாம்.

**வைராக்கியத்தின் அவதி:** எல்லாவற்றிலும் மேலான பிரம்ம லோகத்தையும் துரும்புபோல் துச்சமாகக் காணுதல் வைராக்கியத்தின் அவதியாம்.

**வைராக்கியத்தின் ஏது:** இந்த லோகத்தின் விஷயங்களிலும் பரலோகத்தின் விஷயங்களிலும் அநித்தியத் தன்மையின் புத்திவடிவ தோஷதிருஷ்டி (விவேகம்) வைராக்கியத்தின் ஏதுவாம்.

**வைராக்கியத்தின் சொரூபம்:** விடுதலில் இச்சை வைராக்கியத்தின் சொரூபமாம்.

**வைராக்கியத்தின் பலம்:** விட்டபின் அந்தப் போக்கிய விஷயங்களில் உண்டாகும் உபரதி வைராக்கியத்தின் பலமாம்.

**வைசுவாநரன் :** விராட்டுடனே கூடிச் சாக்கிராவவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுவரன் வைசுவாநரனென்றும் இதற்கு அதிருஷ்டான சைதந்நியம் பிரம்மாவென்றும் சொல்லப்படும்.

**வைராக்கியம் நாலு :** யதமானம், வியதிரேகம், ஏகேந்திரியம், வசீகாரம்.

**வைராக்கிய லட்சணம்:** இவ்வுலக முதல் பிரம்மலோக பரியந்தமாகிய சகல லோகங்களின் போகத்தையும், பிரமான யுக்திகளால் தன் சித்தத்தில்

அநித்தியமென்றறிந்து அவற்றை காக்கை மலம் போல சித்தத்தினின்றும் விடல்வேண்டும். இதுவே வைராக்கியத்தின் லட்சணமாம்.

**வைராஜபுருஷனது போகவிக்கிரகம்:** இது வைசுவானரன் என்னும் பெயரால் பிரசித்தமாம். விராட்டு சரீரம் எனப்படுவதும் இதுவே. பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் ஸ்ரீ நாராயணன் என்னும் பெயருள்ள அந்தர்யாமியின் லீலாவிக்கிரகமாம். இதன் நாபிக் கமலத்தில் வைராஜ புருஷனது போக விக்கிரகமாகிய . நான்கு முகமுள்ள பிரம்மா உண்டாயிருக்கிறார்.

**வேலை:** கடல், சமுத்திரம்.

## ஜ,ஷ

**ஜகல்லட்சணை:** கங்கையில் இடைச்சேரி என்னும் வாக்கியத்தில் கங்கை யென்னும் பதத்தின் வாச்சியார்த்தமாகிய தேவநதியின் பிரவாகத்தில் கங்கையென்னும் பதத்தின் வாச்சியார்த்தம் முழுவதையும் (தேவநதியின் பிரவாகத்தை) விட்டு அதன் சம்பந்தியாகிய கரை வடிவ வேறு "லட்சிய அர்த்தம் கொள்ளப்படுவதால் இது ஜகல்லட்சணையாம்

**ஜரை :** மூப்பு.

**ஜல்பம் :** ஒருவரையொருவர் ஜயிப்பதற்கு

விருப்பமுள்ளவர் தத்தம் கருத்தை வலியுறுத்துவதற்கு செய்யும் முயற்சிகள்.

**ஜலாகாசம்:** கடஜலத்தின் பிரத்தியட்சமாக மேக நட்சத்திரங்களுடனே காணப்படுகிற ஆகாசம் ஜலாகாசம்.

**ஜகத்மித்தை என்பதற்கு சப்தப் பிரமாணம்:** திருஷ்டமாகிய இந்த லோகத்தோடு சுருதமாகிய சுவர்க்காதி லோகங்களையும் அசத்தென்றறிந்து அதனைத் தியானிக்க லாகாது. அனுபவிக்கவும் கூடாது. அந்தத் திருஷ்ட சுருதங்களின் தியான முதலியவற்றில் சம்சாரத்தையும், தனது நாசத்தையும் எவன் அறிகின்றானோ அவன் ஆத்மஞானியாவான் என்ற ஸ்ரீ பாகவதத்தின் வாக்கியங்கள் சப்தப்பிரமாணங்களாம்.

**ஜகத்தின்மை மூன்று காலங்களிலுமில்லை :** கானற் சல முதலிய வஸ்து ஆதியிலும் (காலையிலும்) அந்தத்திலும் (சாயங்காலத்திலும்) இல்லை. அது மத்தியில் மத்தியான வடிவ வர்த்தமான காலத்தில் தோற்றினும் ஒரு போதுமில்லை. இது உலகத்தில் நிச்சயிக்கப்பட்டதாம். அவ்வண்ணமே இந்த ஜகத்தும் தனது உற்பத்திக்கு முன்னும் நிமித்தத்தின் நாசத்தினால் தான் நாசமாகிய பின்பும் அல்லது ஞானத்தினால் தனது உபாதானம் கெடுதலால் பாதத்தை அடைந்தபின்னுமில்லை

ஆதலால் இந்த ஜகத் தனது கானற்சலத்தைப்போல மூன்று காலத்திலுமில்லை.

**ஜலதோதி:** மிளகைத்தின்று சிறிது உஷ்ணமான உழக்குத் தண்ணீர் குடித்துப் பின் யுக்தியினால் அந்த ஜலத்தை வெளிப்படுத்துதல் ஜல தோதியாம்.

**ஜலத்தின் ஐந்து தத்துவங்கள்:** சுக்கிலம். சுரோணிதம். மூத்திரம், வியர்வை. உமிழ்நீர்.

**ஜகத்து:** நீரினால் பூரிதமான கடம் போல பஞ்சகோசங்களால் பூர்வபூர்வம் உத்தரோத்தரங்களால் பூரிதமாய், ஜீவனாலும் பூரிதமாய் உள்ள பஞ்சகோசங்களால் பஞ்சபூதங்கள் பூரிக்கப்பட்டு அந்தப் பஞ்சபூதங்களால் பூரிக்கப்பட்டு இருப்பது ஜகத்து.

**ஜாக்கிராவஸ்தை:** எந்த அவஸ்தையில் மனிதன் ஜாக்கிரமாகிய விழிப்பை அடைந்து வியவகாரம் செய்கின்றானோ அது ஜாக்கிரவஸ்தையாகும். தேவதைகளுக்கும் மனிதர்களுக்கும் ஜாக்கிரா அவஸ்தையுண்டு.

**ஜகத்மித்தை என்பதற்கு அனுபவப் பிரமானம்:** ஞானத்தின் பின் பிரபஞ்சத்தின் முக்காலத்தில் இன்மை இல்லாதது ஞானிகளுக்குப் பிரத்தியட்சமாவதால் அது ஜகத்மித்தை என்பதற்கு அனுபவப்பிரமானமாம்.

**ஜகத்மித்தை என்பதற்கு ஐதீகப் பிரமாணம்:** பரம்பரையாக உலகத்தில் ஜகத்து மித்தையென்று சொல்லிக்கொள்ளுதலாகும்.

**ஜாக்கிராவஸ்தையின் சாமக்கிரியை ஆறு :** 1. நேத்திரம்-ஸ்தானம், 2. கிரியை-சத்தி, 3. வைகரி-வாக்கு, 4. ஸ்தூலம்-போகம், 5. குணம்-சத்துவம், 6. விசுவன்-அபிமானி.

**ஜாலாந்திரபந்தம்:** பத்மாசனம் சேர்த்து தாடையை மார்பிற் பொருத்தி, நாவைத்திருப்பி மேல்வாய்த் துவாரத்தோடு பொருந்தச் செய்து வாயைப் பந்தித்தலால் சுவாசத்தின் நிரோதம் உண்டாகின்றது. இதுவே ஜாலாந்திர பந்தமாம்.

**ஜிஹ்வாபந்தம்:** நாவைத்திருப்பி மேல்வாய்த் துவாரத்தோடு பொருத்துதல் ஜிஹ்வாபந்தமாகும்.

**ஜிஞ்ஞாசு:** பகவானது உண்மையை அறியும் இச்சை உடையவன். சில நேரங்களிலும் ஆபத்துக்காலத்திலும், தனம் முதலியவற்றிற்காகவும் இறைவனை நினைப்பதுடன் ஞானத்திலும் விருப்பமுடையவன்

**ஜீவசாட்சி:** துவம்பதத்தின் லட்சியம் கூடஸ்தன் அதுவே ஜீவசாட்சி.

**ஜீவஉபாதி:** வியஷ்டி காரண தேகமும், வியஷ்டி

சூட்சும தேகமும். வியஷ்டி ஸ்தூல தேகமும் ஜீவனது உபாதியாம்.

**ஜீவனது காரியம்:** ஜாக்கிர முதல் மோட்ச பரியந்தமான சம்சாரம் எதுவோ அது ஜீவனது காரியமாம்.

**ஜீவனதுதர்மம்:** அற்பஞ்ஞத்துவ முதலியன அதன் தர்மங்களாம்.

**ஜீவன்:** அந்தக்கரண விசிஷ்டசேதனம் ஜீவன். சர்வ சாமக்கிரியோடு கூடிய புத்தி அல்லது அவத்தை அதன் அதிஷ்டானமான சாட்சியாகிய ஆத்மாவென்றும் யாவும் சேர்ந்து ஜீவன் எனப்படும்.

**ஜீவனது காலம்:** ஜாக்கிரம். சொப்பனம். சுழுத்தி மூன்றும் ஜீவனது காலமாம்.

**ஜீவனது தேசம்:** நேத்திரம். கண்டம். இருதயம் என்னும் இவைகள் தேசங்களாகும்.

**ஜீவனது அபிமானிகள்:** விசுவன். தைஜசன். பிராஞ்ஞன் மூவரும் ஜாக்கிர. சொப்பன. சுழுத்தி அவஸ்தைகளின் அபிமானிகளாம்.

**ஜீவனது ஸ்தானம்:** ஜாக்கிரத்தில் அது சரீரம் முழுவதிலும் வியாபித்திருக்கின்றது. அங்ஙனமாயினும்

அதன் விசேஷ பாகம் நேத்திரத்தில் இருத்தலால் நேத்திரம் ஸ்தான மெனப்படுகின்றது.

**ஜீவனது தேகம்:** ஸ்தூல, சூட்சும, காரண தேகங்கள்.

**ஜீவனது நிஜரூபம்:** எல்லாச் சாமக்கிரியையோடு கூடிய புத்தியினையாவது அவத்தினையாவது மித்தை என்னும் உணர்ச்சியினால் விட்டு எஞ்சி நிற்கும் புத்தி உபகித அல்லது அவத்தை உபகித சேதன வடிவ சாட்சியாகிய ஆத்மா எதுவோ அது ஜீவன் என்னும் சொல்லிற்கு லட்சியமாம். இதுவே ஜீவனது நிஜரூபமாம்.

**ஜீவனதுபோகம்:** ஸ்தூல சரீரமே ஜீவனது போகம்.

**ஜீவனது வஸ்துக்கள்:** ஸ்தூல, சூட்சும, காரணமென்றும் மூன்றும் வஸ்துக்கள்.

**ஜீவன்முக்தி:** தேகாதிப்பிரபஞ்சம் தோற்றிக் கொண்டிருக்க பிரம்ம சொரூபமாக நினைத்தலே ஜீவன்முக்தி.

**ஜீவன் முக்தியின் விலட்சணானந்தம்:** நிராவரண பரிபூரண விருத்தியோடு கூடிய ஆநந்தம் ஜீவன் முக்தியின் விலட்சணாநந்தம் எனப்படும்.

**ஷட்சம்பத்தி:** ஆறு சாதனங்களின் அடையே ஷட்சம்பத்தி எனப்படும்.

**ஷட்சம்பத்திகள்:** சமம். தமம். விடல். சமாதானம். சகித்தல், சிரத்தை.

**ஷிப்தம்:** ராகத்துவேஷாதிகளுடன் கலந்திருக்கும் சித்தத்திற்கு "ஷிப்தம்" என்று பெயர்.

**ஷேத்ரம், ஷேத்ரஞ்ஞன்:** இந்தச் சரீரம் ஷேத்ரம். சரீரரிஷேத்ரஞ்ஞன். இதனை அறிவது எதுவோ அது ஷேத்ரஞ்ஞன்.

**ஷேபம்:** லோகவாசனை. சாஸ்திரவாசனை தேகவாசனையென்னும் மூன்று இராட்சச வாசனைகளாலும் உற்பூதமான ராகத்துவேஷ முதலியவற்றோடு கூடியதன்மை.

## ஸ

**ஸ்பரிசம்:** சீதம். உஷ்ணம். மிருது. கடினம்.

**ஸ்தூலத்தன்மை:** பருமை.

**ஸ்தாலி:** பானை.

**ஸ்தாலிபுலாகம்:** ஓர் அரிசி வேதலால் எல்லா அரிசிகளும் வேதல் என்னும் நியாயம்.

**ஸ்பூர்த்தி:** விளக்கம்.

**ஸ்மிருதி:** உற்பூத (எழும்பிய) சம்ஸ்கார மாத்திரத்தால் தோன்றும் ஞானத்தினை ஸ்மிருதி என்பர்.

## கர்மவிதி

எவனுக்குத்திடஞானம் உண்டாகின்றதோ அவனுக்குச் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. எவனுக்குத் தீவிர ஞானவிருப்பம் உண்டாயிருக்கின்றதோ அல்லது மந்த ஞானமுண்டாயிருக்கின்றதோ அவனுக்குச்சிரவணாதிகள் செய்யவேண்டியனவாம். கர்ம உபாசனைகள் செய்ய வேண்டியதில்லை.

எந்த நற்புத்தி உடையவனுக்கு மந்த ஞானவிருப்பத்தால் வேதாந்த சிரவணத்தில் பிரவிருத்தி உண்டாகின்றதோ அவனுக்குச் சிரவணம் செய்ய வேண்டியதாம்.

எவனுக்கு மந்த ஞானவிருப்பமிருந்தும் வேதாந்த சிரவணத்தில் பிரவிருத்தி உண்டாகவில்லையோ. அவனுக்கு நிஷ்காம கர்மமும் உபாசனையும் செய்ய வேண்டியனவாம்.

எவனுக்கு வைராக்கிய லேசமின்மையால் மந்த ஞானவிருப்பமில்லையோ, அவனுக்கு ஸகாம கர்மஉபாசனைகள் செய்யத்தக்கனவாம்.

## சீவேசுவர விளக்கம்

துவம்பதத்தின் வாச்சியம் ஜீவன்
துவம்பதத்தின் லட்சியம் கூடஸ்தன்
அதுவே சீவசாட்சி
தத்பதத்தின் வாச்சியம் ஈசுவரன்
தத்பதத்தின் லட்சியம் சுத்தப்பிரம்மம்
அதுவே ஈசுவரசாட்சி.

## ஞானியின் சொத்து

ஞானியின் திரவியம், வீடு அல்லது மடம், புஸ்தகங்கள் என்பனவற்றிற்குப்புத்திரனும், சிஷ்யனும் பங்குடையவராவார். அந்த ஞானியின் ஞானத்திற்கு ஜிஞ்ஞாசுக்கள் பங்குடையவராவர். அந்த ஞானியின் சுபகர்மத்திற்கு சகாம பக்தர் பங்குடையவராவர். அவருடைய அசுபகர்மத்திற்கு நிந்தகர் பங்குடையவர். அவரது நல்லொழுக்கத்திற்கு புண்ணியவான்களாகிய உதாசீனர் பங்குடையவராவர். அவருடைய பாவத்தை நிவர்த்திக்கும் சுத்த திருஷ்டியின் வீழ்ச்சிக்குப் பாபமுடைய உதாசீனர் (ஞானியினிடத்து ராகத் துவேஷமின்றிய பாபிகள்) பங்குடையவர். அதாவது அவனது நல்லொழுக்கத்தினால் புண்ணியமுடைய உதாசீனர் கண்டு நல்லொழுக்கத்தைச் செய்கிறார்கள். பாபமுடைய உதாசீனர்கள் பாபமின்றியவராகிறார்கள்.

# பிராரத்தம்

பிராத்தகர்மம் ஐந்து வகையாகும்.

**1. உத்தமம்:** எப்போதும் நிவிருத்திக்கு ஏதுவாகிய பிராரத்தம் எதுவோ அது உத்தமமாம். அது சுகதேவர், வாமதேவர், சனகாதியர் முதலியோரிடத்திருந்த பிராரத்தமாகும். இது பிறப்பு முதல் சரீரம் இருந்தவரையில் நிவிருத்திக்கு ஏதுவாயிருந்தமையால் உத்தமமாம்.

**2. மத்திமம்:** முதலில் பிரவிருத்திக்கு ஏதுவாயும், பின் நிவர்த்திக்கு ஏதுவாயுமுள்ள பிராரத்தம் மத்திமமாகும். இது யாஞ்ஞியவல்கியர் முதலியோரிடத்திருந்த பிராரத்தமாகும். இது கிரகாசிரமத்தை அங்கீகரித்தலாகிய பிரவிருத்திக்கு ஏதுவாயிருந்து பின் தீவிரவைராக்கியத்தோடு வித்வஸ் சந்நியாசத்தை அங்கீகரித்தலாகிய நிவர்த்திக்கு ஏதுவாயுள்ளது.

**3. கனிஷ்டம்:** எப்போதும் பிரவிருத்திக்கு ஏதுவாயுள்ள பிராரத்தம் கனிஷ்டமாம் (அதமம்) இது ஜனகர் முதலியோர்க்கு இருந்த பிராரத்தமாம். இது எப்போதும் ராஜ்ஜியபோகத்தை அங்கீகரித்தலாகும். பிரவிருத்திக்கு ஏதுவாயிருந்தமையால் கனிஷ்டமாம்.

**4. அதமதரம்:** முதலில் நிவிருத்திக்கு ஏதுவாயும்

பின் பிரவிருத்திக்கு ஏதுவாயும் உள்ள பிராரத்தம் அதமதரமாகும். இது சிகித்துவஜன், அலர்க்கண், பிரியவிருதன் முதலியயோருக்கிருந்த பிராரத்தமாகும். இது முதலில் வைராக்கிய பூர்வகமாய் நிவிருத்திக்கு ஏதுவாயிருந்து, பின்னர் போக இச்சையை முன்னிட்ட ராஜ்ஜியாதிகளை அங்கீகரித்தலாகிய பிரவிருத்திக்கு ஏதுவாயிருந்தமையால் அதமதரமாகும்.

**5. அதமதமம்:** இஷ்டப்படி ஒழுகுதல்,பேசுதல், புசித்தல், என்னும் பிரமாதத்திற்கு ஏதுவாகிய பிராரத்தம் அதமதமம். இது கலியின் பிரமாதத்தால் தற்காலத்தவர் அநாதிகாரிகளாய் மேல் வேதாந்த சிரவண முதலிய சுகசாதனங்களிற் பிரவிருத்திக்கும் கள்ள ஞானி முதலியோரது பிராரத்தமாம். அதமங்கள் எல்லாவற்றினும் அதமமானதை அதமதமமென்பர்.

## ஆத்மா சுயம் பிரகாசம்

ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்று அவஸ்தைகளும், அவ்வவஸ்தைகளையுடைய எல்லா நாட்களும், அந்த நாட்களையுடைய சித்திரை முதலிய மாதங்களும் அம்மாதங்களையுடைய விபவாதி வருஷங்களும், அவ்வருஷங்களையுடைய சத்தியாதி (கிரேதாதி) யுகங்களும், அந்த யுகங்களையுடைய சுவாயம்புவாதிமனுவந்திரங்களும் அந்த மனுவந்திரங்களையுடைய பிரம்மாவின் நாளும், அந்தப் பிரம்மாவின் நாட்களுடைய மாத முதலியவற்றினோடு

கூடிய பரார்த்த (பிரம்மாவின் 50 வருடம்) அங்ஙனமே அவ்விரண்டு பரார்த்தங்களையுடைய வாராக முதலிய கற்பங்களும். அக்கற்பங்களையுடைய இறப்பு, எதிர்நிகழ்வு என்னும் காலங்களும், அக்காலத்தில் ஆகாய முதலிய ஆசிரயத்தோடு கூடிய ஒன்றுக்கொன்று விலட்சணமான சப்த முதலிய எல்லா விஷயங்களையும், அந்தந்த விலட்சண காலங்களையும் எதனால் ஆத்மா பிரகாசிப்பதாயிருக்கின்றதோ அதனால் ஆத்மாசுயம்பிரகாசமாகும்.

## சந்நியாசம்

சந்நியாசம் நான்கு வகைப்படும்.

**I குடீசகம்:** யாத்திரைக்குச் சக்தியின்மையால் எங்கேனும் குடிசை ஏற்படுத்தி இருத்தல் குடீசகமாம்.

**2. பகூதகம்:** சந்நியாச ஆஸ்ரமத்தின் கர்மத்தைச் செய்து கொண்டு யாத்திரை செய்தல் பகூதகமாகும்.

**3. ஹம்சம்:** அக்கினியாற் சாதிக்கப்படும் கர்மத்தை விட்டு பிரணவ, ஜப முதலியவற்றை அனுஷ்டிப்பவன் ஹம்சனாவான்.

**4. பரமஹம்சம்:** இது வித்வஸ், விவிதிஷ் என்று இருவகைப்படும். ஞானத்திற்கு முன் தோஷ திருஷ்டியினால் உண்டாகும் தீவிரதர வைராக்கியத்தால்

ஜிஞ்ஞாசுவினாற் செய்து கொள்ளப்படுவது விவிதிஷா சந்நியாசமாகும்.

ஞானத்திற்குப் பின் தோஷதிருஷ்டி. மித்தியாத்துவ திருஷ்டிகளாகத் தோன்றும் தீவிரதரவைராக்கியத்தினால் வித்வானால் செய்து கொள்ளப்படுவது வித்வஸ் சந்நியாசமாகும். மேலும் வித்வஸ், விவிதிஷ், மார்க்கட, ஆதுர எனப்படும் சந்நியாசங்களும் கூறப்பட்டுள்ளன.

**வித்வஸ் :** சாஸ்திர ஞானத்தினால் வருவது. (உ.ம்.) விவேகானந்தர்.

**விவிதிஸ் :** பிறப்பினால், பூர்வஜன்ம வாசனையினால் இந்தப் பிறவியில் சிறுவயது முதற்கொண்டே வருவது (உ.ம்.) ஆதிசங்கரர்.

**மார்க்கட :** சிறிதுகால சந்நியாசம். கோவிலுக்கு நேர்த்திக்கடனுக்காக செல்லுதல், குறிப்பிட்ட காலம் வரை துறவு மேற்கொண்டு பிறகு இல்லறத்திற்கு திரும்புதல், மனைவி, மக்கள் மீது கோபம் கொண்டு, துறவு பூண்டு, வருத்தம் தீர்ந்தவுடன் இல்லறம் திரும்புதல்.

**ஆதுர :** இறக்கின்ற தருவாயில் உபதேச வாக்கியத்தால் கொண்ட துறவு. இறந்தால் அந்த நினைவுகளுடனேயே இறத்தல், பிழைத்துக் கொண்டால் அந்த நினைவை மறக்காமலிருத்தல்.

# சந்நியாச தர்மம்

சந்நியாச தர்மத்தில் எவற்றைவிட்டு, எவற்றைக் கைக்கொள்ளவேண்டும் என்ற நியதி.

**விடவேண்டிய ஐந்துகள் :** 1. பெண் 2. பொருள் 3. விஷயமாகிய சப்த, பரிச, ரூப, ரச, கந்தம் 4. ஜனக்கூட்டம். 5. சன்மானம்.

(இதில் ஸ்பரிசத்தையும், ரசத்தையும் பாதிவிடுதல் வேண்டும். இவற்றை முற்றிலும் விட்டால் தேகயாத்திரை செய்வது கடினமாகிவிடும். ஆதலால் வஸ்திரமாகிய ஸ்பரிசத்தினையும், பிட்சையாகிய ரசத்தினையும் விடலாகாது.)

**கைக்கொள்ளவேண்டிய ஐந்துகள்:**

1. வஸ்திரம், 2. கயிற்றோடு கூடிய கமண்டலம், 3. பிட்சை, 4. ஏகாந்தம், 5. சாஸ்திரம்.

# பூமிகளும் - அவஸ்தைகளும்

| | |
|---|---|
| சுபேச்சை<br>விசாரணை<br>தனுமானசி | } சாக்கிரம் |
| சத்துவா பத்தி | - சொப்பனம் |
| அசம் சத்தி | - சுழுத்தி |
| பதார்த்த பாவனை | - துரியம் |
| துரியம் | - துரியாதீதம் |

# கர்மம்

**1. புண்ணியம், 2. பாவம், 3. மிசிரம்** என மூன்று வகைப்படும்.

## 1. புண்ணியத்தில்:

**உத்கிருஷ்டம்:** இரண்யகர்ப்ப சரீரப் பிராப்தி

**மத்திமம்:** தேவேந்திராதி சரீரப் பிராப்தி

**சாமான்யம்:** யட்ச, ராட்சச, கின்னர, கிம்புருட, பைசாச சரீரப் பிராப்தி.

## 2. பாவத்தில்:

**உத்கிருஷ்டம்:** தேள், பாம்பு, கொசு, மூட்டைப்பூச்சி, புலி, கரடிசரீரப் பிராப்தி

**மத்திமம்:** புளி, மா, பலா, தென்னை, எருமை, பருந்து, சரீரப்பிராப்தி

**சாமான்யம்:** பசு, குதிரை,. யானை, அரசு, துளசிசரீரப்பிராப்தி.

## 3. மிசிரத்தில்:

**உத்கிருஷ்டம்:** நிஷ்காமிய கர்மத்தால் சித்த சுத்தியும், அதனால் சாதன சதுட்டமும், அதனால் சற்குரு லாபமும், அதனால் சிரவணாதிகளும் அதனால் அபரோட்ச ஞானமும் அதனால் ஜீவன் முக்தி சுகத்தை அடையத்தக்க சரீரப் பிராப்தியும் வரும்.

**மத்திமம்:** பிரம்மச்சரியம்,கிரகஸ்தம், வானப்பிரத்தம், சந்நியாசம், என்ற நான்கு வகையான ஆச்ரமங்களுக்கும் உரியதாகிய காமிய கரும போக்கியமான சரீரப் பிராப்தி வரும்.

**சாமான்யம்:** சண்டாள, பாண்டு, குஷ்ட பெரு வியாதிகளை உடைய சரீரப் பிராப்தி.

## பிரளயம்

பிரம்மதேவனுடைய மத்தியானத்தில் பதினான்கு அவாந்தரப்பிரளயம் வரும். இவைகளுக்கு நைமித்தியப்பிரளயமென்றும், மனுவாந்தரப் பிரளயமென்றும் சொல்லப்படும். யுகப்பிரளயமும் இதற்குள் உண்டு.

## நான்கு பதங்கள்

**சாலோகம்:** இறைவனது உலகத்தில் வசித்தல்.

**சாமீப்யம்:** இறைவனது அண்மையில் வசித்தல்.

**சாரூப்யம்:** இறைவனை ஒத்த உருவம்.

**சாயுச்சியம்:** இறைவனாகவே ஆகுதல்.

# தாபத்திரயம்

**1. ஆதி ஆத்மீகம்:** பலவிதமான நோய்கள். மிருகங்கள், பேய்கள், திருடர்கள் மூலம் உண்டாகும் துன்பங்கள்.

**2. ஆதிபௌதிகம்:** ஜலம், வெய்யில். மழை. இடி, காற்று, மின்னல், பனி, கோவில் கோபுரங்கள். பிரகாரங்கள், மண்டபங்கள், முதலியன.

3. **ஆதிதெய்வீகம்:** கர்ப்பம் தரித்தல். வளர்தல். நரை, திரை, அஞ்ஞானம். துர்மரணம். ஜனனம் முதலியன.

# ஞானியின் இலட்சணங்கள்

| | |
|---|---|
| மைத்திரி | - நட்பு |
| கருணை | - அருள் |
| முதிதை | - உவகை |
| உபேட்சை | - நொதுமல் (விருப்பு வெறுப்பற்ற தன்மை) |

# பஞ்ச சூதகங்கள்

1. சநநசௌசம். 2. மரணசௌசம். 3. சண்டாளர் நீரில் தோய்தல், 4. சுராபானம் பண்ணல். 5. பொய் கூறல்.

## வேள்விகள்

வேள்விகள் பொதுவாக மொத்தம் 21

**சோம எக்கியம்:** 1. அக்கினிஹோமம், 2. அதியக்கிரிஹோமம், 3. உக்தியம், 4. ஷோடசி, 5. வாஜபேயம், 6. அதிராத்திரம், 7. அப்தோர் யாமம்

**ஹவிர் எக்கியம்:** 1. அக்கினியாதேயம், 2. அக்கினிஹோத்திரம், 3. தர்சபூர்ணமாசம், 4. சாதுர்மாஸ்யம், 5. நிருடபசுபந்தம், 6. ஆக்கிரயணம், 7. ஸௌத்திராமணி.

**பாகஎக்கியம்:** 1. அஷ்டகை, 2. ஆபார்வனம், 3. சிரார்த்தம், 4. சிராவணி, 5. ஆக்கிரகாயணி, 6. சைத்திரி, 7. ஆச்வயுஜி.

## நானாவிதமான பிறப்புக்கள்

ஊர்வன 11, மானுடம் 9, பறவைகள், நான்குகால் சீவன்கள் 100, தேவர்கள் 14, தாவர வகைகள் 20.

## சச்சிதானந்த விளக்கம்

ஆத்மாவே காலத்திரயத்திலும் இருக்கிறபடியால் சத்தென்றும், அதுவே சொப்பிரகாசமாக

இருக்கிறபடியால் சித்தென்றும் இரண்டாம் வஸ்து இல்லாமற் போகிறபடியால் ஆனந்தமென்றும் சொல்லப்படும்.

## விதேக கைவல்யம் பெறும் வழிமுறை

(வேதாந்த சூடாமணி பாடல்கள் 178,179,180)

1. நித்தியகரும, அனுஷ்டானங்கள் செய்து வர புண்ணியம் வரும்
2. புண்ணியத்தால் பாவம் ஒழிகிறது.
3. பாவம் ஒழிந்ததால் மனம் சித்த சுத்தி அடைகிறது.
4. சித்த சுத்தியினால் குடும்ப வாழ்க்கை பொய்யானது என்று அறிவதாகிறது.
5. குடும்ப வாழ்க்கை பொய்யாவதால் மெய்யான துறவு உண்டாகிறது.
6. துறவு உண்டாவதால் முத்தியில் விருப்பு ஏற்படுகிறது.
7. அதனால் புறக்கரும ஒடுக்கம் ஏற்படுகிறது.
8. புறக்கரும ஒடுக்கத்தால் யோகநிலை முயற்சி கூடுகிறது.
9. யோகநிலையால் துரியத்தில் நிலைத்தல் உண்டாகிறது.
10. துரியம் நிலைபெறுவதால் மகாவாக்கியத்தில் ஆராய்ச்சி ஏற்படுகிறது.
11. அதனால் அத்துவித ஞானம் உண்டாகிறது.
12. அதனால் அவித்தை நாசமாகிறது.
13. அதனால் துவிதத்தில் மயக்கம் ஒழிந்துவிடும்.
14. அதனால் சுக, துக்க நினைவுகள் ஒழிந்துவிடும்.

15. அதனால் விருப்பு, வெறுப்பு, அறுந்து விடும்.
16. அதனால் எல்லா வியாதிகளும் விலக்காகி விடும்.
17. அதனால் வினைகள் இரண்டும் அகன்று விடும்
18. அதனால் ஏகபாவ விச்சிராந்தி ஏற்படும்.
19. அதனால் பாசமெல்லாம் ஒழிந்து விடும்
20. இதனால் பராபரமாய், முடிவாய், பெயர், சாதி, குறிபெறாது ஒன்றாகி வாக்கு மனம் இறந்து நித்தியானந்த மயமாகி விதேக கைவல்லியம் வந்தெய்தும்.

## ஞானிக்கு ஏற்படும் பிரதிபந்தங்கள்

**பூதப்பிரதிபந்தம்:** துறவறம் மேற்கொண்டு சற்குருவையடைந்து சற்பழக்கங்கள் கடைப் பிடிக்கப்படினும் முன்பு அனுபவித்த நாரியின் இன்பம் மீண்டும் நினைவிற்கு வந்து வாதனையைத் தருவது பூதப்பிரதிபந்தமாகும்.

**வர்த்தமானப்பிரதிபந்தம்:** அசத்தியத்தில் அபிமானம் வைத்தல், குதர்க்க வாதிகளோடு சேர்தல், சிற்றினஞ்சேர்தல், சபலபுத்தியுடையவர்களுடன் பழகுதல் முதலியன வர்த்தமானப் பிரதிபந்தமாகும்.

**ஆகாமியப்பிரதிபந்தம்:** பிரமத்தை அடையும் முயற்சி இருந்த போதிலும் உலக இச்சையை விடாது. இன்னும் சில ஜனனம் எடுத்தாலாவது பிரமத்தை

அடைந்து கொள்ளலாம் என்று நினைப்பது தெளிந்த மறைகள் கூறும் அறிவைப் பெற்றாலும் ஆத்மாவை அறியாமல் இருப்பது ஆகாமியப் பிரதிபந்தம்.

## நிதித்தியாசனம்

(ஐந்து கூறுகளை (யோகங்களை) உடையது.)

**1. மந்திரயோகம்:** பிரணவத்தியானம் அநுதினமும் செய்து அதனால் உள்ளம் அடங்குதல் மந்திரயோகமாகும்.

**2. பரிசயோகம்:** மூலாதாரத்தில் ஆரம்பித்து சகஸ்ர்ாரம் வரை செய்கின்ற குண்டலினித்தியானம் பரிசயோகம்

**3. பாவயோகம்:** தன்னுடைய அங்கங்கள் அனைத்தும் விராட்டினுடையவேயாகும் என்றறிந்து தன் அவயங்களை ஒவ்வொன்றாக மறந்து பிரமத்தில் மன மடங்குதல் பாவயோகமாகும்.

**4. அபாவயோகம்:** அளவிற்கரியதான பிரமத்தில் சிந்தையடங்குதல் அபாவயோகம்.

**5. மகாயோகம்:** ஆக்கல், அழித்தல், தெரிந்தது, தெரியாதது, என்ற நிலையிலிருந்து எதையும் உணராது தானே பிரம்மம் என்ற நிலையிலிருப்பது மகாயோகம்.

# ஏழவஸ்தை

அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்சம், அபரோட்சம், துக்க நிவர்த்தி, தடையற்ற ஆனந்தம்.

1. சிதாபாசன் அநாதிசம்சாரத்தில் அழுந்தித் தன்னுடைய சுபாவத்தை விசாரியாமல் உபேட்சித்திருக்கிறதே **அஞ்ஞானம்.**

2. அமார்க்கத்திலே விசாரித்து ஆத்மாவுண்டோ, இல்லையோ அப்படி ஆத்மா ஒன்று இருந்தால் அதன் தோற்றம் தெரிந்திருக்காதோ, அப்படி ஒன்று காணாததால் இல்லையென்கிறதே **ஆவரணம்,** மறைப்பு என்றும் பொருள் கொள்ளப்படும்.

3. சரீரத் திரயத்தையும் சிதாபாசனையும் தானாகக் கண்டதே **விட்சேபம்,** தோற்றம் என்றும் பொருள் கொள்ளப்படும்.

4. ஆப்தன், (குரு) உபதேசத்தாற் பிரம்மம் உண்டென்று அறிகிறதே **பரோட்ச ஞானம்.**

5. வேதாந்த விசாரத்தினால் அந்தப் பிரம்மம் நாமென்றறிகிறதே **அபரோட்ச ஞானம்.**

நான் கர்த்தா போக்தா அல்லவென்று போனதே **துக்க நிவர்த்தி.**

7. செய்யத்தக்கதெல்லாம் செய்து முடிந்தது. அடைய வேண்டியதெல்லாம் அடைந்து முடிந்தது என்கிற சந்தோசமே **தடையற்ற ஆனந்தம்.**

இவற்றில் முதல் மூன்றும் பந்தத்தைக் கொடுக்கும். பின் நான்கும் மோட்சத்தைக் கொடுக்கும்.

## தேவ அயன மார்க்கம்

தேவ அயன மார்க்கம் ஞானரூபப் பிரகாசத்தின் அதிகத்தன்மையுடைய அக்கினியாதி தேவதைகளோடு கூடினதாயும், பிரகாச ரூப சகுனப் பிரம வித்தையினாலடையப்படுவதாயும், பிரகாசமயமான உலகங்கள் அனேகங்களை உடையதாயும், சொப்பிரகாசமான பிரமத்தின் பிராப்திக்கு ஏதுவாவதால் உத்கிருஷ்டமாயும், ஞான ரூபப்பிரகாசமாயும் இருத்தலால் அது சுக்கிலமென்றும் சொல்லப்படுகிறது

## பித்ரு அயன மார்க்கம்

இஷ்டம், பூர்த்தம், தத்தம், என்னும் மூவகைக் கர்மங்களைச் செய்கின்றவர் காமிய (கர்மிய) புருஷராவார். இவர் சந்திரலோகத்தில் (சொர்க்கலோகத்தில்) தான் செய்த கர்மங்களின் சுக ரூபப் பயனை அடைந்து, அக்கர்மங்கள் நசித்த பின்னர் மீண்டும் மானுட லோகத்தில் பிறப்பர். இந்தப் பித்ரு

அயன மார்க்கம் ஆவிருத்திக்கு (ஜனனத்திற்கு) ஏதுவாகும்.

**இஷ்டம்:** அக்கினி ஹோத்திராதி கர்மங்கள்.

**பூர்த்தம்:** வாவி, கூபம், தடாகம், தர்மசாலை முதலிய கர்மங்கள்.

**தத்தம்:** சத்துவ குணத்துடன் பசு, சுவர்ண முதலிய பொருட்களைத் தானம் செய்தல். பிதிருயான மார்க்கம் ஞானரூபப்பிரகாசமின்மையால் தமோமயமாயும், அப்பிரகாச ரூபமான தூமம், ராத்திரி முதலியவைகளோடு கூடினதாயும், மீண்டும் சம்சாரத்திற் கேதுவாவதால் நிகிருஷ்டமாயும் இருத்தலால் இது கிருஷ்ணபட்சமென்றும் சொல்லப்படுகிறது.

## அந்தக்கரணம்

ஆகாசம் முதலான பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்தது அந்தக்கரணம். இந்த அந்தக்கரணத்தில் ஆகாசத்தின் அம்சம் கூடினதற்கு அடையாளம். இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போல சகலமான கேள்விக்கும் இடம் கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு **உள்ளம்** என்று பெயர்.

இந்த அந்தக் கரணத்தில் வாயுவின் அம்சம் கூடினதற்கு அடையாளம் இந்த அந்தக்கரணமும்

வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு **மனம்** என்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் அக்கினியின் அம்சம் கூடினதற்கு அடையாளம் இந்த அந்தக்கரணமும் அக்கினியைப் போல ஈது இன்னதென்று விளக்குகின்றது. இப்படி விளக்குகின்ற விருத்திக்கு **புத்தி** என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில் அப்புவின் அம்சம் கூடினதற்கு அடையாளம் இந்த அந்தக்கரணமும் அப்புவைப்போல விஷயங்களைப் பற்றி இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்கு **சித்தம்** என்று பெயர்.

இந்த அந்தக்கரணத்தில் பிருதிவியின் அம்சம் கூடினதற்கு அடையாளம் இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப் போல கடினமாக நின்று நான் என்று அபிமானிக்கிறது. இந்த அபிமான விருத்திக்கு **அகங்காரம்** என்று பெயர்.

## பேதங்கள் ஐந்து

1. ஜீவ ஈசுவர பேதம்
2. ஜீவர்களின் பரஸ்பர பேதம்
3. ஜீவ ஜடங்களின் பேதம்
4. ஈசுவர ஜடங்களின் பேதம்
5. ஜடங்களின் ஒன்றிற்கொன்றுள்ள பேதம்

# பிரமானங்கள் ஆறு

1. ஆகமப் பிரமானம்
2. அனுமானப் பிரமானம்
3. பிரத்தியட்சப் பிரமானம்
4. சப்தப் பிரமானம்
5. அர்த்தாபத்திப் பிரமானம்
6. அனுபலப்திப் பிரமானம்

# வாக்கியங்கள் இரண்டு

## 1. அவாந்தரவாக்கியம்

தற்பதார்த்த துவம்பதார்த்தங்களின் சொரூப போதக வாக்கியம் அவாந்தரவாக்கியமாம்.

## 2. மகாவாக்கியம்

சத்தியம், ஞானாநந்தம், பிரம்மம் என்பனவும் தற்பதார்த்த துவம்பதார்த்தங்களின் அபேத போதகமான தத்துவமஸி ஆகியவையும் மகாவாக்கியமாம்.

# விருத்திகள் இரண்டு

## 1. சக்தி விருத்தி

பதார்த்த போத ஏதுவான சாமார்த்தியம்சத்தி விருத்தி.

## 2. இலட்சணாவிருத்தி

யாதொரு அர்த்தத்தில் பதத்தின் சக்தி உண்டோ அவ்வர்த்தம் பதத்திற்கு சக்கியமெனப்படும். சக்கிய சம்பந்தமே இலட்சணையாகும்.

## குணங்கள் மூன்று

### சத்துவகுணம்

இது மேலோங்கும் போது தெய்வ சம்பத்து உண்டாகும்.

### ரஜோகுணம்

இது மேலோங்கும் போது உலகவாசனை, தேக வாசனை, சாஸ்திரவாசனை உண்டாகும்.

### தமோகுணம்

இது மேலோங்கும் போது அசுர சம்பத்து உண்டாகும்.

## அசுரசம்பத்து

டம்பம், கர்வம், அடங்காத அகங்காரம், காமம், குரோதம், உலோபம், அவிவிவேகம், நித்திரை, ஆலசியம், பயம், மைதுனம் முதலியனவாம்.

## நான்கு வருணத்தவரின் குணாமியகர்மங்கள்

சத்துவகுணத்துடனும் சமதமாதி கர்மங்களுடனும் உடையவன் பிராமணன்.

சத்துவகுண மிசிரத்துடனும் ரஜோகுணத்துடனும் உள்ளவன் சத்திரியன். இவனது கர்மம் சௌரியமாகும். தாமச குண மிசிரத்துடனும் ரஜோகுணத்துடனும் உள்ளவன் வைசியன். இவனது கர்மங்கள் கிருசியாதி ஆகும்.

ரஜோகுணமிசிரத்துடனும் தாமச குணத்துடனும் உள்ளவன் சூத்திரன். மற்ற மூன்று வர்ணத்தார்களுக்கும் சேவை செய்வது தொழில்.

## கிருபை நான்கு

1. ஈசுவரகிருபை
2. வேதகிருபை
3. குருகிருபை
4. அந்தக்கரணகிருபை

## இலட்சணைகள் மூன்று

1. விட்டலட்சணை
2. விடாதலட்சணை - விசிட்டவாக்கியம்
3. விட்டுவிடாதலட்சணை - அகண்டவாக்கியம்

## பிரியத்துவம் ஆறு

1. திரவியம். 2. புத்திரன்
3. சரீரம். 4. இந்திரியம்
5. பிராணன். 6. ஆத்மா

## பிரளயம் ஐந்து

1. **நித்தியப்பிரளயம்:** சமஸ்த பிராணிகளின் சுழுத்தி.

2. **தினப்பிரளயம்:** பிரம்மதேவருடைய சுழுத்தி.

3. **அவாந்தரப்பிரளயம்:** நான்கு யுகங்களின் ஆதிபத்தியம் வருகிற மட்டும் அவாந்தரப்பிரளயம்.

4. **பிரமப்பிரளயம்:** இதுவே மகாப்பிரளயம் .பிராகிருதப்பிரளயம், மகாசுழுத்தி என்றும் சொல்லப்படும்.

பிரம்மதேவருடைய மத்தியானத்தில் பதினான்கு அவாந்தரப்பிரளயம் வரும். இவைகளுக்கு நைமித்தியப்பிரளயம் என்றும் மநுவாந்தரப்பிரளயம் என்றும் சொல்லப்படும். யுகப்பிரளயமும் இதற்குள் உண்டு.

5. **அத்தியந்தப்பிரளயம்:** முத்தி பெறுவது.

## காண்டத்திரையங்கள் மூன்று

**கர்மகாண்டம்:** வேதபுருஷனுடைய நாபிக்குக் கீழ் சொர்க்கலோக பரியந்தம் கர்மகாண்டம்.

**உபாசனாகாண்டம்:** வேதபுருஷனுடைய நாபிக்குக் மேல் கழுத்துக்குக் கீழ் பிரம்மலோக பரியந்தம் உபாசனாகாண்டம்.

**ஞானகாண்டம்:** வேதபுருஷனுடைய கழுத்துக்கு மேல் சிரசு பரியந்தம் ஞானகாண்டம்.

## மகாவாக்கிய நிரூபகம்

### 1. இருக்குவேதம்:

ஐதரேயஉபநிடதம்-பிரஞ்ஞானப்பிரம்மம்.

### 2. யசுர்வேதம்:

தைத்திரியஉபநிடதம்-அகம்பிர்மாஸ்மி.

### 3. சாமவேதம்:

சாந்தோக்கியஉபநிடதம்-தத்துவமஸி.

### 4. அதர்வணவேதம்:

மாண்டூக்கியஉபநிடதம்- அயம்ஆத்மாபிரம்மம்.

## புராணங்கள் பதினெட்டு

1. பிரம்மபுராணம், 2. பதுமபுராணம்
3. விஷ்ணுபுராணம், 4. சிவபுராணம்

5. பாகவதம், 6. நாரதீயம்
7. மார்க்கண்டேயம், 8. ஆக்னேயம்
9. பௌஷியத், 10.பிரம்மவைவர்த்தம்
11. லிங்கம், 12. வராகம்
13.ஸ்காந்தம், 14. வாமனம்
15.கூர்மம், 16. மச்சியம்
17.காருடம், 18.பிரம்மாண்டம்.

## அவஸ்தாத்திரயங்கள்

வாக்கு - வசனம் - அக்கினி

| ஆதி ஆத்மிகம் | ஆதி பௌதிகம் | ஆதி தெய்வீகம் |
|---|---|---|
| சுரோத்திரம் | சப்தம் | ஆகாசம் |
| தொக்கு | பரிசம் | வாய் |
| சட்சு | ரூபம் | ஆதித்தன் |
| சிங்குவை | ரசம் | வருணன் |
| ஆக்கிராணம் | கந்தம் | அசுவனி |
| பாணி | தானம் | இந்திரன் |
| பாதம் | கமனம் | உபேந்திரன் |
| பாயுரு | விசர்க்கம் | பிரகஸ்பதி |
| மனம் | சங்கற்பம் | சந்திரன் |
| புத்தி | நிச்சயம் | சதுர்முகன் |
| அகங்காரம் | அபிமானம் | உருத்திரன் |
| சித்தம் | தாரணை | சேத்ரஞ்ஞன் |
| தமஸ் | விகாரம் | ஈஸ்வரன் |

இவைகளெல்லாம் கூடி சாக்கிர, சொப்பன சுழுத்தியாகிய அவஸ்தாத்திரயங்களாயிற்று.

## தோஷங்கள் மூன்று

1. **சரீரதோஷம்:** திருட்டு, விபச்சாரம், ஜீவஹிம்சை.

2. **வாக்கின்தோஷம் :** பொய் சொல்லுதல், பிறரை நிந்தித்தல், கடுஞ்சொல் பேசுதல், வீண்பேச்சு.

3. **மனதின்தோஷம் :** இச்சை, சிந்தை, புத்தியின் மந்தத் தன்மை.

## பிராந்திஞானம்

நாயானது பசையற்ற எலும்புத்துண்டைக் கடிக்கும்பொழுது அந்த எலும்பு தனது தாடையில் குத்தியதால் வரப்பட்ட ரத்தத்தை எலும்பிலிருந்து வந்த ரத்தம் போன்று நினைத்து சுவைப்பதாகும்.

## குருவின் தோற்றம்

குரு சிஷ்யனிடத்தில் அன்புடன் இருக்கும்போது ஸ்ரீ ஹரி (விஷ்ணு) ரூபம்.
கோபிக்கும் போது ஹர (சிவ) ரூபம்.

ராஜ்ஜிய விவகாரத்தில் (பிரம்மா) ரூபம்.
சாந்தமாயிருக்கும்போது (கங்கை) ரூபம்.
உபதேசம் செய்யும் போது (சூரியன்) ரூபம்

## அபரவித்தை - பரவித்தை

**அபரவித்தை:** நான்கு வேதங்களும் சிஷை, கற்பம், வியாகரணம், நிருக்தம், சந்தசு, ஜோதிடம் (ஆறங்கங்கள்) இதிகாசங்கள், ஆகியன அபரவித்தையாகும்.

**பரவித்தை** : பூரணமான பரம்பொருளை பரமசிவப்பிரசாதத்தால் அடைவதே பரவித்தையாகும்.

## அந்தரங்கசாதனம் எட்டு

1. விவேகம்
2. வைராக்கியம்
3. சமாதி சட்க சம்பத்தி
4. முமூட்சுத்துவம்
5. சிரவணம்
6. மனனம்
7. நிதித்தியாசனம்
8. தற்பதார்த்த துவம்பதார்த்த சோதனை

# இரண்யகர்ப்பப்பிரமாக்கள் ஒன்பது

1. **சார்வபௌமன்:** யௌவனமாகவும், வித்தை, சுரோகம், திடசித்தம், இவைகள் உடையவனாய் சேனா சமூகங்களோடு கூடி சர்வப் பிருதுவியையும் பரி பாலனஞ் செய்பவன்.

2. **மநுடகந்தர்வன்:** இக்கற்பத்திலேயே மனுடானாயிருந்து புண்ணிய விசேசத்தால் கந்தருவபதத்தை அடைந்தவன்.

3. **தேவகந்தருவன்:** பூர்வகற்பத்திற்செய்த புண்ணியத்தால் இக்கற்பாதியிலேயே கந்தருவனாவான்.

4. **பிதிரர்:** தமதுலகின் கண் நெடுங்காலம் வாசம் பண்ணுகின்ற அக்கினியிற் வாத்தாதியர்.

5. **ஆஜானதேவர்:** கற்பாதியிலேயே தேவத்துவத்தையடைந்தோர்.

6. **கருமதேவர்:** வர்த்தமான கற்பத்தில் அசுவமேதாதி கருமங்கள் செய்து மகத் பதத்தையடைந்து ஆசான தேவர்களால் சேவியராயுள்ளோர். (யமன், அக்கினி).

**7. முக்கியதேவர்:** அஷ்டவசு. துவாத சாதித்தியர், ஏகாதச ருத்திரர் ஆகிய முப்பத்தொருவர்.

**8. இந்திரன் :** தேவர்களின் தலைவன்.

**9. பிருகஸ்பதி:** வியாழபகவான். தேவகுரு.

## சமாதி ஷட்க சம்பத்தி

**சமம்:** மனதை விஷயங்களினின்றும் தடுத்தல்.

**தமம்:** இந்திரியங்களை வெளியில் செல்லாமல் தடுத்தல்.

**சிரத்தை:** வேதம், குருவின் வாக்கியங்களில் விசுவாசம் வைத்தல்.

**சமாதானம்:** மனது சலியாமல் ஸ்திரமாய் இருத்தல்.

**உபராமம்:** தியாகம் செய்தபின் அடையப்பட்ட விஷயத்தில் மறுபடியும் இச்சை உண்டாகாமல் இருப்பது . சாதனசகித சகல கருமங்களையும் விட்டு, விஷமாக எண்ணி விஷயங்களை விட்டு ஓடுதலும், ஸ்திரியை விட்டு வெறுத்தலும்.

**திதிட்சை:** சீதோஷ்ணம், பசி, தாகம் முதலிய துவந்துவங்களைச் சகித்தல்.

## கனிஷ்டபத்தி ஒன்பது

1. சிரவணம், 2. கீர்த்தனம்
3. ஸ்மரணம், 4. பாதசேவனம்
5. அர்ச்சனம், 6. வந்தனம்
7. தாசபாவம், 8. சகாபாவம்
9. ஆத்மநிவேதனம்

## ஆனந்தம் பதினொன்று

1. மானுட ஆனந்தம்
2. மானுட கந்தர்வர்
3. தேவ கந்தர்வர்
4. பிதிர்லோக ஆனந்தம்
5. ஆசானதேவன் ஆனந்தம்
6. கர்மதேவன் ஆனந்தம்
7. முக்கிய தேவானந்தம்
8. இந்திரானந்தம்
9. பிரகஸ்பதி ஆனந்தம்
10. விராட் புருடானந்தம்
11. பிரம்மானந்தம்

## வைராக்கியம் மூன்று

**மந்தம்:** துக்கம் பொறுக்கமாட்டாமல் இந்த சம்சாரம் பொல்லாதது. இதைச் சுடவேண்டுமென்று அந்தக்

காலம் மட்டும் தோன்றுகின்ற யாதொருபுத்தி உண்டோ அது மந்த வைராக்கியம்

**தீவிரம்:** இந்த சம்சாரம் நமக்கு வேண்டாமென்று சொற்பப்புண்ணியத்தினாலே சேருகின்ற யாதொரு திடபுத்தி உண்டோ அது தீவிர வைராக்கியமாம்.

**அதிதீவிரம்:** இது தீவிர தரம் என்றும் சொல்லப்படும். பிரம்மலோகமே கிடைத்தாலும் வேண்டாமென்று கூறுகிற யாதொரு திடபுத்தி உண்டோ அது அதிதீவிர வைராக்கியமாம்.

## லோகங்கள் இரண்டு

**அனாத்துமலோகம்:** மனுஷியலோகம். பிதுர்லோகம், தேவலோகம் என்று மூன்று விதம். இந்த மூன்றுக்கும் சாதனம் முறையே புத்திரன், கர்மம், உபாசனை மூன்றுமாம்.

**ஆத்துமலோகம்:** பிரம்ம சொரூபத்தை அப்பிரதிபந்த அபரோட்சமாக அனுபவிக்க வேண்டுமென்று இச்சையை உடையவன் விவிதிசா சந்நியாசத்தை அடைந்திருப்பவன். இதையே ஜிஞ்ஞாசு சந்நியாசம் என்றும் கூறுவர். தன்னை அறிய இச்சிப்பவன் ஜிஞ்ஞாசு.

# வாசனாக்ஷயம் பதினான்கு

1. சாஸ்திர வாசனை
2. லோக வாசனை
3. தேக வாசனை
4. போக வாசனை
5. காமக்குரோதாதி வாசனைகள்
6. சங்க வாசனை
7. விபரீத வாசனை
8. பிரமாப்பியாச வாசனை
9. அசுத்த வாசனை
10. மமதா வாசனை
11. தத்துவ வாசனை
12. பேத வாசனை
13. அத்தொய்த வாசனை
14. நிர்வாசனை

# சங்கரின் ஒன்பது விதப் பிரதிபந்தங்கள்

1. தியானத்தில் உட்கார்ந்த உடனே சொரூபானு சந்தானம் மறந்து போவது.

2. பிற்பாடு தியானம் செய்து கொள்வோம் என்று சோம்பல் உண்டாவது.

3 போகத்தில் இச்சை உண்டாவது.

4. தூக்கம் வருவது.
5. அந்தகாரம் தோன்றுவது.
6. நாணாவித விஷயங்களைநினைத்து நினைத்து. மனது அலைவதாகிய விட்சேபம் உண்டாவது.
7. வெளிச்சம் தோன்றுவது.
8. வேர்வை உண்டாவது.
9. விலட்சணமாய் ஒரு சொரூபத்தையும் காணோம் என்கின்ற சூனியபுத்தி உண்டாவது.

## ஸ்ரீ சங்கராச்சாரியாரால் விவரிக்கப்பட்ட இயமம் முதலான பதினைந்து சாதனங்கள்

1. இயமம்
2. நியமம்
3. தியாகம்
4. மௌனம்
5. தேசம்
6. காலம்
7. ஆசனம்
8. மூலபந்தம்
9. தேகசமத்தன்மை
10. இலட்சியதிருஷ்டி
11. பிராணாயாமம்
12. பிரத்தியாகாரம்
13. தாரணை
14. தியானம்
15. சமாதி

## அந்தக்கரணத்தின் தோஷங்கள் மூன்று

1. மலம் 2. விட்சேபம் 3. ஆவரணம்

1. நிஷ்காமகர்மத்தினால் மலதோஷம் நீங்கும்.
2. உபாசனையால் விட்சேப தோஷம் நீங்கும்.
3. ஞானத்தினால் ஆவரண தோஷம் நீங்கும்.

## உடலென்னும் இரதம்

| | | |
|---|---|---|
| சரீரம் | - | இரதம் |
| இந்திரியங்கள் | - | குதிரைகள் |
| மனம் | - | கடிவாளம் |
| புத்தி | - | சாரதி |
| ஆத்மா | - | இரதிகன் (ரதத்திற்கு எஜமான்) |

## கேவலம்

ஏகமாவதால், அல்லது முழுதுமாவதால், அல்லது நிச்சயமாயிருத்தலால், அல்லது ஞானமாயிருத்தலால், அல்லது சுத்தமாயிருத்தலால் கேவலம் எனப்படும்.

## விபூதி

(இது ஜாபாலி உபநிஷத்தில் உள்ளது)

விபூதி தாரணத்தைப் பற்றி ஜபாலியை பிப்பலாதர் கேட்ட கேள்விக்கான விவரணம்.

விபூதி அனுஷ்டான மந்திரங்களை உபாசித்துத் தரித்தால் மோட்சம் கிட்டும். விபூதி அணிந்தவனுக்கு மறு பிறப்பில்லை. மூன்று கோடுகளில் முதல் கோடு கார்ஹபத்ய அக்னி. உள்கோடு தட்சிணாக்கினி. மூன்றாம் கோடு ஆஹவனீய அக்னி. இதைத் தறித்தவன் சகல மந்திர ஜபம், ருத்ர ஜபம் செய்தவன் ஆகிறான். மேலே சொன்ன மூன்று கோடுகளும் "ஸத்யம்" உருவமாக ஆகிறது.

## கூடஸ்தன்

கூடம் - கொல்லனின் அடைகல் (உலைக்கூடத்தில் காய்ச்சிய இரும்பை சம்பட்டியால் அடிக்கும்பொழுது தாங்கக்கூடிய இரும்பு). நிர்விகார ரூபமாயித்தலால் கூடஸ்தன். மித்தையாகிய புத்தியும், சிதாபாசனும் கூடஸ்தன். இவைகளில் அசங்க ரூபமாக இருப்பவன் கூடஸ்தன்.

## விமலம்

மலமற்றது, மலமூத்திராதி, மலம் பொருந்திய பிருதிவி. கலங்கல், புகை, புழுதி முதலான மலம் பொருந்திய மற்ற நான்கு பூதங்கள். கோழை, சளி, பித்தம், மலம், மூத்திர முதலான மலமுடைய தூல தேகம். காச படலம், காமக் குரோத முதலான மலமுடைய லிங்க தேகம். ஞான அஞ்ஞான மலமுடைய சீவன். பஞ்ச கிருத்தியாதி மலமுடைய ஈசுவரன் இவைகளுக்கு வேறாக யாதொரு மலமுமற்று பிரகாச ஞானனந்த வடிவமாதலின் விமலமாம்.

## விபு

சகலப் பிரபஞ்சாகாரராகவும், இரண்யகர்ப்பாதி விவித தேவராகவும், நாநாவிதமாக உண்டாகின்றதால் விபு. அன்றியும் சர்வத்திர பரிபூரணராகவும், லோக நாயகராகவும் இருப்பதால் விபு என்பதாம்.

## தத்துவம்

தத்துவம், அமிர்தம், சத்தியம், பரமார்த்தம், யது, தது, துவம் இவ்வேழு சப்தங்களும் பரமார்த்த சத்தாயிருக்கின்ற பிரம்மத்தை உணர்த்துகின்றதால் தத்துவமாம்.

# ஜனனமும் / மரணமும்

எண்ணை, ஆதாரம், திரி, அக்னி இவற்றின் சேர்க்கையானது எதுவரை காணப்படுகிறதோ அதுவரை தான் ஜோதிஸ்ஸுக்கு தீபத்தன்மை ஏற்படுகிறது. இதுபோல எண்ணை ஸ்தானத்தில் கர்மமும், ஆதாரமாகிய அதிஷ்டான ஸ்தானத்தில் மனதும், திரி ஸ்தானத்திலும், அக்னி ஸ்தானத்திலும் சைதன்யாத்தியாஸமும், தீப ஸ்தானத்தில் சம்சாரமும் உள்ளன. தேகம் காரணமாகவே சம்சாரமானது ஆத்மாவுக்கு ஏற்படுகிறது. ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற குணத்ரைய ஸம்சர்க்க ரூபமான உபாதியினாலேயே ஆத்மாவுக்கு ஜனனமும், மரணமும் ஏற்படுகிறது.

# பரப்பிரம்மம்

சத்திய ஞானானந்தம் பிரம்மமென்னும் சுருதியாலும், விஷ்ணு புராணத்தில் சஜாதீய, விஜாதீய, சுவகதபேத, ரகிதமாகவும், மனம் வாக்குக்கு அகோசரமாகவும், சத்திய ஞான சுக மாத்திரமாகவும், சுயம்பிரகாச சுவேத்தியமாகவும் இருக்கிற ஞானம் மாத்திரம் பிரம்மம் என்று நிர்ணயித்ததால் பரப்பிரம்மமாம்.

## அசலம்

வீடு, ஊர், தேசம் இவைகளில் ஒன்றை விட்டு மற்றொன்றில் அலைகின்ற ஸ்தூல தேகம், உலகங்களில் ஒன்றிலொன்றில் அலைகின்ற லிங்கதேகம், காரணதேகங்களோடு பிருதிவியை வளையமாகச் சுற்றியலைக்கின்ற அப்பு, அக்னி, இவைகளை அலைக்கின்ற வாயு, இவைகட்கு இடமாயுள்ள ஆகாசம் இன்னும் பௌதிக சமஷ்டியோடு கூட இவையனைத்தையும் உடலாகக் கொண்டு அறிவுனுள்ளே அலைகின்ற ஈசுவரனும், அதிவேகமாக ஆகாயத்தில் கருடன் போலப் பத்துத் திக்கினும் நூறு கோடி கற்பங்களோடி அளவிட வேண்டுமென்று பார்க்கினும், அளவு காணக் கூடாததாய் அங்கங்கே சாட்சியாய் அசைவற்றிருக்கிறதால் அசலம் ஆகும்.

## வேதாந்தம்

வேதங்களின் உண்மையான முடிவைத் தெரிவிப்பது வேதாந்தம். அதை அனுசரிப்பவர்கள் வேதாந்திகள். அவர்களுக்கு வேதங்களும் உபநிஷெந்தங்களுமே ஆதாரம். வேதத்தின் முக்கிய கருத்து "உள்ளது ஒன்று. அதுதான் பிரம்மம்" என்பதாம். ஒன்றே உள்ளதானால் நானாவித பேதங்கள் அடங்கிய இவ்வுலகம் தோன்றக் காரணம் என்னவெனில் அவித்தையே (மாயையே) காரணம் எனக் கூறுகிறது சுருதி. இந்த அவித்தையினால் தான் மனிதன்

# பிரபஞ்சம் பொய்

கானல் நீர், கிளிஞ்சல் வெள்ளி, கந்தர்ப்ப நகர், கனாவூர், வானமை, கயிற்றில் பாம்பு, மலடி சேய், முயலின் கோடு (முயற் கொம்பு), கட்டையில் கள்வன் ஆகியன உண்மையில் இருப்பதுபோல் தோன்றினாலும் உண்மையல்ல. அதுபோல இந்தப் பிரபஞ்சமும் பொய்யென்று ஞானிகள் கூறுவர்.

# பரமார்த்தம்

சொப்பனம் அபரமார்த்தம். ஜாக்கிரம் பரமார்த்தம். ஜாக்கிரத்தின் கண்ணும் மின், மேகம் அபரமார்த்தம். மற்றையவை பரமார்த்தம். இவற்றுள்ளும் தேகம் முதலிய இவ்வுலக வஸ்துக்கள் அபரமார்த்தம். சொர்க்கம் முதலியன பரமார்த்தம். இவற்றினும் பிரம்மலோகம் பரமார்த்தம் என்று இவ்வாறு தார தம்மியமாகக் கூறும் சக சீவ பரங்கள் முழுவதும் ஆராயும்காலையில் பரமார்த்தம் ஆகாமையின், சர்ப்பாதிக்கு இரச்சுவாதி போலத் தான் பரமார்த்த ரூபமாதலானும், தனக்கு அழிவு வந்து வேறொரு வஸ்து பரமார்த்தம் ஆகாமையினாலும் பரமார்த்தம் என்பதாம்.

சச்சிதானந்த சொரூபம் என்பதை மறந்து, தான் வேறு, பிரம்மம் வேறு, ஈசுவரன் வேறு, உலகம் வேறு, ஜீவன்கள் வேறு என்னும் பேத ஞானத்தை அடைந்து, தான் இல்லாததை தனது என்று பிரமித்து சம்சாரக் கடலில் ஆழ்ந்து துக்கமுறுகிறான். காண்பான், காட்சி இவைகள் இரண்டும் சத்தியமில்லை. காண்பவனே சத்தியம். காட்சிகள் இவனிடம் கற்பிதம். பேத ஞான நிவர்த்தியையே வேதாந்தம் உபதேசிக்கிறது.

## த்ரிவித வினைகள்

சஞ்சிதம் என்பது பழவினை. பிராரத்தம் என்பது ஊழ்வினை. அதாவது சஞ்சிதம் என்ற களஞ்சியத் தாணியத்தில் அனுபவிப்பதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட ஒரு சிறு பகுதி. ஆகாமியம் என்பது பிராரத்தைப் புசிக்கும் போதே அதன் விளைவாகச் செய்து ஈட்டப்படும் வினை. இருவினைப் பயனாய் நிற்கும் சஞ்சிதத்தைச் சூக்கும கன்மம் என்றும், புண்ணிய பாவங்களுக்குப் பலனாக வரும் இன்பமும், துன்பமும் பிராரத்தத்தை அதிசூக்கும கன்மம் என்றும், இருவினையாகிய ஆகாமியத்தைத் தூல கன்மம் என்றும் கூறுவர். இதில் ஆகாமியமும், சஞ்சிதமும் குரு கிருபையாலும், ஞானத்தாலும் சுட்டெரிக்கப்படும். பிராரத்தமாகிய சம்ஸ்காரங்கள் அனுபவித்துத்தான் தீர்க்கப்பட வேண்டும்.

## சுழுத்தியில் ஆனந்தம்

**1) சகுனி** என்று அழைக்கப்படும் இராஜாளிப் பறவையானது கம்பத்தில் கயிற்றினால் கட்டப்பட்டிருந்த போதிலும், தனது தேவைகளை முன்னிட்டு சுற்றித் திரிந்த போதிலும் பின்னர் கட்டப்பட்ட கம்பத்திற்கே வந்து சேர்ந்து ஆனந்தமடையும்.

**2. சேனம்** என்று அழைக்கப்படும் பருந்தானது மிக உயரத்தில் தனது தேவைகளுக்காகப் பறந்து திரிந்து, பின்னர் தனது கூட்டை நோக்கி மிக வேகமாக வந்து சேர்ந்து ஆனந்தம் அடையும்.

**3. குழந்தையானது** தாய்ப்பாலை நிரம்பக் குடித்து ராகத்துவேஷம் என்று சொல்லக்கூடிய சயனித்த நிலையிலேயே ஆனந்தம் அடையும்.

**4. மகாராஜன்** தான் ஆட்சி செய்வதற்கு இனி ஏதும் இடமில்லை என்ற நினைப்பில் சதாகாலமும் இருந்து ஆனந்தம் அடைவான்.

**5. மகாப்பிராமணன்** கற்க வேண்டியன எல்லாம் கற்று, இனி கற்பதற்கு ஒன்றுமில்லை என்ற நிலையில் நான் கிருதகிருத்தியன் ஆகின்றேன் என்னும் வித்தியானந்தத்தில் மூழ்கி பரமானந்த சொரூபமான ஆனந்தம் அடைவான்.

# வித்தைகள் பதினாறு

**1. மாயா சம்பிரதம் :** ஓர் இடத்தில், ஊர் போல, வனம் போல, மலை, நதி போலத் தோற்றுவித்தல்.

**2. தத்துவ சம்பிரதம் :** ஒரு பூதத்தில், ஒரு பூதம் தோற்றுவித்தல். இதனை மகேந்திர ஜாலம் என்றும் சொல்வர். (உ-ம்) பூமியைத் தண்ணீர் போல ஆக்குவது.

**3. யோகினி ஜாலம் :** மயானத்தில் உபாசித்து யோகினிகளைக் காண்பிப்பது.

**4. மாலினி வித்தை :** சமுத்திரங்களைக் கடப்பது.

**5. மகா சம்மோகநம் :** விழித்திருக்கின்றவர்களை மெய் மறந்து தூங்கச் செய்தல்.

**6. மநோ பேதம் :** மனத்தைப் பேதலிக்கச் செய்வது. (பைத்தியமாக்குதல்).

**7. தந்திர பேதம் :** ஓரிடத்தும் வெளிப்படாத மந்திரத்தை (எந்திரத்தை) வெளிப்படச் செய்வது.

**8. குய்ய தந்திரம் :** வெளிப்பட்டதை மறைப்பது.

**9. கலாவாதம் :** மன்மத வித்தை.

**10. கலாசாரம் :** வர்ணத்தை அதிகப்படுத்துவது (மாற்றுதல்).

**11. குண்டிகா மதம் :** குளிகையினாலேஇளமை அடைவது.

**12. அஞ்சன (மை) வித்தை :** மறைபட்ட பொருள்களைக் காண்பித்தல்.

**13. பாதுகை :** செருப்பைத் தொட்டு நினைக்கில் நினைத்த இடத்தில் விடுவது. **14. பாகுபாத்திரம் :** ஒரு குடத்திற்குள் நினைத்த பாணங்களையெல்லாம் (இரசங்கள்) தருவது.

**15. பரகாயப்பிரவேசம் :** பிராணன் இல்லாத (இறந்த சரீரத்தில்) உடம்பில் புகுவது.

**16. இரசவாதம் :** உலோகத்தை தங்கமாக்குதல்.

## ஆயக் கலைகள் அறுபத்தி நான்கு

1. அட்சர லட்சணம்
2. கணிதம்
3. வேதம்
4. புராணம்
5. வியாகரணம்
6. நீதி சாஸ்திரம்
7. ஜோதிட சாஸ்திரம்
8. தர்ம சாஸ்திரம்
9. யோக சாஸ்திரம்
10. மந்திர சாஸ்திரம்
11. சகுந சாஸ்திரம்
12. இற்ப சாஸ்திரம்
13. வைத்திய சாஸ்திரம்
14. ரூப சாஸ்திரம்
15. இதிகாசம்
16. காவியம்
17. லிகிதம்
18. அலங்காரம்
19. மதுரபாடனம்
20. நாடகம்
21. நிருக்தம்
22. சப்தப் பிரம்மம்
23. வீணை
24. வேணு
25. மிருதங்கம்
26. தாளம்
27. அஸ்திரபரீட்சை
28. கநக பரீட்சை
29. ரத பரீட்சை
30. கஜ பரீட்சை
31. அசுவ பரீட்சை
32. ரத்ன பரீட்சை

33. பூமி பரீட்சை
34. சங்கிராம விலட்சணம்
35. மல்யுத்தம்
36. ஆக ருஷணம்
37. உச்சாடணம்
38. வித்வேஷணம்
39. மதன சாஸ்திரம்
40. மோகனம்
41. வசீகரணம்
42. ரசவாதம்
43. காந்தருவ வாதம்
44. பைரவ வாதம்
45. கௌத்துவ வாதம்
46. தாது வாதம்
47. காருடம்
48. நஷ்டம்
49. முஷ்டி வாதம்
50. ஆகாயப்பிரவேசம்
51. ஆகாய கமணம்
52. பரகாயப் பிரவேசம்
53. அதிரிசயம்
54. இந்திரஜாலம்
55. மகேந்திர ஜாலம்
56. அக்கினி ஸ்தம்பம்
57. ஜல தம்பம்
58. வாயு ஸ்தம்பம்
59. திருஷ்டி ஸ்தம்பம்
60. வாக் ஸ்தம்பம்
61. சுக்ல ஸ்தம்பம்
62. கந்த ஸ்தம்பம்
63. கடக ஸ்தம்பம்
64. அவஸ்தைப் பிரயோகம்

# பிரஹ்ம நாமாவளி (108)

1. நிர்விகாரி
2. ஞானவடிவன்
3. அசங்கன்
4. சுயம்பிரகாசன்
5. சொப்பிரகாசன்
6. ஆநந்த ரூபன்
7. சத்யன்
8. நிஷ்க்கிரியன்
9. முக்தன்
10. அகர்த்தா
11. அபோக்தா
12. நிருபத்திரவன்
13. நிர்லேபன்
14. நிர்ச்சம்பந்தன்
15. கூடஸ்தன்
16. ஆத்மா
17. நிர்த்தோஷன்
18. அப்பிரமேயன்
19. பிரத்தியக்ஷன்
20. அணு
21. அசரீரன்
22. நிரிந்திரியன்
23. அப்பிராணன்
24. அமநசன்
25. நிர்மலன்
26. சுத்தன்
27. புத்தன்
28. சர்வக்ஞன்
29. பரமாநந்தன்
30. சம்பு
31. அசலன்
32. நிர்க்குணன்
33. நிருவிகற்பன்
34. நிராகாரன்
35. நித்திய முக்தன்
36. அநாதி முக்தன்
37. அச்சுதன்
38. க்ஷேத்திரக்ஞன்
39. மநோவாசாமகோசரன்
40. அவ்யாகிருதன்
41. அக்ஷரன்
42. திருக்
43. பிரத்தியக்
44. சிந்மாத்திரன்
45. சத்து
46. நிரீசுவரன்
47. நிர்ஜ்ஜீவன்
48. நிஷ்ப்பிரகிருதி
49. அசம்சாரி
50. நிர்ப்பத்தன்
51. நிரவயவன்
52. அபரோக்ஷன்
53. சுவயம்
54. அகேயன்

55. அநுபாதேயன்
56. அப்பிரவிருத்தன்
57. சிவன்
58. அமிர்தன்
59. நிரூபன்
60. சாந்தன்
61. அபயன்
62. நித்தியாநந்தன்
63. நிர்விஷயன்
64. அநூதநன்
65. புராதநன்
66. சூந்யன்
67. மகா சூந்யன்
68. நிவர்த்தன்
69. அகாமன்
70. அலோபன்
71. உந்நதன்
72. அக்குரோதன்
73. நித்தியன்
74. சர்வகதன்
75. சர்வாதாரன்
76. நிராதாரன்
77. ஆதி
78. அநாதி
79. விபு
80. மகத்
81. நிரஞ்சநன்
82. காரணன்
83. அகாரணன்
84. சாக்ஷி
85. ஸ்தாணு
86. பரிபூரணன்
87. அநந்தன்
88. சர்வ சமன்
89. சர்வாதிஷ்டாநன்
90. அகண்டன்
91. அபரிச்சிந்நன்
92. அநாவிருதன்
93. சர்வ காரண
94. பிரம்மம்
95. யதார்த்தவஸ்து
96. சர்வாத்மா
97. சர்வாகாரன்
98. அநேக ரூபன்
99. ஏக ரூபன்
100. பரமார்த்தன்
101. வஸ்து
102. நிஷ்ப் பிரபஞ்சன்
103. நாநா ரூபன்
104. அபேதன்
105. நிர்விசேஷன்
106. அத்வைதன்
107. சர்வாபாவன்
108. சர்வதோ முகன்

## கோயிலூர் மடத்துச் சம்பிரதாயப்படி பாடம் நடத்தும் பதினாறு நூல்கள்

| வரிசை எண் | வேதாந்த நூல்களின் பெயர்கள் |
|---|---|
| 1 | நாநா ஜீவவாதக் கட்டளை |
| 2 | கீதாசாரத் தாலாட்டு |
| 3 | சசிவன்ன போதம் |
| 4 | மகாராசா துறவு |
| 5 | வைராக்கிய தீபம் |
| 6 | வைராக்கிய சதகம் |
| 7 | இலட்சணாவிருத்தி |
| 8 | வேதாந்த சூடாமணி |
| 9 | கைவல்லிய நவநீதம் |
| 10 | விவேக சூடாமணி |
| 11 | அஞ்ஞவதைப் பரணி |
| 12 | பஞ்சதசி |
| 13 | ஈசுவரகீதை |
| 14 | பகவத் கீதை |
| 15 | பிரம்ம கீதை |
| 16 | ஞான வாசிட்டம் |

## ஞான சாதன சோபான படிக்கட்டு




நிதித்தியாசனம்

மனனம்

சிரவணம்

முமூட்சுத்துவம்

சமாதி ஷட்க சம்பத்து

இகமுத்திரார்த்த பலபோக விராகம்

நித்தியாநித்திய வஸ்து விவேகம்

## பஞ்ச தன்மாத்திரைகள்




வாயு (காற்று)

ஆகாயம்
↓
வாயு
↓
அக்கினி
↓
அப்பு
↓
பிருதிவி



↓ சப்த
↓ ஸ்பரிச
↓ ரூப
↓ ரச
↓ கந்த

அக்கினி





அப்பு (நீர்)



பிருதிவி (மண்)

(இவை அனைத்தும் விட்சேபத்திலிருந்து தோன்றியவை)

# தூல, சூட்சும தத்துவ விளக்கம்




தலை முதல் பாதம் வரை - 6

1. வாக்கு, சிங்குவை
2. உதானவாயு, மனது
3. பிராணவாயு, புத்தி
4. சமானவாயு, சித்தம்
5. அபானவாயு, பாயுரு
6. வியானவாயு,

அகங்காரம், துவக்கு

7. உள்ளம்
8. சட்ச்சு
9. சுரோத்திந்திரியம்
10. கிராணேந்திரியம்
11. பாணி
12. பாதம்
13. உபஸ்தம்

**குறிப்பு :**

சூட்சும தத்துவங்கள் .20

| | |
|---|---|
| அந்தக்கரணங்கள் | - 5 |
| ஞானேந்திரியங்கள் | - 5 |
| வாயுக்கள் | - 5 |
| கருமேந்திரியங்கள் | - 5 |
| | 20 |

தூல தத்துவங்கள் - 6

| | |
|---|---|
| சர்மம் | - 1 |
| உதிரம் | - 1 |
| மாம்சம் | - 1 |
| சனாயு | - 1 |
| அத்தி | - 1 |
| மஜ்ஜை | - 1 |
| | 6 |

## பஞ்சீகரணம் (ஸ்தூல பூதங்கள்)

| ஆகாயம் | வாயு | அக்கினி | அப்பு | பிருதிவி |
|---|---|---|---|---|
| நிஜகுணம்: சப்தம்<br>காரணகுணம்: இல்லை<br>அதிருசியம்:<br>ஸ்பரிசம், ரூபம், ரசம். கந்தம் | நிஜகுணம்: ஸ்பரிசம்<br>காரணகுணம்: சப்தம்<br>அதிருசியம்:<br>ரூபம். ரசம். கந்தம் | நிஜகுணம்: ரூபம்<br>காரணகுணம்:<br>சப்தம். ஸ்பரிசம்<br>அதிருசியம்:<br>ரசம். கந்தம் | நிஜகுணம்: ரசம்<br>காரணகுணம்:<br>சப்தம். ஸ்பரிசம் ரூபம்<br>அதிருசியம்:<br>கந்தம் | நிஜகுணம். கந்தம்<br>காரணகுணம்:<br>சப்தம். ஸ்பரிசம் ரூபம். ரசம்<br>அதிருசியம்:<br>இல்லை |

| | | | | |
|---|---|---|---|---|
| சப்தம் | ஸ்பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம் |
| சப்தம் | ஸ்பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம் |
| சப்தம் | ஸ்பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம் |
| சப்தம் | ஸ்பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம் |

**குறிப்பு : பஞ்சீகரண விளக்கம்.** தமோம்சமாயிருக்கின்ற ஐந்து பூதங்களையும் ஒவ்வொன்றை இரண்டிரண்டாகப் பகுத்து முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்கு நான்காகப் பகுத்து இரண்டாம் பாதி ஐந்தில் தன்னம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்கு பூதங்களுடன் அரைக்கால், அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது பஞ்சீகரணமென்று சொல்லப்படும்.

ஐந்து பூதமும் பத்தாக்கி யவைபாதி நன்னான்காக்கி - நாநா ஜீவவாதக் கட்டளை
நந்து தம்பாதிவிட்டு நான்கொடு நான்கும் கூட்ட
வந்தன தூலபூத மகாபூதம் அவற்றினின்றுந்
தந்தன நான்காந் தூலதநுவண்ட புவந போகம்.
- கைவல்லியநவநீதம்.

## சீவனுக்குரிய ஏழு அவஸ்தைகள்

| | | |
|---|---|---|
| 1 | **அஞ்ஞானம்** | சிதாபாசன் அநாதி சம்சாரத்தில் அழுந்தி தன்னுடைய சுபாவத்தை விசாரியாமல் உபேட்சித்திருக்கிறதே **அஞ்ஞானமாம்.** |
| 2 | **ஆவரணம்** | அமார்க்கத்திலே விசாரித்து, ஆத்மா உண்டோ இல்லையோ? அப்படி ஆத்மா ஒன்று இருந்தால் அதன் தோற்றம் தெரிந்திருக்காதோ? அப்படி ஒன்றும் காணாததால் இல்லையென்கிறதே **ஆவரணமாம்.** இது மறைப்பு என்றும் பொருள்தரும். |
| 3 | **விட்சேபம்** | சரீரத்திரயத்தையும் சிதாபாசனையும் தானாகக் கண்டதே **விட்சேபம்.** தோற்றம் என்றும் பொருள் கொள்ளப்படும். |
| 4 | **பரோட்சம்** | ஆப்தன் (குரு) உபதேசத்தால் பிரம்மம் உண்டென்று அறிகிறதே **பரோட்சஞானம்.** |
| 5 | **அபரோட்சம்** | வேதாந்த விசாரத்தினால் அந்தப்பிரம்மம் நானென்று அறிகிறதே **அபரோட்சஞானம்.** |
| 6 | **துக்கநிவர்த்தி** | நான் கர்த்தா போக்தாவல்லவென்று போனதே **துக்கநிவர்த்தி.** |

| | |
|---|---|
| **7 தடையற்ற ஆனந்தம்** | செய்யத்தக்கதெல்லாம் செய்து முடிந்தது. அடைய வேண்டியதெல்லாம் அடைந்து முடிந்தது என்கிற சந்தோசமே <u>தடையற்ற ஆனந்தம்.</u> |

**குறிப்பு :**

1. பிரமமாம் தனை மறந்த பேதைமையே அஞ்ஞானம்
   பரநிலை காணோமென்று பகர்தல் ஆவரணமூடல்
   நரனொருகருத்தாற் சீவன் நானெனமுளைத்ததோற்றம்
   குரவன் வாக்கியத்தாற் தன்னைக் குறிக்கொளல்
   பரோட்சஞானம்!

2. தத்துவ விசாரஞ்செய்து சகலசந்தேகமும் போய்
   அத்துவிதந் தானாதல் அபரோட்சஞானமாகும்
   கர்த்தனாஞ் சீவபேதங்கழிவதே துக்கம் போகல்
   முத்தனாயெல்லாம்செய்து முடிந்ததானந்தமாமே!

**- கைவல்லிய நவநீதம்.**

# தேவ அயன மார்க்கம்

**குறிப்பு :**

தேவ அயன மார்க்கம் ஞான ரூபப் பிரகாசத்தின் அதிகத் தன்மையுடைய அக்கினியாதி தேவதைகளோடும் கூடினதாயும், பிரகாச ரூப சகுனப்பிரம வித்தையினால் அடையப்படுவதாயும், பிரகாச மயமான உலகங்கள் அனேகங்களை உடையதாயும், சொப்பிரகாசமான பிரமத்தின் பிராப்திக் கேதுவாதலால் உத்கிருஷ்டமாயும் ஞான ரூபப்பிரகாசமாயும் இருக்கின்றது. இது சுக்கிலபட்சமென்றும் சொல்லப்படுகிறது.



# பிதிர் அயன மார்க்கம்

**இஷ்டம், பூர்த்தம், தத்தம்** என்னும் மூவகைக் கர்மங்களைச் செய்கின்றவர் காமிய (கர்மிய) புருஷராவார். இவர் தான் இறந்த பிறகு சந்திர லோகத்தில் (சுவர்க்க லோகத்தில்) தான் செய்த கர்மங்களின் சுகரூபப் பயனை அடைந்து. அக்கர்மங்கள் நசித்த பின்னர். மீண்டும் பிறப்பர். இந்தப் பிதிர் அயன மார்க்கம் ஆவிருத்திக்கு (ஜனனத்திற்கு) ஏதுவான மார்க்கமாகும்.

**இஷ்டம்** : அக்கினி ஹோத்திராதி கர்மங்கள்.

**பூர்த்தம்** : வாவி. கூபம். தடாகம். தர்மசாலை முதலிய கர்மங்கள்

**தத்தம்:** சத்துவகுணத்துடன் பசு. சுவர்ணம் முதலிய பொருட்களைத் தானம் செய்தல்.

இந்தப் பிதிர் அயன மார்க்கம் ஞான ரூபப் பிரகாசம் இன்மையால் தமோமயமாயும். அப்பிரகாசரூபமான தூமம். இராத்திரி முதலியவைகளோடு கூடினதாயும். மீண்டும் சம்சாரத்திற்கு ஏதுவாதலால் நிகிருஷ்டமாயும் இருத்தலால் இது கிருஷ்ணபட்சமென்றும் சொல்லப்படுகிறது.



# ஞான சத்த பூமிகள்

| | |
|---|---|
| 7 | துரியம் |
| 6 | பதார்த்தபாவனை |
| 5 | அசம்சத்தி |
| 4 | சத்துவாபத்தி |
| 3 | தநுமாநசி |
| 2 | விசாரணை |
| 1 | சுபேச்சை |

துர்ச்சங்க நிவர்த்தி வந்து சிவஞானம்
விரும்புவது **சுபேச்சையாகும்.**
நற்சங்க மொழிவினவி ஞானநூல்
பழகல் **விசாரணையாம்** நம்பி
முற்சங்க வேடனைகள் விடற்
**தநுமாநசி** யிந்த மூன்றினாலும்
சற்சங்க மநதிலுண்மையறிவுதித்தல்
- சத்துவாபத்திதானே

தத்துவத்தின் மநமுறைத்து மித்தையெலாம் மறத்தல்
அசம்சத்தியாகும்
அத்துவிதானந்தம் வரும் திரிபுடி போம்
பதார்த்தபாவனையதாகும்
வத்துநிலை யிருந்தபடியிருந்த மவுந சுபாவந்
துரியமாகும்
இத்துரிய பூமியை முன்துரியா தீதப் பதமென்றதுவுங்
கேளாய்
-கைவல்லிய நவநீதம்

## தத்துவங்கள். 36.

ஆகாசாதி பூதங்கள் - 5

(ஆகாயம், வாயு, அக்கிநி, அப்பு, பிருதிவி)

தூல சரீர தத்துவங்கள் - 6

(சர்மம், உதிரம், மாம்சம், சனாயு, அத்தி, மஜ்ஜை)

சூட்சும சரீர தத்துவங்கள் - 20

(ஞானேந்திரியங்கள் 5, அந்தக்கரணங்கள் 5, வாயுக்கள் 5, கர்மேந்திரியங்கள் 5.)

காரண சரீர தத்துவங்கள் - 2

(மாயை, அவித்தை)

காரண சரீரத்தில் பிரதிபிம்பித்த தத்துவங்கள் - 2

(சீவன், ஈசுவரன்)

அதிஷ்டான சைதந்நியம் - 1

(பிரமம்)

ஆக தத்துவங்கள் 36

- நாநா ஜீவவாதக் கட்டளை.

- ஓம் தத் ஸத் -



சுவாமி ஆத்மானந்தா

சுவாமி அவர்கள் தலைமை ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். அவர்கள் கிரகஸ்தாஸ்ரமத்தில் இருந்த பொழுதே ஆத்ம ஞானி என்ற பெயரைப்பெற்று. அதற்கேற்றபடி எப்பொழுதும் அனுபூதி நிலைமையிலேயே வாழ்ந்தவர். நிஷ்காமியமாகவே அவர் தமது கர்மங்களைச் செய்து வந்தவர்.

சிவகங்கை மாவட்டம், மானாமதுரையில் இராமசாமி, பொன்னழகு அம்மாள் இவர்களின் மூத்த புதல்வனாக அவதரித்து, இல்லறத்திற்காக தெய்வானையம்மாள் என்பவருடன் வாழ்ந்திருந்து, " பழம் பழுத்தால் மரத்தில் இருக்காது " என்பது போல வேதாந்தம், தத்துவம் படித்து மானாமதுரையிலேயே நாராயணசாமி வேதாந்த மடத்தில் துறவு பூண்டு அங்கேயே துறவியாகிவிட்டவர். ஆத்மானந்தா என்ற தீட்சா நாமத்தையும் பெற்றார். இந்தியா முழுவதும் பல புனிதத் தலங்களுக்குச் சென்று வந்தவர்.

சதா சர்வ காலமும் தான் ஒரு பிர்மஞானி என்பதிலேயே லயித்திருப்பவர். சொல்லிலும், செயலிலும் அப்படியே வாழ்ந்து வருபவர். அவர் எங்களைப் போன்ற பல ஆன்மீக அன்பர்களின் வாழ்க்கைப் பாதையைச் செம்மைப்படுத்தி, எங்களுக்கெல்லாம் சிறந்த, ஒப்பற்ற வழிகாட்டியாக வாழ்ந்து வருகிறார்.

அவர்களின் ஞான ஒளியில்
வாழ்ந்து வரும் அன்பர்கள்